தமிழ்நாடு அரசு கீழ்த்திசைச் சுவடிகள் வரிசை எண் 76



# இடங்கை வலங்கையர் வரலாறு

பதிப்பாசிரியர்


**டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன்,**
காப்பாட்சியர்,
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை-5


பொதுப்பதிப்பாசிரியர்


**நடன. காசிநாதன்,**
இயக்குநர்,
தொல்பொருள் ஆய்வுத்துறை சென்னை-113





தமிழ்நாடு அரசு
1995

தமிழ்நாடு அரசு கீழ்த்திசைச் சுவடிகள் வரிசை எண் 76



# இடங்கை வலங்கையர் வரலாறு

பதிப்பாசிரியர்

**டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன்,**

காப்பாட்சியர்,

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை-5

பொதுப்பதிப்பாசிரியர்

**நடன. காசிநாதன்,**

இயக்குநர்,

தொல்பொருள் ஆய்வுத்துறை சென்னை-113



*1995*

முதற் பதிப்பு 1995
பிரதிகள் 1000

இடங்கை வலங்கையர் வரலாறு



பதிப்பாசிரியர் :

டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன்
காப்பாட்சியர்
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்
சென்னை-5

பொதுப்பதிப்பாசிரியர் :

நடன. காசிநாதன்,
இயக்குநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை

விலை : ரூ.

வெளியீடு :

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்
சென்னை-5

அச்சிட்டோர் :

தொல்பொருள் ஆய்வுத்துறை
தரமணி
சென்னை-113

TAMILNADU GOVERNMENT
ORIENTAL MANUSCRIPTS SERIES No. 76




# IDANGAI VALANGAIYAR VARALARU

*Editor :*
Dr. S. SOUNDARAPANDIAN,
Curator,
Government Oriental Manuscripts Library, Madras-5.

*General Editor :*
NATANA. KASINATHAN,
Director
Department of Archaeology Madras-113.

First Edition 1995
No. of Copies : 1000

IDANGAI VALANGAIYAR VARALARU



Editor :
Dr. S. Soundarapandian
Curator
Government Oriental Manuscripts Library
Madras - 5

General Editor :
Thiru Natana. Kasinathan
Director
Department of Archaeology

Price : Rs.

Published by :
Government Oriental Manuscripts Library
Madras - 5

Printed at :
Department of Archaeology
Tharamani, Madras - 113

# பொதுப்பதிப்பாசிரியரின் முன்னுரை

அரசினர் கீழ்த்திசைச்சுவடிகள் நூலகத்தில் இதுவரை அச்சில் வெளிவராத பல அரிய சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இத்தகைய சுவடிகள் தமிழ், தெலுங்கு, வடமொழி மற்றும் பிற மொழிகளில் அமைந்துள்ளன. இந்நூலகத்தில் 71,180 சுவடிகள் தற்போது உள்ளன. தொல்பொருள் ஆய்வுத்துறையின் கீழ் இந்நூலகம் இயங்கி வருகின்றது.

இதுவரை அச்சில் வெளிவராத இடங்கையர், வலங்கையர் வரலாறுகள் இந்நூலில் இடம் பெறுகின்றன. இடங்கை வலங்கைப் பிரிவுகள் சமுதாய நோக்கில் நன்கு ஆயத்தகுந்தவை. இவ்வகையில் ஆய்வுலகுக்கு இது ஒரு இன்றியமையாத நூலாக வெளிவருகின்றது.

பழங்காலத்தில் இருந்த பல வகுப்புப் பிரிவுகளின் ஆய்வுகள் இக்காலச் சமுதாய ஒற்றுமைக்கு வழிவகுக்கும்; இந்நோக்கிலேயே இந்நூல் வெளியிடப்படுகின்றது.

தமிழ்நாடு அரசு அச்சில் வெளிவராத சுவடிகளை அச்சிட்டு வழங்குவதில் தொடர்ந்து ஆர்வம் காட்டி வருகின்றது.

சுவடிகளிலிருந்து இந்நூலைப் பதிப்பித்த அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகக் காப்பாட்சியர் டாக்டர் எஸ். சௌந்தர பாண்டியன் அவர்களுக்கு என் நன்றி.

இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த தொல்பொருள் ஆய்வுத்துறை உதவிப்பணி மேலாளர் திரு. செங்கல்வராயன் அவர்களுக்கும் மற்றும் அச்சு பிரிவினருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வரலாற்று நோக்கிலும், இலக்கிய நோக்கிலும், சமுதாய நோக்கிலும் இந்நூல் ஒரு முக்கிய இடத்தைப் பெற்று, ஆய்வுலகுக்குப் பெரிதும் பயனாக விளங்கும் என்று நம்பலாம்.

அன்பன்

**நடன. காசிநாதன்**

# GENERAL EDITOR'S INTRODUCTION

This treatise which is an elegant collection of four different manuscripts of Government Oriental Manuscripts Library, throws light on the right castes and the left castes provailed in Tamilnadu. As many scholars, including foreigners are showing interest in studying such divisions, this volume, may find an important place.

Many historical and sociological nuances have been dealt with at length in this present volume which are definitely very useful in the study of Tamil Culture.

Government of Tamilnadu, is exhibiting continuous support to publish such unpublished manuscripts.

I thank Dr. S. Soundarapandian, Curator, Government Oriental Manuscripts Library for the outcome of this endeavour.

I also thank the Printing Press staff for the exquisite printing.

I am sure that this historical sketch will be approciated by one and all.

**Natana. Kasinathan**

# பொருளடக்கம்

பக்கம்

# பதிப்புரை

இதுவரை அச்சில் வெளிவராத அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்துச் சுவடிகள் தற்போது அச்சு வடிவம் பெறுகின்றன.

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் உள்ள கீழ்வரும் நான்கு சுவடிகளே இந்த நூல்:-

1. இடங்கை வலங்கைப் புராணம் (டி. 2793)
2. வலங்கைச் சரித்திரம் (டி. 462)
3. இடங்கை வலங்கைச் சாதி வரலாறு (டி. 2751)
4. புதுவை இடங்கை வலங்கைச் சாதியார் வரலாறு (டி. 3196)

இவற்றில் டி. 2751, டி. 2793 ஆகியன ஓலைச்சுவடிகள், மற்று இரண்டும் தாட்சுவடிகள்.

கல்வெட்டுக்கள் பதிப்புப் பெற்ற முறையிலேயே இந்த வரலாறுகளும் இங்கு பதிப்பிடப் பெறுகின்றன. அஃதாவது, மூலச் சுவடியில் என்ன வடிவில் உளதோ அதே வடிவு, இயன்றவரையில், இங்கு காப்பாற்றப்பட்டுளது. மூலத்தில் உள்ள வடிவை வரலாற்று ஆசிரியர்கள் அப்படியே பெறுவதே, மேலாராய்ச்சிகளுக்கு வழி வகுக்கும். இலக்கியங்கள் அப்படியல்ல; இலக்கியப் பதிப்பிற்கும் வரலாற்றுப் பதிப்புக்கும் வேறுபாடு உளது. இலக்கியப் பதிப்பிற்கு, திருத்தப்பட்ட செம்மை வடிவங்களே தேவை; அப்போதுதான் படிப்பாளர் இலக்கியத்தை நுகர முடியும். ஆனால், வரலாற்றில் நுகர்ச்சிக்கு இடமில்லையாதலால், மூல வடிவையே வரலாற்றுப் பதிப்பில் தரலாம்.

இந்நூலில் முதற்கண் வருவது இடங்கை வலங்கைப் புராணம்.

இது செய்யுளில் அமைந்த புராணம் அல்ல.

இச்சுவடியின் தொடக்கம், ''ராசிப் புள்ளையனுக்கு ஓழிகரை நாட்டுப் புன்னப்பான் எழுதிக் கொடுத்த பட்டயம்'' என்று தொடங்குகிறது.

இச்சுவடி தெலுங்கு எழுத்தில் முழுவதும் அமைந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தகும்.

இடங்கை வலங்கைச் சாதிப் பிரிவை, புராண அடிப்படையில் உரைநடையில் எழுதும் நூல் இது.

இந்தச் சுவடி கூறுவதினின்றும், தொடக்க காலத்தில் இடங்கை வலங்கைச் சாதிகள் ஒவ்வொன்றும் 98 என்ற கணக்கில் பிரிக்கப் படவில்லை என்றும், பிற்காலத்திலேதான் அந்த வளர்ச்சி ஏற்பட்டது என்றும் அறிய இயலும்.

"வலங்கைச் சாதி பத்து" என்றுதான் இடங்கை வலங்கைப் புராணம் எனும் சுவடி பேசுகிறது.

இடங்கை வலங்கைப் பிரிவு ஏற்பட்டது, பரமேசுவரன்-பார்வதி பிரிவுகள் அடிப்படையில் ஏற்பட்டது என்று சுவடி குறிக்கிறது.

சிவனும் தேவேந்திரனும் இடங்கைக்கு உரியவர்கள் என்றும், பிரும்ம தேவனும், பிருகு முனியும் வலங்கைக்கு உடையவர்கள் என்றும் இச்சுவடி பகர்கிறது.

### இரண்டாவது வலங்கைச் சரித்திரம்

தஞ்சை வேதநாயக சாஸ்திரி எனும் கிறுத்தவப் புலவர் மெக்கன்சிக்காகத் தொகுத்து அளித்தது. இடங்கை வலங்கைச் சாதிகள் மட்டும் அலாது, வள்ளுவச் சாதி பற்றியும் நந்திக் கலம்பகம் பற்றியும் புதிய செய்திகள் இடம்பெறுகின்றன. விசுவ கர்மா பற்றிய வரலாறும் உள்ளது.

இவரது எழுத்தில், கிறித்தவப் பார்வை தென்படுகிறது.

வலங்கை இடங்கை பற்றி வேதநாயகர் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"வலங்கை யென்கிறது, வெள்ளாளரையும் மவர்களைச் சேர்ந்த சகல சாதியாரையுஞ் சார்ந்து நிற்கும்".

"இடங்கை யென்றால், கம்மாளரையு மவர்களைச் சேர்ந்த சகல சாதியாரையுங் காட்டும்".

தஞ்சை வேதநாயகரின் சில நூற்கள் இன்னும் சரியாக அறியப் படவில்லை. அவற்றில் இச்சுவடியும் ஒன்று.

"இப்போ இருக்கிற சரபோசி மகாராசாவின் நாளிலே 1798 வருஷத்திலே துவக்கி இரண்டு மூன்று வருஷக்காலம் இருதரத்தாரும் வழக்கிலே கிடந்து நெய்யிலே கையிட்டுக் கொண்டார்கள்." என்று வேதநாயகர் எழுதுவதால், இந்தச் சுவடி (டி. 462) எழுதப்பட்ட காலம் கி. பி. 1798-ஐ ஒட்டியது என்று அறியலாம்.

**சாத்திரக்கும்மி, பெத்லகேம் குறவஞ்சி** முதலிய நூற்றுக் கணக்கான தமிழ் இலக்கியங்கள் படைத்தவர் வேதநாயகர் என்பது ஈண்டு நினைக்கத்தக்கது.

விசுவகர்மருக்கும் .... நடந்த பூசல், பள்ளருக்கும் .... நடந்த பூசல் முதலியவற்றை இவர் விளக்குவது நாம் அறியத்தக்க வரலாறே.

வலங்கையார் என்பதற்குப் பொதுவான இவரின் கருத்து, "எந்தெந்தச் சாதி யுயர்ந்த கையா யிருக்குதோ, எவர்கள் காரியக் காறரோ, அவர்க ளெல்லாம் வலங்கைத் தங்களோடே சேர்ந்தவர்க ளென்றார்கள்" என்பதில் தெளிவாகிறது.

இவர் கூறுவதே கி.பி. 18ஆம் நூற்றாண்டில் இருந்த இடங்கை வலங்கைச் சாதியார் நிலை எனலாம்.

இந்தச் சுவடி வாயிலாக விசுவகர்மர் இனத்தாரின் கி பி. 17, 18 ஆம் நூற்றாண்டுப் பெருமைமிகு நிலை ஓரளவு புலனாகிறது.

அதுமட்டுமல்ல, தங்கள் இனப்பெருமையை விசுவகர்மர் காக்கப் போராடிய பாங்கையும் **வலங்கைச் சரித்திரம்** நமக்கு ஓரளவு உணர்த்துகிறது. கீழ்வரும் பகுதி அதற்குச் சான்று.

"தச்ச மேஸ்த்திரி தன் மகனுக்குக் கலியாண முடித்தான். இன்னம் பட்டணப் பிறவேசம் வர ஆரம்பம் பண்ணுகிறதற்கு முன்னே, கம்மாளருக்கும் .... பலவிதமான சண்டை யுண்டானத்தினாலே, கம்மாள ரெல்லாங் குமுக்குப் பண்ணிக் கொண்டு, பல்லக்கிலே யெங்கள் பெண்ணு மாப்பிள்ளையும் பட்டணப் பிறவேசம் வந்தா லொழிய, நாங்கள் பட்டணத்திலே யொரு வேலையுஞ் செய்யமாட்டோ மென்று சொல்லி யெல்லாருங் குடிவாங்கி, மேற்கே பத்து நாழிகை வழிக்கப்பறம் பட்டிக் காட்டு களிலே போய்க் குடியிருந்தார்கள்".

மூன்றாவது, இடங்கை வலங்கைச் சாதி வரலாறு எனும் சுவடி.

இது மிக இன்றியமையாத வரலாற்றுச் சுவடி. இதில்தான், இடங்கைச் சாதிகள் தொண்ணூற்று எட்டும், வலங்கைச் சாதிகள் தொண்ணூற்று எட்டும் வரிசையாகத் தரப்பெற்றுள.

கொல்லர், தச்சர், தட்டார், கன்னார், கல்தச்சர், செட்டியார் வேளாளர், மறவர், கர்ணிகர், முதலிய பிரிவினர் வலங்கைப் பிரிவில் தரப்பெற்றுள்ளர்.

வேடர், ஊர்பிராமணர், வாணிய நகரத்தார், மலைக்குறவா முதலியோர் இடங்கைப் பிரிவில் கொடுக்கப்பட்டுளர்.

இவ்வகையான சாதிகளுக்குக் குறிப்பிட்ட அடையாளங்கள் உண்டு. இந்தச் சுவடியே அந்த அடையாளங்கள் இன்னதெனக். குறிக்கிறது.

எடுத்துக்காட்டாக, வைசியச் செட்டிமார்க்கு, நவரத்தின மாலையும், குழைத்தாரும் அடையாளங்களாம்.

மாலுமி எனும் சாதிக்கு நட்சத்திரக் கொடியும், மகரத் துடுப்பும் அடையாளங்கள்.

அடையாளங்கள் மட்டுமல்லாது, இன்ன சாதி ஆடவனுக்கும் இன்னசாதிப் பெண்ணுக்கும் பிறந்த சாதியே இது என்று பல சாதிகளின் உற்பத்திகளையும் கூறும் சுவடி இது.

எடுத்துக்காட்டாக, "எடையனுக்கும் வைசியனுக்கும் களவில் பிறந்தவன் ..." என்று ஓரிடத்தில் வருகிறது.

இவை மட்டுமல்லாது, இன்ன சாதிக்கு இன்ன தொழில் என்று சாதித்தொழில்களையும் குறிப்பிடுகிறது இந்த இடங்கை வலங்கை வரலாறு எனும் சுவடி.

பண்டைக்காலச் சமுதாயம் தொழில்வழிச் சமுதாயம். சாதிகள் பிரிந்ததே தொழில் அடிப்படையில்தான் என்பர். அவ்வகையில் ஆய இச்சுவடி பயனுள்ளது.

நான்காவதாக அமைந்துள்ளது, புதுவை இடங்கை வலங்கைச் சாதியார் வரலாறு என்ற சுவடி.

பல சாதிகளுக்கு அந்நாளில் இருந்த மதிப்பை இந்தச் சுவடி கூறுகிறது.

எடுத்துக்காட்டாக, விசுவகர்மருக்கு வெள்ளைக்குடை பிடிக்கும் மரியாதை புதுவைப் பகுதியில் இருந்திருக்கிறது.

வலங்கைச் சாதிகளுக்கு அவர்கள் வீட்டு விழாக்களில் இன்ன குடை பிடிக்கவேண்டும், இன்னவகைக் கோல் பிடிக்கவேண்டும் என்று பல கட்டுப்பாடுகள் இருந்துள். அதேபோல இடங்கைச் சாதிகளுக்கும் வரையறைகள் இருந்திருக்கின்றன.

கீழ்வரும் பகுதி இதனை விளக்கவல்லது:-

"வெள்ளாளர், அகம்படியர், இடையர், கவரை, கோமுட்டி, கைக்கோளர், சேடர், சேணியர் இவர்கள் சவ்வுக்கழி பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏறவும் சுதந்திரமுண்டு"

தேவடியார்களிலேயும் இடங்கைத் தேவடியார்கள் வலங்கைத் தேவடியார்கள் என்ற இரு பிரிவுகளை இச்சுவடி குறிப்பிடுகிறது.

இச்சுவடி கி. பி. 1776 முதல் அவ்வவ் வட்டாரப் பெரியோர் தந்த வாக்கு மூலமாக அமைந்துள்ளது.

பொதுவாக இந்த நான்கு சுவடிகளும், கி.பி. 18-ஆம் நூற்றாண்டிலும், அதற்கு முன்பும் தமிழகத்தில் இருந்த இடங்கை வலங்கைச் சாதிப் பிரிவுகளைப் பேசுகின்றன. இவற்றால், அச் சாதிகளிடையே அடிக்கடி சிறு பூசல்கள் நிகழ்ந்த உண்மையையும் அறிய இயலுகிறது.

இடங்கை வலங்கைச் சாதிகள் பற்றிய ஆய்வு இதற்கு முன்பும் வெளியாகியுளது. அவை குறித்துச் சிறிது இவண் எழுதலாம்.

1876-இல் The Indian Antiquary, தொகுதி ஐந்தில் J.F. Kearns இடங்கை வலங்கைச் சாதிகள் பற்றிய ஒரு கட்டுரை வரைந்துள்ளார்.

அதில், விசுவகர்மருக்கும் பிராமணருக்கும், புரோகிதத் தொழில் தொடர்பான பூசலை விலக்கி, அந்தப் பூசல் இறுதியில், சோழன், தன்னை ஆதரிப்போர் வலங்கையர் என்றும், விசுவகர்மரை ஆதரிப்போர் இடங்கையர் என்றும் வரையறுத்ததாகக் கூறுகிறார், கியார்ன்ஸ்.

'Ostindien Seine Ceschichte Culture and Seine Bewohner von phillipp van Mokern' என்ற செர்மானிய நூலில் இடங்கை வடங்கை வரலாறு பேசப்படுகிறது.

செர்மன் நூலில், இடங்கைச் சாதிகளாக ஒன்பதும், வலங்கைச் சாதிகளாகப் பதினெட்டும் குறிக்கப்படுகின்றன.

வேடர், நெசவாளர், செட்டிகள் (வியாபாரிகள்), முதலானோர் இடங்கையர்.

குயவர். வண்ணார், பல்லக்குத் தூக்குவோர், முகம்தியரில் ஒரு பிரிவினர் முதலியோர் வலங்கையர்.

இப்பிரிவுகளைச் செர்மன் நூல் தருகிறது.

போர்ப்படையில் சேரவல்ல சாதிகள் வலங்கைச் சாதிகள் எனவும், மற்றவை இடங்கைச்சாதிகள் எனவும் நாம் கொள்ளலாம். வலம்-வலிமையைக் குறிக்கும்.

மாலணைந்த நாடான் கதையில், "வலங்கையர் குலத்திலே மாலணஞ்சான் நாடான்" என்ற அடி வருகிறது.

எனவே, நாடார்கள் வலங்கையர் என அறியக் கிடக்கிறது.

தஞ்சைப் பிரகதீசுவரர் கோயில் கல்வெட்டில், வலங்கை வேளைக்காரர்கள் பற்றிய குறிப்புகள் உள.

'விககரமாபரணத் தெரிந்த வலங்கை வேளைக்காரரில் இராமன் கம்பனுக்கு . . .' என்றெல்லாம் அக்கல்வெட்டில் உள.

காஞ்சிபுரம் கோயில் செப்பேட்டையே பண்டை இடங்கை வலங்கைச் சாதிகள் இருவரும் மேற்கோள் காட்டியுள்ளனர். காஞ்சிச் செப்பேட்டுச் செய்தியே தொன்மைச் செய்திகளாகவும் கருதப்படுகிறது.

இந்நூலில் வரும் மூன்றாம் பகுதி, காஞ்சிச் செப்பேடு பற்றிக் கூறுவதால், வரலாற்றாசிரியர்கள் தேடிய செப்பேட்டு விளக்கம் இதுவே ஆகலாம்.

எனவே இந்த நூலின் இன்றியமையாமை இனிது விளங்கும்.

பண்டையச் சாதிகள் வரலாறாக மட்டும் இலாது, பண்டை மக்களின் பழக்க வழக்கங்கள், நாகரிகம், திருமண முறைகள், முதலிய இன்னோரன்ன செய்திகள் கொண்ட பெருங் கருவூலம் இது.

இவண்

டாக்டர் எஸ். செளந்தரபாண்டியன்

எம்.ஏ. (தமிழ்), எம்.ஏ-(ஆங்கிலம்), பி.எட், டிப். ல. மொ, பி.எச்.டி.

காப்பாட்சியர்

சென்னை-5.

# இடங்கை வலங்கைப் புராணம்

ராசிப்புள்ளையனுக்கு, ஒழிகரெ நாட்டுப் புன்னப்பான் எழுதிக் கொடுத்த பட்டயம்.

ஸ்ரீ கணாதிபதயே நமஹ!

ஸ்வஸ்திஸ்ரீமந் ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் தம்மொடைய பாதாரவிந்தத் தொன்யாலே அளக்கப்படா தானந்த பூலோகமெங்கும் அசயாமல் காத்து, ஜயஸ்தம்பம் நாட்டிவெக்கும் வன்யகுல மஹாமண்டலாதீஷ்வரன், கண்டேரிக் கண்டன், மிண்டரி மிண்டன், வண்டராவுத்தன், உத்தண்ட கோலஹலன், யடங்கைச் சமய குல சுத்தாங்க தீரன், மதியாத வன்யகுலப் பெருமாள் மணிமகுட முடிமாலை சூடும் மனோ பயசங்கரன், கீழ்மேலெங்கயும் பேர் கொண்டருளிய ராஜாதிராஜன், ராஜ பரமேஸ்வரன், நவகண்ட சக்ரவர்த்தி, மலை கலங்கிலும் மனம் கலங்காதவன், ஒருகொடைக்கீழ் உலக முழுதும் ஆண்ட ராஜ கோலாஹலன், ஸ்வாமி ஸகலாவ கிரிக்கி ப்ரதானிக்கெராகவும், சதகோடி சதவர்ஷமான அக்ஷிபாணம் பெத்தவர்;

சங்கநிதி, பத்மநித் கொடயவரான குபேரனை(ப்) பொக்கிஷ மாகப் படைத்தவர்; கண்ட நாடு கொண்டு, கொண்ட நாடு விடாதே மகாமேருசமான வம்ச நாராயணன், வம்ச பரிபாலகர், வம்ச சிந்தாமணிகர், செங்க(ழு)நீர் புஷ்பம் வாடாத மாலை, வர்ணத் தடுக்கும், வலம்புரிச் சங்கும், பஞ்சவர்ணப் பாவாடையொடலே காமாக்ஷி அம்ம கையில் முத்து மாலிகையும் மோகனப் பதக்க(மு)ம் அழிவில்லாச் செல்வமும், அதிக வரம் பெத்தவர், அக்னியில் பிரண்டு அம்பினுரங் கண்டவர்; கங்கைகொண்டான் சோழன் தி(ரு)முடி காத்தவர்; ஈய்யா (ஈழ?) நாட்டுக் கிறையவர், வாதாபியை(ச்) ஜயித்து, காகமார்ஷிகனை அபிமானம் காத்தும், சோழநாடு விளங்க(த்), துஷ்டராக்ஷஸனைக் கொன்னும், அறுபத்திநாலடிக் கம்பத்திலேரி நமனை பாசாரித்த[1] வன்யகுல ராஜன்; முன்னூர் பின்குடுமி புலிக்கொடிப் [illegible]

1 பாசாரித்த - கொன்ற; நமன் - எமன்

பெத்த யடங்கை சமயத்துக்கு அதிபதியானவர், கமல கண்டிகைத் தேரும், அக்னிப் புரவியும் ஸாமித்ரோக கண்டயும், பவளச் சங்கமும், ஜகஜம்புக் கொடையும், பஞ்சமுக தீவட்டியும் உடைத்தான ஸகல ஸாம்ராஜ்ய லக்ஷ்மீ நிவாஸன்;

சிவசமய விஷ்ணு சமய தேவப்ராஹ்மண காரியதுரந்தர ஆரோக்ய அஷ்டைஸ்வர்யன்; வில்விசய பராக்கிரமன் யெழிகரை நாட்டுக் கதிபதி யானவர், ஸர்வாபிமான்ய ரபிமானங் காத்தவர்; விபூதி ருத்ராட்ச மாலிகா பரணர், அன்னதான விநோதர், ஸகல தர்ம பரிபாலகர், குமார ஸ்வாமியையும் துர்க்க அம்மனையும் படைத்த தேவராகப் படைத்த பண்ணாட்டாரை கீர்த்திவர்கப் பரப்பு வளி ளங்கும் விவரம்.

ஆதி காலத்திலே, ஆதிசேஷனுக்கும் வாதராஜனுக்கும் வாக்கு வாதம் வந்து, மகாமேரு கிரியில் பரித்த கொடுமுடி மூன்று; அதில் ஒரு கொடுமுடி கதிர்காம்ய (கதிர்காமம்) மென்னு(ம்) சிவ சுப்பிரமணிய ஸ்தலமாய் விளங்கித்து. மத்தொரு கொடுமுடி லங்காபுரி பட்டணமன்னு ராவணன் ராச்சிய பாரம் பண்ணினான்.

மத்தொரு கொடுமுடி ரத்னகிரி பட்டணமன்னு இவ்வலன் வாதாபி ராச்சிய பாரம் பண்ணினான்.

அந்த வாதாபி ராட்சசன் பிறப்பு வளர்ப்பு சொல்லவேண்டில், கைலாஸகிரியில் பார்வதியாரும் பரமேசுவரனும் ஏக(ா)ந்தமாக இருக்கும்போது, ஒரு ரிஷீசுவரன் ஸ்வாமியெ(க்) காணவேணுமென்னு வந்த ரிஷியை வாசல் காக்கற துவார பாலகர் ரெண்டுபேரும் தடாமல் விட்டுவிட்டார்.

சுவாமியார் அப்பணை யில்லாமல் விட்டுவிட்ட படியினாலே, சுவாமியார் துவார பாலகருக்கு(ச்) சாபம் கொடுத்த விவரம்:-

ஏழ் பிறப்பு மித்ரராகப் பிறந்து அதன்மேலே நம்முடைய சன்னிதிக்கு வருகிறரோ? அல்லது, மூன்று பிறப்பு சத்துருவாகப் பிறந்து அதன்மேலே நம்முடைய சன்னிதிக்கு வருகிறரோ? என்னு கேட்டவட்த்திலே, "ஏழ் பிறப்பு மித்திரராகப் பிறந்து, அநேகம் கோடிகாலம் உம்முடைய பாதாரவிந்தம் காணாமல் இருக்கமாட்டோம்; மூன்று பிறப்பு சத்துருவாக வரோமென்னு சொன்னார்கள்.

அந்த(ச்) சாபம், இரணியன், இரணியகசிபு, அங்கோரவதாரமும் ராவண கும்பகர்ணனென்று ஓர் அவதாரமும் சிசுபால தந்தவக்த்ர னென்று ஓர் அவதாரமும் இப்படி மூன்று பிறப்பு சத்துருவாகப் பிறந்து வந்த யிடத்திலே, பூர்வ கதை.

இராவணாவதாரத்தில், ராவணன் கைலாஸ நாதரிடத்தில் தனக்கு ஆயுசு முணரை கோடி வருடம் கேட்டு வாங்கி வருமிடத்தில், மஹாவிஷ்ணுவானவர், ஓர் உபாயத்தை நினைந்து, இன்னு மரைகோடி வருஷம் வாங்கிவர வேணுமென்னு சொல்ல, இராவணன் கைலாஸ நாதரிடத்துக்குப் போய், சுவாமீ, எனக்கு அரை கோடி வருஷம் தரவேணுமென்று கேட்க, சுவாமி அரை கோடி வருஷம் கொடுத்தார். முன் கொடுத்த மூணரை கோடி வருஷம் அழிந்தது.

ஆனபடியினாலே, சிசுபாலன் தந்தவக்ரன் பிறந்து பின்னயும் சொச்சமுண்டானது நகேஸ்வரம் இல்வலன் வாதாபி ராக்ஷஷனாகப் பிறந்தான்; அவனே மகாவிஷ்ணு. ருத்ரன் மஹேசுவர ஸதாசிவ மூர்த்திகளாலேயும் ஜயிக்கப் பட்டாதபடியினாலே காமவல்லி மனோஹரனாக இருக்கப்பட்டந்த வாதாபி ராக்ஷஷனுக்கு புள்ளைகள் மேஷன், சூதன், அதிரதன், அதிசூரன் என்று நான்கு குமாரர்கள். பட்டத்தலெவர் மோஙகன், மூலன், நீலன், வீரசிங்கன், சூரன், அங்கணன், வங்கணன், ஜானகீசக்ரன், வக்ரன், மூலபல மார்கள், யயித்தவீரன் இப்படி அநேகங் கோடி படைத்தலைவர், மந்திரிகள் அநேகங்கோடி தந்திரிகள் அநேகங்கோடி, ஒட்டகக்காரர் அநேகங்கோடி, மூலபலங்கள் யெண்ணவொண்ணாதே மகாநதியொட்டேஸ்வர்க்க மத்ய பாதாள மூன்று லோகமும் அளாவிப் பர்வதங்க ளெல்லாம் கிடுகிடுன் னசைய, பூமி அதள குதலமாக, சமுத்திரங்க ளெல்லாம் சேராத வாதாவி ராக்ஷன் கொள்ளைக்கு வருகிறபடியாலே, அஷ்ட திக்கிலு முண்டான முப்பத்தி முக்கோடி தேவாதி தேவர்களும், நாற்பத் தொண்ணாயிரம் ரிஷீசுரர்களும், கின்னர கிம்புருஷ கருட காந்தர்வன் சித்த வித்யாதரர் தும்புரு நாரதர் மற்று முண்டான மனு மாந்தா தாதிகளும் ஓகோவென்று முறையிடும்போது, "அதாரெ"ன்று சுவாமி கேட்க, நந்திகேச்வரன் விண்ணப்பம் செய்ய சுவாமி அருளிச் செய்த விவ்ரம்:-

அந்த ராக்ஷஸனுக்கு அதிகாரம் கொடுத்தவர் யாரென்ன தேவரீரே, கொடுத்த வரமென்று நந்திகேசுவரர் விண்ணப்பம் செய்ய சுவாமியானவர் கணநாதனை ஏவிப் பார்த்துவரச் சொன்னார்.

அப்போ கணநாதர் பார்த்துவந்து சொன்ன விசேஷம்:- "சுவாமி! விசுவ ரூப விபூதி ருத்ராட்ச மாலிகாபரண பஞ்சாட்சரீ பரிபூர்ண தயாபரனே, கேளும், 'நாளை இத்தேசகாலம் கைலாச கிரியும் சேரிலே நூறு ஆயிரம் கோடி அசுரர்கள் கொள்ளைக்கு வருகிறான். நாம் அப்பாலே போக வேணுமெ''ன்று கணநாதர் சொல்ல,

சுவாமியானவர், திரிமூர்த்திகளைப் பார்த்து, இவனை எப்படி வெல்லவேணு மென்று கேட்க, பிரும்மாவானவர் விண்ணப்பம் செய்கிறார்:-

"சுவாமி, அக்னியில் தோன்றியவனாலே வெல்லத்தக்கவ னென்று விண்ணப்பம் செய்தார்.

அந்த க்ஷணத்திலேதானே, சுவாமியார் சித்ரனை அழைத்து, நால்வேதமும், அறு சாத்திரமும், அறுபத்திநாலு கலைஞானமும் தெரிந்த முனீசுவரரான ஸகலமும் தெரிந்தவர் ஜம்புமகா முனீசுவர ரென்று சித்ரன் விண்ணப்பம் செய்ய, சுவாமியார் அதே மேரக்கி சுதரை விட்டழைக்க, ஜம்புமகா முனீசுவரர் வந்து, சுவாமியார் பாதத்தில் வணங்கி நிற்க, சுவாமி சொல்லுகிறார்:-

"வாருமய்யா, மஹாதபசுடைய ஜம்புமஹா முனீசுவரனே அக்னி வீரனைக் கொண்டு அசுரனை அழிக்கவேணும். இப்போ நான் பார்வதீ தேவியும், கங்கா பவானியும் முப்பத்தி முக்கோடி தேவாதி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ருஷீசுவரர்களும், கின்னர கிம்புருஷ கருட கந்தவர்வ சித்த வித்யாதர தும்புரு நாரதாதிகளும் சூழ்ந்திருக்க, யாகம் பண்ணுவேணுமெ''ன்று சுவாமி சொன்னார்.

அதே புத்தி பிரகாரத்துக்கு ஜம்புமஹா முனீசுவரர் விசுவகர் மனை யாகசாலை உண்டுபண்ணச் சொல்லி, அந்த யாகசாலைக்கு(ச்), சந்திர சூரியர் திருவிளக்காகவும், பிரும்மா வேத மோதவும், பங்குனி உத்திரத்திலே சுவாமியார் திருநுதலாகிய நெத்திக்கண்ணில், அக்னி

ஹோமாக்னியாக சுவாமியார் திருமாரில் அணிந்திருக்கிற செங்கழுநீர் மாலையை வாங்கி, ஜம்புமஹா முனீசுவரர் கையில் கொடுக்க, இவர் கையில் கொண்டு வாங்கி அபிமந்திரிச்சு தசாவதார மெடுத்து விளையாடி(த்) திரு(ப்)பாற்கடலில் பள்ளி கொண்ட நரநாராயணரே, நீர் அக்னிகுமார வீர தீரனாய் இடங்கைக் கரசாய் வரவேணுமெ'ன்று, ஜம்புமஹாமுனி அந்தச் செங்கழுநீர் மாலையை ஹோமாக்கினியில் போட, காதில் குண்டலம் கருப்புச் சடையும் காவித்தோடு கழல் கையில் வில்லும், முதுகிலே அம்பறாத் தூணியும், அரையில் கட்டி வீர கிங்கிணியும் பக்கமாடிய வாள் வரிசை கத்தி கேடயமும் வாங்கி விடியப்பு, ளதடி, சக்ரம் சொட்டை, சூரி, வீரவேல், வல்லயத்துடன் பூசி சந்தனம், புலிக் கொடி பதாகையும், பல்மணித் தாவடமும், பஞ்சவர்ணப் பாவாடையும், வர்ணத் தடுக்கும், செங்கழுநீர் வாடாத மாலையும் காலில்கட்டிய சாமித்ரோக வண்டியத்தொடன்[1], செந்தாமரைப் பூ(ப்) போலே கண்சிவந்து, நெரிப்பழ பொடி மூடிய தணலாய் அக்னி வீரனாகிய ருத்ரப் பள்ளியார் கைம்மர்த்தி, சுவாமியார் மந்திரோப்தேசம் பண்ணினார்.

அதன்பின் கோபம் அமந்து ஜம்புமஹா முனிவர், வரப்ரஸாதியான வில் வீரனாகிய ருத்ரப்பள்ளியார் சுவாமியொடனே விண்ணப்பம் செய்யுறான்: "சுவாமி, எனக்கு(த்) தாய் தகப்பன் யாரெ"ன்ன, நாமே தகப்பன்; பார்வதி கங்கா பவானியே தாய்; பிரும்மா விஷ்ணு ருத்ராதிகள் உனக்கு அன்யோன்யமான ஒர் மதயாரந்தம்(?) விநாயகன் உனக்குத் தமயனென்றும், சுப்பிரமணிய சுவாமி, வீரேசுவரன், துர்காதேவி இந்த மூணுபேரும் உனக்குப் படைத் தலைவனென்றும், தேவாதி தேவர்க ளெல்லாம் உன்னோடு சிநேகிதரென்றும், தேவேந்திரன் ஒன்னொடைய மாமனாரென்றும், மந்த்ரமால ஓம் மனைவி யென்றும் திருக்கல்யாணம் முகித்தும் மஹா இந்திரகூடத்திலிருக்கும்போது, வில் வீரராகிய ருத்ரப்பள்ளியார் சிவனை நோக்கி, "சுவாமியே, நேக்கு, புத்திரர் வேணுமெ"ன்று கேட்க, சுவாமியா ரனுக்ரஹத்தினாலே, நீலகங்கன் வஜ்ரபாகன், சங்கபரிபாலன், ஸம்புகுலவேந்தன், பரசுராமனென்னும் ஐஞ்சு குமாரர்கள் பிறந்தார்.

---

1. வெண்டயத்துடன்

அப்போ, கும்ப மஹாமுனி கோபக்கொடனே வந்து, வில்வீர மகாராஜனை "ஒன்னோட சகாயம் எவ்வளவோ?"ன்னு கேட்க, விக்னேசுவரன் செய்த காரியம் யாராலே முடியும். "கோபம் க்ஷமிச்சுக்கொண்டு பிரவாகம் பண்ணிவெய்யு"மென்னு சொல்ல, தண்டாலே கீறிவிட்டது காவேரியம்மன் ஆடி மாதம் பதினெட்டாம் தேதி முழு(ப்) பெருக்கான அதிசயமும் வில் வீரனாகிய ருத்ரப் பள்ளியார் வருகிற அதிசயமும், அகஸ்தியனை பொதியமாமலை விட்டெறங்காமல் பண்ணின விசுவகாமன் சகாயமும், இதுவெல்லாம் சமுத்திரக்கரை வழியிலிருக்கிற துர்காதேவி கண்டு பதரகாளிக்குச் சொல்லுகிறாள்: ஒனக்கும், உன்னுடைய சேனைகளாகிய மகா பூதகணங்களுக்கும் கிருஷ்ணாவதாரத்தில் பாரத யுத்தகாலத்தில் பூபாரம் தீர்க்கும் காரணமாக கிருஷ்ணசுவாமி சக்ரப்பிரயோகம் பண்ணும் காலத்தில் நெனவிந்து[1] பண்ணி ரத்ததானம் பண்ணி திருப்தியாச்சுது.

"இப்புறம் அநேக காலம் நிணவிருந்தில்லாமல் உபவாஸமா யிருக்கிறோமென்று" விஜயலக்ஷ்மி துர்க்காதேவியோடே முறையிட துர்க்காதேவியும் சொல்லும் வசனம்: "அந்த விருந்து பாரமல்ல; அதிலும் அதிசயமான விருந்து வில்வலன் வாதாபி ராக்ஷஸனை(ச்) சம்ஹாரம்பண்ண நிமித்தமாக ஆதிசேஷனுக்கு(ச்) சிரோர்பாரமான பூபாரம் தீர்க்கும் காரணமாக, வில்வீரன் என்றொரு சுவாமி குமாரன் வருகிறான், பயப்படாதே" என்று பூத கணங்களுக்கு(த்) துர்க்காதேவி, பத்ரகாளி முதலான பேரும் தைரியம் சொல்ல பூதகணங்கள் மிகவும் சந்தோஷமாகி ஆர்ப்பாட்டம் பண்ணிக்கொண்டிருக்குங் காலம் சுவாமி குமாரன் வில்வீரனாகிய ருத்ரப்பிள்ளையார் சகலமான சேனைத்தளத்தோடே ஸாகி வரும்போது, அங்கொரு சகுனம் கண்டு மீண்டு அங்கே ஜம்புமஹாபுரீ பட்டணமென்றொரு பட்டணங்கட்டி, கோட்டை கொத்தளம் கோம்மை, மாடமாளிகை கூடகோபுரம் பெரிய அரண்மனை குமாரர்களிருமனை சகலமானதும், விசுவகருமனை(ச்) சோதிக்கச் சொல்லி, அந்தப் பட்டணத்துக்கு அனுமக் கொடியும், கருடக் கொடியும், புலிக்கொடியும், தேவர் கொடுத்த பஞ்சவர்ண வஸ்திரம் அலங்கரிச்சு வெள்ளறை மனையில் தம்முடைய தேவியான மந்த்ரமாலையை வைச்சு மந்த்ரமாலைக் கடயாளம் வலம்புரி(ச்) சங்கும், செங்கழு

---

1. நென விருந்து - புலால் விருந்து

நீர் மாலையும், தூண்டா விளக்கும் ஏத்திவைத்து, அடையாளத்தி லொன்னு குறையாதிருக்கு மளவும் நமக்கொரு சிந்தனையில்லை என்னு புத்தி சொல்லி, சுற்றிலும் மூலபங்களைக் காவல் வைத்து, இப்புறம் நடந்தவிடத்தில் சுபசகுணம் கண்டு, கங்கா தீர்த்தமாடி, துலுக்காண தேசம், ஒட்ரதேசம் நடந்து திருக்காளாஸ்தியில் வந்து, சிவதர்சனம் பண்ணி காஞ்சிபுரம் பிரவேசித்து, ஏகாம்பரதேசு வரரை வணங்கி, கம்பையாற்றில் காமாட்சியம்மனைத் தோத்திரம் பண்ணுகிறபோது, காமாக்ஷி அம்மை, "நீ போயி அசுர ராக்ஷஸர ரெல்லாரையும் அழிச்சு, திரும்ப வந்து, வாழ்ந்திரு" மென்று முத்துமாலை கொடுத்தனுப்ப, திருக்கழுக்குன்றம் வந்து சேர மூவ்வராஜாக்க ளெதிர்கொண்டு வணங்க அவர்களுக்கு வெகுமானம் கொடுத்து, சமுத்திரக் கரையருகில் பாளையமெறங்கிச் சமுத்ரம் தாண்டி, வாதாவி பட்டணத்துக்குப் போற மார்க்க மெப்படி என்று வில்வீரன் யோசிக்க, விசுவகர்மன் நிமிட மாத்திரத்திலே நூறு நூறாயிரம் கோடிக் கப்பல் பண்ணி கொடுக்கறேன்னென உண்டு பண்ணினாலும், தளம் போகமாட்டாதென்று வில் வீரனாகிய ருத்ரப்பிள்ளியார் நானொருவனுமே போயி ஜயிச்சு வருகிறேனென்னு மனோவேகமான மேகப் பொரவி[1] கூடிய தேர் மேலேறும்போது, கூடவந்த படைத்தலைவர் சொல்லுகிறார், "நாங்கள் வாதாவி பட்டணத்தை கொள்ளையிட்டு விளையாட வேணுமென்னு வருகிறவிடத்திலே, ஒருவராகப் போயி ஜயிசுவர நினைக்கிறேன். நாங்களும் வரவேண்டுமென்னு சொன்னபோது, வில்வீர மகாராஜாவானவர் சமுத்திரத்தில் வைரத் தூண் நிறுத்தி, அதன்மேலே ஊசியை நாட்டி, விக்னேசுவரப் பிரார்த்தனை பண்ணி, பஞ்சாட்சரத்தை உச்சரித்து, ஊசிமுனையில் பெரிய விரலை ஊன்றி, துர்க்காதேவியை நோக்கி தபஸ் பண்ணும்போது துர்க்கா பகவதி அம்மன் மோர் விற்கும் இடைச்சியைப்போலே வந்து ஸான்னித்யமாகி, "வாராய் குமாரா" என்று ஒரு எலுமிச்சங் காயை கையிலே கொடுத்து, "இந்தக் கனியை சமுத்திரத்தில் வத்தப்பண்ணு; இது வத்திப்போம். ரதகஜ துரகபதாதி களெல்லாம் தாண்டிப்போய் பின் பெருக்வென்றால் பெருகும்" என்று வரங்கொடுத்தாளம்மன்.

1. பொரவி - புரவி - குதிரை

அதேமேரக்கி கனியை உருட்டி தாண்டிப் போனார். அப்போ ராக்ஷஸன் மாயையினாலே எல்லோரும் அழிந்து போனாப் போலே இருந்து, பின் இருந்த பேருக்கு அவர்கள் நீண்டு வந்து ஜம்புமாபுரி பட்டணத்திலே இருக்கும் மந்த்ரமாலையொடலே சொல்ல, அப்போது, வலம்புரிச் சங்கும் நாதமில்லாதபடியினாலேயும் தீப மணையாதபடியினாலேயும் இந்த மூன்று அடையாளமும் த்ருஷ்டாந்தமா யிருக்கிறபடியினாலேயும், வந்த சொன்னவோரே போடா மறவா, போடா கள்ளா என்று சொன்னாள். ஆனபடி யினாலே கள்ளரென்றும், மறவனென்றும் குலம் விளங்கிற்று.

இப்புறம், முந்தினபேர்கள் துர்க்காதேவியம்மன் கடாக்ஷத்தி னாலே சமுத்ரம் தாண்டி, முத்துத்துறையில் மூலபல பள்ளியாரே துர்க்காதேவி சொல்படிக்கி வணங்கி நிற்க, மூலபலப் பள்ளி யாரும், நீங்கள் போயி வாதவிராட்சன் முதலானவர்க ளெல்லாரையும் ஜயித்து திரும்ப வருவீரென்று வரங்கொடுக்க. அப்புறம் சமுத்ரம் தாண்டி வாதாவி ராஜ்ய கோடகிரியில் பாளய மெறங்கினார்கள்.

அப்போ துர்க்காதேவி அம்மன் வில்வீர வன்னியம் கையி லனுப்பிவிச்சுக்கொண்டு, மோர்விற்கும் பாவனை, "மாணிக்கத்துக்கு சரிக்கு சரி, முத்துக்கு ரெண்டுக்கொண்ணு, ஆணிப் பொன்னுக்கு அஞ்சுக்கொன்று, யெண்ணு".

இப்படி சொல்லுகிற விசேஷம் வில்வீரன் கேட்டு விரட்டி, அப்போயிம்[1] துர்க்கையம்மனைத்தானே, "நீ இடச்சி யென்னும் மார்க்கமாய் போயி வாதாவி ராஷஸனுடைய ரத்னாகிரிப் பட்டிணத்திலுள்ள அபிப்ராயமும், காமவல்லி முதலான ஸ்திரீகள் அரமனை ஆஸ்தானம் கண்டு, அவரவராய் அபாயம் முதலானதும் அறிஞ்சுவா" வென்னனுப்பினார்.

அப்படியே போய் அறிஞ்சுவந்து ருத்ரப்பள்ளியாருடன் சொன்னா ளம்மன்.

---

1. அப்போதும்

அந்த ராத்திரி வாதாவி ராக்ஷஸன் மனைவியான காமவல்லி அபசகுணமும் துஸ்ஸவப்நமும் கண்டு, வாதாவியொடனே சொல்ல, அந்த வாதாவி, வாயுவேக மன்னுகிர ஒட்டக்காரரை அனுப்(பி) திக்கு தேசங்களில் ஆராயு மளவில், கொடகிரி பாளத்தைக் கண்டு அந்தங்கோடி புலிகள் வந்து எறங்கி இருக்குது சொல்ல, அந்த வாதாவி, வேககாரரை அடிப்பிச்சு, சூரன் யென்றும் படைத் தலைவர் முன்னூறு ஆயிரம் பேரை விட்டு பாளயத்தி லுண்டான பேர்களை யெல்லாம் பிடித்து கட்டிக்கொண்டு, வரச்சொல்லி உத்தாரங் கொடுக்க அவர்கள் வருவது கண்டு, துர்க்கையம்மாள் வில்வீரனை யழைச்சு, சூரரை யெல்லாம் களபலி கொடுக்கச் சொல்லி உத்தாரம் கொடுக்க, அந்தப்படிக்கு களபலி கொடுத்தார்.

முதல் யுத்தம் கங்கப் பரிபாலன் ஜயிக்க இரண்டாம் யுத்தம் வஜ்ரபாகன் ஜெயிக்க, மூணாம் யுத்தம் நீலகங்கன் ஜயிக்க, நாலாம் யுத்தம் சம்புகுல வேந்தன் ஜயிக்க, அஞ்சாம் யுத்தம் காளியொடனே கூடப் பரந்த சங்கத்தை ருத்ரப்பள்ளியார் பாணப்பிரயோகம் பண்ணி ஒடுக்க, ஆறாம் யுத்தம் பரசுராமன் ஜயிக்க, ஏழாம் யுத்தம் காளி வந்து அடித்தபோது, துர்க்காதேவி, ஜயிக்க, எட்டாம் யுத்தம் வாதாவி ராட்சசனை வில்வீர வன்னியன் ஜயிக்க, இப்படி வாதாவி வேட்டையாடி பின் துர்க்காதேவியம்மன், மகாவிஷ்ணுவை நினைத்து முன்பட்ட வன்னியரையெல்லாம் அழிப்ப, அப்போ பேரு போர் என்றெழுத்திருக்கு மதிசயமும் அதன்மேல் கொள்ளைக்குப் போகச் சொல்லி, துர்க்காதேவி உத்தாரம் கொடுக்க, வில்வீர மகாராஜனாகிய ருத்திரப்பள்ளியார் ஆக்ஞா சக்ரப்பிரத்ஞா பரிபாலகனும் பிரும்மா விஷ்ணு ருத்திராதிகளொடனே முப்பத்தி முக்கோடி தேவர்களும் புஷ்பமாரி பொழிய, நாற்பத்தெண்ணாயிரம் ருஷீசுவராளும் ஸ்தோத்ரம் பண்ண, துந்திபி, பேரிகை, டமாரம், பூரிகை. நாகசாரம் திருச்சின்னம், எக்காளை, கொம்பு, தாரை, கின்னரி, தவண்டை, தவனச்சங்கம், கனகத் தப்பு, வலம்புரி(ச்) சங்கம். டக்கை, மத்தளம், மேளம், தாளம், (அனேக) பிருது, பதினெட்டு மேளவாத்தியமும், மத்து முண்டான ஸம்ப்ரமத் தாடம்பரத்துடனே சமுத்ரகோஷனை பண்ணி, ப்ரளய காலமாக அனேகங் கோடி மஹா சேனைக ளொடனே சாகிநடந்து வரும்போது, வாதாவி ராக்ஷஸன் மனைவி யான காமவல்லீயாகிறவள், தன் தமயன் வீரசிங்கனைப் போயி, வில் வீர மகாராஜனை எதிர்கொண்டு கண்டு, ராசவட்டம் பண்ணச் சொல்லி அனுப்பிவைத்து, தாமும் அருகே நின்று எதிர்கொண்டு

நாணமுடனே அழச்சுவந்து அஞ்சு குமாரர் வன்னியர்க்கும் எண்ணா யிரம் பெண்களை கல்யாணம் பண்ணிக் கொடுத்து மத்துமுண்டான வில்வீரர்க்கு ரத்னாகிரியிலுண்டான அனேகங்கோடி பெண்களை அவரவர்களுக்கு கல்யாணம் பண்ணியும், பின்னும் அவரவர்களுக்கு பெண்களை உத்தாரங் கொடுத்தும் விருந்து சோடித்து சந்தோஷ மாக தனது சொந்தம் பாராட்டி உறவு கொண்டாடியும் காமவல்லீ மகனுக்கு வில்வீரனாகிய ருத்ரப்பள்ளியார் பட்டாபிஷேகம் சூட்டி வைத்து, சமுத்ரம் தாண்டிவர துர்க்காதேவி அம்மன் வாழ்த்தி அனுப்பிவைக்க அனுப்பிச்சுக் கொண்டு, ஜம்பு மஹாபுரி பட்டணம் வந்து சேர்ந்து முதலரமணையில் வில்வீரனாகிய ருத்ரப்பள்ளியார் மந்திரைமாலை அம்மனும் மனோகரமாக வாழ்ந்திருக்க, அஞ்சு குமாரர்களும் எண்ணாயிரம் பெண்கள் அவரவர் அரமணையிலே வாழ்ந்திருந்தும் கைலாஸகிரி காவல் காத்தும், கம்பாநதி காத்தும் காமாக்ஷியம்ம வரன் பெத்தும், காஞ்சீபுரத்தி லுண்டான பூத வேதாளங்களை சிறையில் வைத்தும், காஞ்சீபுரம் குடியேத்தியும், ஓடாத தேர் ஓட்டிட வைத்தும் அம்மன் பூண்ட முத்துமாலையும் பஞ்சவர்ணப் பாவாடை வாங்கியும், சீயாழி மறையோனுக்கு இடையூறு கொடுத்தும், அகர மளித்தும், மூவாயிறம் பள்ளி பின்குடுமி பூண் நாலு தேவி அனுக்ரகத்தினாலே வேதமோதி விளங்கிய சர்வ ஜீவ தயாபரனான வில்வீர பராக்ரமனான ருத்ரப்பள்ளியார் குமார ராகிய நீலகங்கன், வஜ்ரபாகன், கங்கபரிபாலன், சம்புகுல வேந்தன், பரசுராமன் இவர்களாகமத்தை பூர்வம் நால்வேதத்துக்கு அஞ்சாம் வேதமென்றும் மஹாபாரதம் விளங்கினது.

அந்த சொச்சம் நின்னது வாதாவியை சயித்து, ருத்ரப்பள்ளியா ராண்டது வாதாவி, ரத்னாகிரிப் பட்டணம், ஈழ மேலெங்கை, ஹிமவத் பர்வதம், எட்டு திக்கும் அஷ்டதிக் பாலகர் காவலாகிய சம்பூத்வீபம் ஆதிசேஷன் ஸஹஸ்ரபணா மணி யுபரி சதுர்தச புவன மத்யலோக சம்பூத்வீப மகாமேரு தக்ஷிண பார்சுவ பரகண்ட ப்ரபஞ்ச தேசாதி தேசம், அங்க, வங்க, களிங்க, அவந்திகா பாஹ்லீகம், ஆந்த்ரம், ஆரியம், லாடம், ஒட்யாணம், பூஷணம், புளிந்தகம், பப்ரூரம், பாஞ்சாலம், பௌண்டரீகம், சௌனகம், சேரம், சோளம், பாண்டியம், காண்டவம், காம்போஜம், காந்தாரம், காச்மீரம், காப்பில்யம், ஸௌரம், சௌராஷ்ட்டிரம், ஸால்வீரம், சுகரம், கொளலம், கேரளம், கௌண்டகம், கிராதகம், கொங்கம், கொங்கணம், குந்தளம், குடாரம், குக்குதம், மகதம், கோஸலம்.

பூர்ஜரம், குளிசம், கோகர்ணம், ஜலதம், மராடம், வங்கம், துலுகம், வால்மீகம், வத்ஸரம், மத்ஸயம், மாளவம், மஹவம், மஹாராஷ்ட்ரம், லாடம், கர்நாடகம், காந்தாரம், காந்தாரம், காம்பில்யம், துளுவம் துஷ்டம், தூர்நேவணம், இப்படி விளங்கா யிருந்த தேசாதி தேசம் ஈழ மேலெங்கையும் தேரக் கண்டருளிய ராஜராஸேசுவரன் நவகண்ட சக்ரவர்த்தி, மலை கலங்கியும் மனங் கலங்காத வில்வீர பராக்ரம ருத்ரப்பள்ளியார் வரத்திலே வந்த நீலகங்கன் கங்க பரிபாலன் வஜ்ரபாகன் ஜம்புகுலவேந்தன் பரசுராமன் இந்த ஐவர் மறவில் வந்த பாரடப்பள்ளி யென்றும், துஷ்டப்பள்ளியென்றும், சிஷ்டப்பள்ளியென்றும், வன்னியப்பள்ளி யென்றும், அரசப்பள்ளி யென்றும், இப்படி ஐஞ்சுப் பள்ளியும் தேச தேசமெல்லாம் பரவி நிற்கும்.

பண்ணாட்டார் ஸம்கோதி கையில் பிருது பஞ்சவர்ணப் பாவாடையை வலங்கையார் பிடுங்கும்போது, சங்கோதி சேலம், அழகாபுரம் பண்ணாட்டாரொடன் மோரை செய்யும்போது, இடங்கைச் சமயம் பண்ணாட்டார் கூடும் சேலம் சீமை, எழுபத்தாறு நத்தத்திலுள்ள பண்ணாட்டார்களும் வெளியூர் நாடு முப்பத்திரண்டு கிராமத்திலுள்ள பண்ணாட்டார்கள், ஆத்து நாடு அறுவத்திநாலு நத்தத்திலுள்ள பண்ணாட்டாருடன், தம்தம் பட்டிமங்கலப்புரத் திலுள்ளோர்கள், ராசிப்புரநாடு, சேந்தமங்கலம், ஏழூறுநாடு பரமத்தி பள்ளி நாடு, மணலி நாடு, தறடிப்பாடு நாடு, பூந்தொரை நாடு, பூவ்வாணி நாடு, சாம்பள்ளி நாடு, வோமலூரு, அஞ்சுகர நாட்டிலுள்ளோர்களும், தர்மபுரி சீமையிலுள்ள வன்னியரும், தெங்கரைக் கோட்டை இது முதலாகிய தேசதேசத்துப் பண்ணாட் டார்களும் இடங்கைக் குள்ளாராகிய ஸர்வ ஜனங்களும், திக்கு திக்கு கூட்டம் கூடி நியாயம் தெரியாதபடியினாலே, சேர மண்டலம் சேர நாட்டில் திருவணி முக்தா நதி சூழிந்த சேலமாநகரம் சேந்த கர்ப்பூதா பரமாக இடங்கையார் வந்தெறங்கும் போது, வலங்கை யார்க்கும் இடங்கையார்க்கும் கை கலந்து, சண்டையாமென் றறிந்து, சேரமண்டலம் மூன்றாம் வீட்டிற்கு நாலாம் வீடாகிய செங்கோல் செலுத்திய கம்பள ராஜராஜேஸ்வரன் தேயைப் பநாதிபன், சிவுடுகுல தீபகன் முல்லை யீந்த மார்பகன், பதினெட்டா மன்னிய மிண்டன், நரலோக கண்டன், வம்ச நாராயணன், வம்ச மார்த்தாண்டன், சேர சோள பாண்டிய வல்லாள ராய மனோ பயங்கரன், மண்டல மதிக்கு மதிமுக வதனன், பனிரெண்டு கடகம்,

மத கஜம் படைத்த வர்னகுல தீரன், சதுர்வேத பாராயண தாதாசார்ய சிஷ்யநாகிய பட்டாபிஷேக பரிபூர்ண தயாபரநாகிய வெங்கடபதி நாயகனாரும், தளவாயி பெத்தள நாயகனாரும், மத்பஸ்தானத்திலிருந்து கொண்டு வலங்கைச் சமயக் காரியக் காரரை யழைச்சு, எங்கள் வலங்கை ஆகம புராணகதை யுண்டானதைக் கேட்டு, அதன்பின் இடங்கைச் சமயத்துக் காரியக்காரரை யழைச்சு, இடங்கைச் சமயத்துக் காரியக்காரரை யழைச்சு, இடங்கை யாகம புராணமும் உங்கள் பிறப்பு வளர்ப்பு உண்டான புராணங்களை அழைப்பிக்கச் சொல்ல, ஆத்துநாட்டாரதிபதியான நாடுசேவாக் கௌண்டரும், பாண்டலம் சிமெயில் ஆரூரிலிருக்கும் ப்ரும்ம வம்சத்தில் மனு விக்ஞான வேதாகம புராணம் இடங்கை வலங்கை சமய ஆகமும், இடங்கையார் பிறப்பு ளைர்ப்பும், வன்னிய புராணமறிந்த யக்ஞநாராயண தீக்ஷிதர் குமாரன் ராஜப் பிள்ளைய்யனை அழைச்சு வந்து விட, கம்பள ராயானாடன் பிரசங்கம் பண்ணுகிறான்: ''சுவாமி! ஆதி காலத்திலே இடங்கை வலங்கை என்கிற பேதம், பரமேஸ்வரன் பார்வதீ தேவியைத் தொட்டு வந்தது; அந்த ஆகமோதியபின் இரண்டாவது சிவனார் இடதுபாகம் பெறவேணுமென்று அம்மன் பாதாள கம்பா நதியில் அரிய தபஸ்பண்ணி பரமேச்வரோட வாமபாகம் பெத்தது மோதி, மூன்றாவது இந்த இடங்கைக் குடையவர் சிவனும் தேவேந் தரனுமாம்.

வலங்கைக் குடையவர் பிரும்மதேவனும், ப்ருகு மஹர்ஷி யுமாம்.

சரீரக் கூறில் ரக்த மாம்ஸம் சர்மம் நேத்ர கருமுழியும் இடங்கைக் கூறுமாம்.

எலும்பும் நரம்பும் மூளை நிணம் இது வலங்கைக்குச் சேர்ந்தது.

வலங்கைச் சாதி பத்து.

இடங்கைச் சாதி பிறப்பு வளர்ப்பு மோதியபின், இடங்கைப் பெரியோனாகிய பண்ணாட்டார் பிறப்பு வளர்ப்பு இப்படி என்றால், வன்னிய புராணம், பூர்வ காலத்தில் பரமேச்வரர் துவார பாலகருக்கு மூன்று பிறப்புச் சத்துருவாக வர சாபம் கொடுத்த ஹிரண்யன்

ஹிரண்ய கசபு என்றொரு பிறப்பு, இராவணன் கும்பகர்ணன் என்றொரு பிறப்பு, சிசுபாலன் தந்த வக்ர னென்றொரு பிறப்பு, இப்படி மூன்று பிறப்பு சத்ருவாக வந்த நாள் சொச்ச மிருந்தது.

இல்வலன் வாதாவி ராக்ஷஸனாய் பிறந்து, ஸ்வர்க மத்ய பாதாள லோகம் மூன்றும் கொள்ளையிடும்போது, ஸகலமான தேவரிஷி கணங்க ளெல்லாரும் கைலாசகிரியில் பரமேச்வரரோடு மொறை யிடும்போது, ஸ்வாமியார், அந்த க்ஷண ஜம்பு மஹாமுனீச்வரனை வரவழித்து, உம்மோட வரப்ரஸாத அக்னி குமார வன்னியனை அழைப்பிக்க வேணுமென்ன, அப்போ விச்வகர்மன் யாகசாலை உண்டுபண்ணினார்.

பார்வதீ தேவியம்மன் யிடது உள்ளங்கைக் குண்டமாக பரமசிவன் நெத்திக்கண் ணக்னியே ஹோமாக்னியாக, சிவன் திருமார்பினில் அணிந்த செங்கழுநீர் மாலையை வரவாங்கி, பிரம்மா வேத மோத, ஜம்புமஹாமுனி ஆகர்ஷண மன்த்ரத்யானம் பண்ணி, திருப்பாற்கடலில் அம்ருதத்தி லுதயம் செய்த நர நாராயண மூர்த்தியே, நீர் வன்னிய குமாரனாகிய இடங்கைக் கரசாய் தேவாதிகள் செறை மீள வேணுமென்று ஹோமாக்னியில் போட கருகருத்த மேலுயும், கருப்புச் சடையும் கட்டியக் கச்சையும், கையில் வில்லும், முதுகில் அம்பரா தூணியும், தோளில் முந்நூலும், மார்பி லணிந்த பஞ்சவர்ணத் தாவடையும், முத்து மாலிகை வர்ணத் தடுக்கும், செங்கழநீர் வாடாத மாலையும், பூசிய சந்தனமும், அரையில் வீரக் கிங்கணி வீரிட்டலற, கையில் வீர வாளும், பஞ்ச வர்ணப் பாவாடை வீச, புலிக்கொடி மேல்நோக்கிவர, ஜகஜெம்புக் கொடை நிழித்த [நிழற்ற] அகோரக் கோபத்தொடன் வில்வீரன் பறந்துநிற்க, சிவன் மந்த்ரோபதேசம் பண்ண, மஹா வஞ்சத்து வாதாவியை ஜயித்த வன்னிய குமாரனாகிய ருத்ரப்பள்ளியார் பிறப்பு ஆகையினாலே பஞ்சவர்ணப் பாவாடையும் அதிகலுப் புண்டாகா(வா)ஸனமும், ஜகஜம்புக் கொடியும், பஞ்சமுக தீவட்டியும் படைத்த இடங்கைப் பிரியோனாகிய பண்ணாட்டா ரென்று கம்பள ராயனாடன் ராசப்புள்ளை அய்யன் சொல்ல, வலங்கையார் வ்யாக்ரம் போலே சீறி யெழுந்து, "வித்வான் கட்டின கட்டா ளங்களுக்கு சம்மதியோ, காஞ்சீபுரத்திலே பிரமாணத்திலே ஒப்பிக்கச் சொல்லுமெ"ன்று, கம்பளராயனைக் கேக்க, கம்பள ராயனும் அவரவர்கள் சொன்னப்ரகாரம் ஒப்பிவையு மென்ன,

ராசிப்புள்ளை அய்யனும் சம்மதிச்சு, இந்தத் தளமே காஞ்சீ புரமென்று, பொன்னம்மன் சன்னதியில், இடங்கை வலங்கைத் தீர்வெழுத்து ரெண்டு மெழுதி, அக்னிப் பிரவேசம் பண்ண, வலங்கைத் தீர்வெழுத்து வெந்துபோச்சு; இடங்கைத் தீர்வெழுத்து வேகாதபடியிலே, கம்பளராயனு மதிக சந்தோஷமாகி, ராசிப் புள்ளை அய்யருக்கும் பண்ணாட்டாருக்கும் பகுமான முதலி, இடங்கைப் பெரியோ னென்றும் பிருதுடைய பண்ணாட்டாரை பட்டணம் மெரவணி பண்ணிவெச்சு அனுப்பிவிட்டார்.

பகு சந்தோஷத்துடன் தேச தேசத்துப் பண்ணாட்டா ரெல்லாரும் ஏகஸ்தராயி, நம்மோட தகப்பன் ஐம்புமஹாமுனிவர் ஹோமாக்னியி லுதித்த பண்ணாட்டார் வம்சோத்தாரணம் பண்ணப்பட்ட சம்பு மஹாமுனிவ ரிவராம்.

ப்ரும்ம வம்சம் சதுர்வேத பாராயணன், ஷட்சாஸ்த்ர நிருக்த ஸகலாகம புராணம், சாஸ்த்ரம், வைத்ய சாஸ்த்ரம், ஸாங்க்ய சித்தாந் தம் கணிதப்ரவீணரான அன்னத்வஜ அன்ன வாகன யக்ஞோப வீதாலங்க்ருத காயத்ரீ கவச ஸாவித்ரீ த்யான ஸரஸ்வதி வாக்யாதிகார ரான பூர்வசிகாப் ப்ராஹ்மண ஹோமகுண்டஸ் தாபனாசார்யப் ரதிக்ஞாகுண, ருக்வேதாத்யயன, ஹரிதகோத்ர ஆச்வலாயன சூத்ராதிகாரரான இரவாஸநூரராதிபன் க்ராமாந்தநாதன் ராஜ நாராயண பெருமாள் பாதம் மறவாத ராசப்புள்ளையய்யனவர்கள் ஐம்புமஹா முனிவரே இவராகியும் பண்ணாட்டார் குலகுருவாகியும், நம்முட வன்னிய புரோஹிதராகியும், நம்முட பண்ணாட்டார் குல வம்சாபி வ்ருத்திப் பண்ணும் தகப்பனாகிய ராசிப்புள்ளையய்ய னவர்களுக்கு தேசதேசத்து பண்ணாட்டா ரெல்லோரும் கூடி ஏகஸ்தராயி நிஜவர்த்தனை யெழுதுக் கொடுத்தான்:-

ஸ்ரீமத் ஸ்வஸ்தி சாலிவாகன சகாப்தம் 1615 கதகலியுகமானது 4794, இதில் செல்லாநின்ற ஸ்ரீமுக நாம ஸம்வத்ஸரம் தக்ஷிணா யனம் கார்த்திகை மாதம் க்ருஷ்ணபக்ஷம் புதவாரமும் பஞ்சமியும் பூச நக்ஷத்ரம் சுப்ரநாம யோகம் தைதுலா கரணம், இந்நாள் $20\frac{1}{2}$ நாழிக்குமேல் நவக்ரஹங்கள் நோக்குண்டான மீன லக்னத்தில் சந்த்ர ஹோரையில் ராஜஸ வேளையில் நிஜவர்த்தனை சாஸனப் பட்டயம் எழுதினதாவாம்.

சேரமாமலை சேரநாட்டில் திருவணிமுக்தா நதி சூழ்ந்த சேரமா நகரில் கிளிவளநாதச் சந்நதியில் அழகிய பொன்னம்மன் சாக்ஷியாய் வருஷம் ப்ரதியும் குரு காணிக்கை பெரிய குடிக்கு ரெண்டுபணம், சின்ன குடிக்கு ஒரு பணம், கல்யாணத்தில் தாரை வார்க்கிற இட்டநீர் பணமும், கட்டின ஏர் ஒண்ணுக்கு நால்வள்ள தான்யமும், ஆசந்த்ரார்க்கமாகக் கொடுத்த சாஸனப் பட்டயம்.

நீலகங்கன், வஜ்ரபாகன், கங்கபரிபாலன், சம்புகுல வேந்தன், பரசுராமன் இவர்கள் செந்ததியாக அழகாபுரம் வைபோகராயக் கவுண்டர், சேலம் முதலிக் கவுண்டர், அனதாரிப்பட்டி அனதாரிக் கௌண்டர், பர்வதக் கௌண்டர், செவிக் கௌண்டர், அய்யம் பேரிமா கௌண்டர், அயோத்யா பட்டணம் தேவராயக் கௌண்டர், நாழிக்கல் மங்காக் கௌண்டர், போனவப் பொனசயார், காங்கய குருவக் கௌண்டர், கந்தப்பம்பட்டி கந்தப்பக் கௌண்டர், கடகத்தூரு வாத்தியாக் கௌண்டர், புத்திரிக் கௌண்டர், சன்னகிரி ஓடநாழியிருசா கௌண்டர், வன்னயா கௌண்டர், வீரப்பாடி மந்தி சின்னாகௌண்டர், பாலம்பட்டி வடமலைக் கௌண்டர், கோரட கௌண்டர், வைரிசி வெள்ளை பெரமிச்சிக் கௌண்டன், தேவத்தாக் கௌண்டன், பிச்சப்புள்ளை பிச்சக் கௌண்டன், மல்லூரு மாணிக்கக் கௌண்டன், கூத்தக் கவுண்டன், அண்ணா மலைப் பட்டி சேருவை முத்தா கவுண்டன், பும்பாயி பெரியகுப்பக் கவுண்டன், ஆண்டிக் கௌண்டன், அம்மாபாளையம் அப்பியம்பட்டி ராயக் கவுண்டன், பிச்சக் கவுண்டன், வேங்காம்பட்டி குழந்தைக் கௌண்டன், செந்தலைக் கௌண்டன், மூக்குத்தி தாஸன், வாழக் குட்டைப்பட்டி புத்தக் கௌண்டன், சின்னாக் கவுண்டன், கல்போரை சின்னப்பாலி கௌண்டன், சேவா கௌண்டன், எளம் புள்ளை எளங்கவுண்டன், மோந்தக்குட்டை கவுண்டன், நயநாம் பட்டி சேர்வை நயனாக் கௌண்டன், கொக்கார் கௌண்டன், வெள்ளைய்யா கௌண்டன், அய்யம்பெருமா கௌண்டன், வட மலைக் கௌண்டன் நயனாக் கவுண்டன், (சேவா கௌண்டன்), நல்லாரய்யன்பட்டி பூல்வாக் கௌண்டன், குப்பகௌண்டன், வடக்கு மொகவேர் மச்சிக் கௌண்டன், கரியபெருமாள் கடம்ப கௌண்டன், அரிய கௌண்டன், நயனா கௌண்டன், வள்ளயா கௌண்டன், வெடிச்சி கௌண்டன், மொண்ணயா கௌண்டன், நல்லா கௌண் டான், வடமலை கௌண்டான், மத்துமுண்டான ஹவின் முறை யரும், வெளியூரு நாடு பச்சையா கௌண்டன், புளிவாண்டே இருசா

கௌண்டன், நயனா கௌண்டன், சின்னா கௌண்டன், முருதி கௌண்டன், மனாத கௌண்டன், தேவராட கௌண்டன், மத்து முண்டான உறவின் முறையாகும், அத்திநாடு சேவாகௌண்டன் அம்பாயிரக் கௌண்டன், வாதவ கௌண்டன், கற்புடையாள் உத்தமப்பன் மத்துமுண்டான உறவின்முறையாரும், ராயப்பா நல்லூரு காங்கய உடையார், வெங்கடாத்திரி உடையார் மத்தும் பன்னிரண்டு ப . . . . த்திலுள்ள உறவின் முறையாரும், மங்கள புரம் குருநாதப் பிள்ளை, மத்துமுண்டான உறவின்முறையாரும், ராசீபுரம் பெரமச்சி கௌண்டன், உடையா கௌண்டன், மத்து முண்டான உறவின் முறையாரும், சேந்தமங்கலம் உள்ளச் சொல்ச்சகாரன், குள்ளத்தாண்டவ கௌண்டன், ஏனூரு மாணிக்கக் கவுண்டன், பரமத்தி சீமை வேலாயுதம் பாளையம் ஆனந்தக் கௌண்டர், மத்தும் இடநாடு பாண்டு தேசத்திலுண்டான உறவின்முறையாரும், துர்க்கம் வேங்கடாத்திரி கௌண்டர், பருத்திப்பள்ளி பாலாண்ட கௌண்டர், தாழுரூர் இடநாட்டு கிரிசா கௌண்டன் வைகுந்தம் வைகுந்தமய்யப் பெருமாக் கௌண்டன், வேலநத்தம் வடமல கவுண்டன், அடயான்பட்டி செங்கோட கவுண்டன், திருமல கௌண்டன், தண்டகுல பாணி குலமாணிக்யம் சேவி கௌண்டன், தாண்ட கௌண்டன், பீமா பட்டி வெங்கா கௌண்டன், வேலப்பா கோவில் பரித்திப்பள்ளி நாடு முப்பத்திரெண்டு கிராமத்திலுள்ள உறவின் முறையாரும், இரணாபுரம் பூவா அணி நாடு அரசராமணி அனகவுண்டன், கன்னியா கௌண்டன், ராமகௌண்டன், குன்னகுளம் வாத்தியா கௌண்டன், இடப்பாடி பிச்சகௌண்டன், அடயூரு நயினா கௌண்டன், ஆதியாக் கொத்தன், முத்தாக் கொத்தன், சவந்தா கௌண்டன், சித்தூரு, ஆரணி, வேலூரு, இருப்பாள சமுத்திரம், கச்சி, வளகுளம் கௌண்டன் முன்னுள்ள உறவின் முறையாரும், வோமலூரு அமரகுன்னி தாண்டவராய கௌண்டன், அத்திக் குட்டை பெரம கௌண்டன், அழகப்ப கௌண்டன், மெச்சிறி குட்டையா கவுண்டன், தலைக்கால் வரிசாக் கவுண்டன், தீவடி கௌண்டன், முன்னும் வோமலூரு சீமையிலுள்ள உறவின் முறையாரும், சாம்பள்ளி உத்தண்டிக் சேர்வக்காரன் உத்திரைச் சேர்வக்காரன், கௌளத்தூர் நல்லாக் கவுண்டன், மத்தும் சாம் பள்ளி நாட்டிலுள்ள உறவின் முறையாரும், அந்தியூரு மந்தி கவுண்டன், இருசா கௌண்டன், அரிச்சி கௌண்டன் அங்கிலுள்ள

உறவின் மொறயாரும், தெங்கரை கோட்டை வடமலை கௌண்டன் கோனப்ப கவுண்டன், அந்த சீமையிலுள்ள உறவின் முறை யாரும், தர்மபூரி கோனேரி கவுண்டன், கடகத்தூரு பச்சையா கௌண்டன், மத்து மந்த சீமையிலுள்ள உறவின் மொறையாரும், காவேரி பட்டணம் அனிச்சயா கௌண்டன் தட்டக்கல் கோனேரி கவுண்டன், நடுக்கல் குப்பக் கௌண்டன், திருப்பத்தூரு மாணிக்க கவுண்டன், அனிச்ச கௌண்டன், மோத்தை கவுண்டன், உத்தர தேசத்திலுள்ள வொறவின் முறையாரும், கடிக்கல் தேசத்திலுள்ள உறவின் முறையாரும், தென் திரை மேல்திசை, இந்த நால்தேசத்து எல்லக்குள்ளயிம் சேது முதலான பஞ்சாசத் கோடி யோஜன விஸ்தீர்ண பூமண் டலத்தி லுண்டான வொறவின் முறையா ரெல்லோருக்கும் சம்புமா முனிவரல்லோ தகப்பன், இந்த யுகத்தில் நம்ம பண்ணாட்டார் வம்சம் அபிவ்ருத்தி யாக்கி வைக்கும் ரெண்டாம் சம்புமா முனிவராகிய யக்ஞநாராய தீக்ஷிதனய்யனவர்கள் குமாரன், ராசப்புள்ளை அய்யனவர்களுக்கு நிஜவர்த்தனை ப்ரஸன்ன பட்டயம் எழுதிக் கொடுத்தது.

வருஷம் ப்ரதியும் பெரியகுடிக்கு ரெண்டு பணம், சின்ன குடிக்கு ஒரு பணம் கல்யாணத்தில் தாரை வார்க்கிற யிட்டநீர் பணமும், கட்டண ஏரொண்ணுக்கு நால்வள்ள தானியமும், 'ஆசந்த்ரார்கமாக புத்ரபௌத்ர பாரம்பர்யமாய் குடுத்து வருகி றோம்.

இதில், தழிக்கமானால் அந்த ஊரு கௌண்டன் வாங்கிக் குடுக்க தக்கவன். கல்லுமுள்ளும் பரத்தக்கிலும் பள்ளி பரத்துக் கத்தவது. ஆகையினாலே காவேரியும் கல்லு முள்ளளவும் ஆகாசம் பூமியு முள்ளளவும் ஆசந்த்ரார்க்கமாக புத்ர பௌத்ர பாரம்பர்யமாயி குடுத்துவார்க்ரோ மன்னு நிஜவர்த்தனை சாஸனம் எழுதிக் குடுத்தோம்.

தானாதி விநிமயவிக்ரய யோக்யமாக ஆசந்த்ரார்க்மாக புத்ர பௌத்ர பாறம்பர்யமாக நீங்க ளனுபவிக்க கடவீராகவும்

இந்த கீர்த்தி ப்ரதிஷ்டை பண்ணாட்டார் ஸகலமான பேரும் கூடி எழுதிக் குடுத்த சாஸனம், "அயோத்யா மதுரா மாயாகாசி

காஞ்சி அவந்திகா புரீத்வார வதீசைவ ஸப்தைதே முக்தி தாயகா"
இப்படிக் கொத்த ஏழு பட்டணங்களிலேயும், சிவ பூஜை விஷ்ணு பூஜை கோதாநம் பூதாநம் குருபூஜை கன்னிகாதானம், அன்னதாநம் பண்ணின பலனுண்டு.

இந்தப்ரகாரம் நடப்பியாமல் யாதா மொருவன் விகாதம் பண்ணுகிறானோ அவனும் பண்ணவேணு மென்னு மனஸ்லே நினைக்கிறவனும் வாக்குலே சொல்றவனும் இந்த மூணு பேருக்கும் மென்ன தோஷம் வருமென்னா, சிவஸ்தலத்திலே கங்கைக் கரையிலே ஏழு காராம் பசுவுக் கொன்ன தோஷம் அச்வஹத்யை, ப்ரும்ம ஹத்யை, ஸ்த்ரீஹத்யை, சிசு ஹத்யை, அஞ்சு மஹா பாதகங்கள் பண்ணினால் என்ன தோஷமுண்டோ அந்த தோஷ மநுபவிக்கக் கடவர்.

இன்னும் ஏழாம் நரகத்தில் ஏழாம் நரகத்திலே போகக் கடவராகவன.

இதுப்படி பண்ணாட்டு ராஜ்யமதில் எழுதிக் கொடுத்த சாஸனப் பட்டியம் காமாக்ஷியம்மன் தொணை.

ஸ்ரீஸாம்பார்பணமஸ்து. மங்கள மஹாஸ்ரீ

ஸ்ரீமத் ஸகல குணாதிசயம் படைத்த மஹா தபாஸாடைய சம்புமஹா முனிவர் வரப்ரஸாதியாகி கைலாஸகிரி கோவில் கொண்டோர் ஹளான மஹாவிஷ்ணுவானவர் தம்முடைய பாதார விந்தத்துநாலே அளக்கப்படாநந்த பூலோக மெங்கும் அசயாமல் காத்து, ஜயஸ்தம்பம் நாட்டிவிக்கும் வன்யகுல மண்டலாதீச்வர ரானவர் கண்டரிர்கண்டன், கொண்டரிர் கொண்டன், வண்ட ராவுத்தன், உத்தண்ட கோலாஹலன் ஸமயகுல ஸித்தாங்க தீரநாந்ய மஹா பராக்ரம சூராதிசூரனை மதியாதவன்ஸிய பெரிமாள் மணிமகுட முடிமாலை சூடும் மநோ பயங்கரரான ஏழு மேலெங்கை தெரகொண் டருளிய ராஜாதிராஜன், ராஜ பரமேச்வரன், ரகண்ட சக்ரவர்த்தி, மலை கலங்கிலும மனங் கலங்காத வில்வீர பராக்ரம தீரனான தேவர்கள் ஸ்நேகிதன் தேவேந்த்ரன் ஸம்பந்தி மந்திர மாலையம்மன் கர்ப்ப சுதாகரன், பள்ளியென்றும் பேர் படைத்து, படத்திஜோர்களான சதுகோடி

சதவர்ஷமான அக்நிபாணம் பெத்தோர்களான சங்கநிதி, பத்மநிதிக் கொடைய குபேரனை பொக்ஷமாகப் படைத்தோர் களான வருணனும் வாயுவும் ஸாரதியாக மேகப் பொரவி பூட்டிய இந்த்ர விமானத் தேர் படைத்தோர்களான விநாயகர் கௌயவன் வீரேச்வரன் தமயன் சம்பு மஹாபுரி பட்டணம் செழிக்க வந்தோர்களான அகஸ்தியன் கமண்டலம் கங்கா ஜலத்தை காவேரி யாறாக்கி கரைகண்ட வல்லோர்களான அக்னிப் புரவியும், வெள்ளை யானையும், தங்கக் கொடையும் வெள்ளிக் கொடையும் ஜெகஜம்புக் கொடையும், ஈரட்டு வெண்சாமரம், வீர மல்லாரி, விஜயமல்லாரி, படைத்த படைகொண்ட ராஜாளி ரெட்டைத் தீவட்டி, பஞ்சமுக தீவட்டி, பஞ்சவர்ண பாவாடை, வர்ணத் தடுக்கும் செங்கழுநீர் வாடாத மாலையும் பூண்ட வன்யகுல ராஜன் கோழிக் கொடியும், புலிக்கொடியும், தண்டையும் வெற்றிப் பதாகையும், வீர கிங்கிணியும், ஆறுகால் பீடமும், புண்டரீ காஸனம் படைத்த பூலோக தேவேந்த்ரரான பேரிகை, டக்கை, மல்லாரி, துந்துபி, பேரிசை, திரிச்சின்னம், நகசரம், பூரிகை, டமாரம், தவண்டை, தவளச்சங்கம், கனகதப்பு, வலம்புரிச் சங்கம் அதிகபிருது பதினெட்டு மேளவாத்ய பிருதுள்ளோர்களான மந்த்ரவாள், சத்த்ராயுதம், வாங்கு வலயம், எறியம்பு, வளைதடி, சக்ரம், சாமித்ரோக வெண்டயம், அம்பும்வில்லும் அம்பராத் தோணியும், அஸ்த்ர சஸ்த்ர மென்னும் பதினெட்டாயுதம் படைத்த பண்ணாட்டா ரென்னும் பள்ளிகளானோர் சுப்ரஷ்மண்ய ஸ்வாமியாரேயும் துர்க்காதேவி யம்மனேயும் படைத் தலைவராகப் படைத்து பதிநாலுலகம் விண்ணோடு காத்தோர்களான யமனுக் கஞ்சி அடைக்கலம் புகுந்த சீயாழி மறையோனுக்காக யமனைத் துரத்தி (வி)ரட்டி, அறுபத்தி நாலடி கம்பத்திலேறி நம்னேபசாரித்த தீரரான நாரத பகவான் ராஜவட்டத்தில் அந்தணனென்னும் வேத வேதியர்க்கு ஆயிரம் அகரம் தானம் கொடுத்து அதிக வரம் பெத்தோர்களான முன்னூலு மார்பின் பின்குடுமி யாகரன் தேவி யனுக்ரஹத்தினால் வேத மோதி விளங்கிய பெரியோர்களான கௌதமா ரிஷி கன்னிகை அபிமானம் காத்தோர்களான அக்னியில் பிறந்து அம்பொரம் கொண்டு, கண்டனாடு கொண்டு கொண்ட நாடு விடாத குபேரரான வல்லாளை விண்ணு மகுடம் துணித்து மகாபர்வதம் கைக்கொண்டோர்களான துஷ்டர் கண்டன், துரந்தரி கரன் வாதாவி ரத்னகிரி பட்டணம் கொள்ளையிடும்போது,

ளாதாவி மனைவி காமவல்லி வில்வீர மஹாராஜனாகிய ருத்ரப் பள்ளியார் நாணமுடன் எதிர்கொண்டு கண்டு, தன் மகள் எண்ணாயிரம் பொங்கள் உம்முட குமாரர்க்கு காணிக்கையென எண்ணாயிரம் பொங்களையும் தம்முடைய குமாரர்க்கு அஞ்சுபேருக்கும் பாணிக்ரஹனம் பண்ணி, இன்னு மநேகம் கோடி பேருக்கு அநேகங் கோடி பொங்களை கல்யாணம் பண்ணியும், பட்டணத்திலுள்ள அநேகம் பெங்களை அநேகம் பேருக்கு உத்தாரம் கொடுத்து, காமவல்லி மகன் மேஷனுக்கு பட்டாபிஷேகம் சூட்டி ஸ்திரம்ஜீவி பட்டமும் கொடுத்து வீரதீர புரந்தரன், வீரதீர பராக்ரமன் வீர மார்த்தாண்டன், வீர கேஸரி வில்வீர மகாராஜனென்னும் ருத்ரப் பள்ளியார் ஜம்புமஹாபுரீ பட்டணம் நோக்கி ஸமுத்ரகோஷணம் பண்ணி, திரும்பும்போது பெருமாளும் ப்ரும்மதேவனும் முப்பத்தி முக்கோடி தேவர்களும் புஷ்பமாரி பொழிய நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிச்வராளும் ஸ்த்தோத்ரம் பண்ண ஸமுத்ராதேவியம்மன் ஸரஸ்வதி தேவியம்மன், இந்த்ராணியம்மன், லக்ஷ்மி தேவியம்மன், சந்த்ரமதியம்மன் இவர்கள் அன்னம் கேட்டவர்க்கு அன்னம், பால் கேட்டவர்க்குப் பால், நெய் கேட்டவர்க்கு நெய், தயிர் கேட்டவர்க்கு தயிர், மோர் கேட்டவர்க்கு மோர் இப்படி வழங்கும் அநேகம் கோடி ரத கஜ துரக பதாதிகளொடனே ப்ரளய கால ருத்ராவ தாரமாய், துந்துபி, பேரியை, நாகஸ்வரம், பூரிகை, திருச்சின்னம் எக்காளை, கொம்பு, தாரை, கின்னரி தவளச் சங்கம், கனக தப்பு தவண்டை, உடுக்கை, மத்தளம், மேளத்தாளத்தொடன் மத்து முண்டான ஸம்ப்ரம தாடம்பரத் தொடன், சம்புமாபுரீ பட்டணம் நோக்கி வரும் வீராதி வீரரானவர் முடி பொருத்த, மூலராஜாக்களும் சேர சோழ பாண்டிய னெதிர் கொண்டு கப்பங் கட்ட கங்கை கொண்டான் சோழன் திருமுடி காத்தோர்களான காஞ்சீபுரம் ஏகாம்பரநாதர் பாதம் பணிந்து அங்கிலுண்டான பூத போதாங்களை பிடித்து, கழுவேற்றி, காஞ்சிபுரம் குடியேத்தி, ஓடாத தேரை யோட்டினவர்க்கும் வன்னியகுல தீரரான பாதாள கம்பா நதியிலும் காமாக்ஷியம்மை பாதார விந்தம் பணிந்து, முத்து மாலையும் வாங்கி வாமபாகத்தில் வரம்பெத்த இடங்கைப் பெரியோன் இடங்கைக் கரசன் இடங்கைக் கதிபன், ஆக்ஞா சக்ரப்ரதிஞா பரிபாலன், நீதிகார்ய துரந்தரன், ஸர்வாமி மானம் காத்தவர் ஸகல தர்ம பரிபாலகர் ஸகல ஸாம்ராஜ்ய லக்ஷ்மி கடாக்ஷி நிவாஸர், ஜக தலப்ரஞாதிபன், செல்வக் குபேரன், வம்ச நாராயணன், வம்ச

மார்தாண்டன், வம்ச பரிபாலன் வம்ச சிந்தாமணிகரான ஏழெட்டம் பத்தாறு தேசத்து இடங்கை பள்ளயென்னும் பண்ணாட்டுடையவர், சிவஸமய பரிபாலகர், சிவபூஜா துரந்தரர், விபூதி ருத்ராக்ஷமாலிகா பரணர், சிவஸமய விஷ்னுஸமய தேவப்ராஹ்மண காரிய துரந்தர ரான அரிபூஜை, சிவபூஜை, குருபூஜை மறவாதே அன்னதான வநோதரான அதிக வரம்பெத்த அகண்டித லக்ஷ்மிப்ரஸன்னரான மஹாமேரு ஸமான தீரரான எழுகரை நாட்டு பண்ணாட்டார் அழகாபுரம் இது நாட்டோலை வக்கனை விவரம் - கனககிரி முனிவர் துணை.

நீலகங்கன் ரெத்திலே வந்தவாள் என்ற பள்ளியர் க்ஷிர நதிக்கு உத்தரபாகம் க்ருஷ்ணாபர்யந்தரமும் இருந்த வன்னியர் கிருஷ்ண வன்னியர்.

அந்த தேசம் வன்னியருக்கு கோத்ரம் பத்மகோத்ரம், ஜம்பு கோத்ரம், ப்ருகு கோத்ரம், ஸத்ய கோத்ரம், நித்ய கோத்ரம்; இந்த சொன்ன ஸ்தலத்திலே இந்த அஞ்சு கோத்ரக்காரரு மிருப்பாள்.

வஜ்ரபாகன் வம்சத்திலே வந்தவாள் துஷ்டப்பள்ளி ஜம்பு வன்னியர் க்ஷீரநதி முதல் கொண்டு, தக்ஷிண பினாகினீ மட்டுக்கும் இருப்பாள். அந்த ஜம்பு வன்னியர் கோத்ரம் முனிவர் கோத்ரம், நிர்மல கோத்ரம்; இந்த சொன்ன ஸ்தலத்திலே இந்த அஞ்சு கோத்ர காரரு மிருப்பார்.

கங்கபரிபாலன் சிஷ்டப்பள்ளி ப்ருஹ்ம வன்னியர் தக்ஷிண பிநாகினீ முதற்கொண்டு காவேரி பர்யந்தரம் இந்தப் ப்ரும்ம வன்னியர் தாம். இவர்கள் கோத்ரம் பரமகோத்ரம், வசு கோத்ரம் வன்ய கோத்ரம், தனஞ்ய கோத்ரம், க்ருஷ்ண கோத்ரம் - இந்த, சொன்ன ஸ்தலத்திலே இந்த அஞ்சு கோத்திரக்காரரும் இருப்பாள்.

ஜம்புகுல வேந்தன் வன்னியப்பள்ளி. கங்கவன்னியர் காவேரி முதற்கொண்டு சேதுபர்யந்தரம் கங்கவன்னியர்தாம், அவர்கள் கோத்ரம் கந்தர்வ கோத்ரம், கமண்டல கோத்தரம், கௌமாரி கோத்ரம், நள கோத்ரம், கந்த கோத்ரம், இந்த சொன்ன ஸ்தலத் திலே இந்த அஞ்சு கோத்திரக் காரரும் இருப்பாள்,

பரசுராமன் சந்ததி - அரசப்பள்ளி இந்த்ரவன்னியர் சிதம்பரத்துக்கு பூர்வபாகம் சமுத்ரம் மட்டுக்கும். இந்த்ரவன்னியர், இவர்கள் கோத்ரம் இந்த்ரகோத்ரம், வீரகோத்ரம், விஜய கோத்ரம், தாரா கோத்ரம், ததிகோத்ரம்; இந்த சொன்ன ஸ்தலத்திலே இந்த அஞ்சு கோத்ரகாரரும் இருப்பாள்.

இந்த ஐவரும் அக்னியில் பிறந்த பேர்கள்; இந்த ஐவருக்குள்ளராகிய குலங்கள் வன்னியர், நகதகர், கம்மாளர், எகிலியர், எடையர், வேடர், கள்ளர், மொறவர், சக்கிலியர் ஆக குலம் எட்டு.



# வலங்கைச் சரித்திரம்

## பாயிரம்

கனம்பொருந்திய கலனெல் காலன் மைக்கிஞ்சித்[1] துறைய வர்கள் கொடுத்த கட்டளைதானே வேதநாயக வேதாகம சிரோ மணியாரை, வலங்கை யிடங்கைச் சாதியாருடைய சரித்திரத்தைக் கூடினமட்டு மிந்தப் பொஸ்த்தகத்திலே விபரமுந் திட்டமுமாக வெழுத யேவி விட்டுது.

ஆனபடியினாலே, யிதற்கு முந்தின பொஸ்த்தகத்திலே கம்மாளருடைய பிதாவாகிய விசுவகன்மாவின் சரித்திரத்தையு மதின் தலைவரிசையிலே யொரு பாயிரத்தையு மெழுதினார்.

அந்தப் பாயிரமே யிந்தப் பொஸ்த்தகத்துக்குஞ் செல்லும் என்றாலு மதிலே வலங்கை யிடங்கை யென்று சொல்லப்பட்டது ...... கம்மாளரையு மாத்திரஞ் சார்ந்து நிற்குது.

இவ்விடத்திலே, யதினர்த்தத்தை யப்படி நிதானிக்கக்கூடாது.

வலங்கை யென்கிறது, வெள்ளாளரையு மவர்களைச் சேர்ந்த சகல சாதியாரையுஞ் சார்ந்து நிற்கும்.

வலங்கை மாற்றா ரென்கிற சொல் மாத்திரம், ...... சேரும்.

இடங்கை யென்றால்க் கம்மாளரையும் மவர்களைச் சேர்ந்த சகல சாதியாரையுங் காட்டும். இதைப்பற்றி யிந்தப் பொஸ்த் தகத்திலே ...... கம்மாளரையு மாத்திரங் காட்டுகிறது போதுமென் றிராமல், வலங்கையைச் சேர்ந்த சில சாதிகளையு மிடங்கையைச் சேர்ந்த சில சாதிகளையு மிவர்களுடைய பூறு வோத்திரங்களையுஞ் செய் கிறிகைகளையும் விபரித்துக் காட்டி,

---

1. Colonel Colin Mackenzie

யிதற்கு வலங்கைச் சரித்திர மென்கிற பேரு மிட்டபடியினாலே, அலாதியாக விங்கே சொல்லப்படுகிற பாயிரத்தையு மித்தோ டெழுதவேண்டிய தாச்சுது.

இதிலே, வலங்கை, யிடங்கையாகிய சகல சாதிகளுடைய விருத்தாந்தங்களையு மெழுத வேணுமானால், மகா விறுமாண்ட[1] மாயிருக்கு மென்பதைப் பற்றிச் சிறுதுகளை மாத்திர மந்தந்த இடங்களிலே சுருக்கமாகக் காட்டி வைத்திருக்குது.

பின்னையு மிந்தப் பொஸ்த்தகத்திலே ஒவ்வொரு சாதியா ருடைய சரித்திரமுந் தனித்துத் தனித் தலாதியாக வராமல், எல்லா மொன்றோடோன்று கலந்து வரும்.

அந்தந்த இடங்களிலே சிலருடைய சரித்திரங்களை ருபகாரப் படுத்துகிற நிமித்தியமாக சில திஸ்ட்டாந்திரமான கதைகளைக் கொண்டு வந்தொப்பிவித்திருக்கும் பின்னையும் வலங்கைச் சரித்திர மென்கிற இந்தப் பொஸ்த்தகத்திறுடைய நாமத்தின்படியே வலங்கை அதாவது முந்தினவர்கள் அல்லது பிரதானமானவர் களாகியவெள்ளாருடைய பூறுவோத்திரத்தைத் தானே முதமுதத் துவக்கமாகக் காட்டவேண்டியிருந்தாலும், அந்தப்படி செய்யப் படவில்லை; ஏனென்றால், வலங்கை யென்று சொன்னவுடனே உள்ளான அற்தத்தை யொருத்தருங் கவனியாமல், வலங்கை மாற்றாராகிய ...... சகல பேர்களுஞ் சிந்திக்கிறார்கள்.

இதுவு மல்லாமல், வலங்கையென்கிற சத்தத்தை ...... தங்கள் சாதிக்குச் சங்கையாக மேலே போட்டுக்கொண்டு அந்தப் போலே தாங்க ளெப்போது பிழைக்கப்பட வேணுமென்று ஆசையா யிருந்து, எப்போதுந் தங்களை வலங்கை மாற்றார் வலங்கை மாற்றாரென்று சொல்லிக் கொள்ளுகிறபடியினாலே, வெள்ளாளர் தங்களை வலங்கை யென்று சொல்லக் கூச்சப்பட்டு, ...... வலங்கையாகவுங், கம்மாளனை யிடங்கையாகவு மிஸ்த்தாபித்துப் போட்டு, தான் துரையைப் போலே கவலையற் றிருந்து கொள்ளுகிறான்.

---

1. பிரமாண்டமாய்

இவர்க ளிருவருந் தங்கள் தலைமை யுடைத்துக் கொண்டு சண்டை போட்டுக்கொள்ளுகிற வேடிக்கையை, யிவன் பொது மனுஷனைப் போலே யிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறான்.

இது முகாந்திரங்களைப் பற்றி யிந்தப் பொஸ்த்தகத்தின் துவக்கத்திலே வலங்கை மாற்றாராகிய ...... பூறுவோத்திரத்தைத் துவக்கமாகக் காட்டியிருக்கும்.

அப்புறம் மற்றவர்களுடைய சரித்திர மெல்லா மொன்றின் பிறகாலே யொன்றாய் வரும். அதுகளை யெல்லா மிருபத்து நாலு அதிகாரங்களாக இந்தப் பொஸ்த்தகத்திலே காண்பித்திருக்குது.

க) இராவணனுடைய ...... மல்லியப் பெருமானுக்குப் பிறந்த சாம்புகச் சாம்பான், பிறவிடைச் சாம்பான், தியாகச்சாம்பா னென்கிற மூன்று பேருடைய சரித்திரங்கள்.

உ) மாரியம்மை யென்கிற ...... சரித்திரம்.

ங) இந்த மாரியம்மையைப் பெற்ற ஆதி ......யைத் தொட்டும், அவள் புருஷனாகிய பகவ ரென்கிற பிராமணனைத் தொட்டும், அவர்கள் பெற்ற ஏழு பிள்ளைகளைத் தொட்டுஞ் சொல்லப்பட்டிருக்கும். அதில் கடசிப் பிள்ளையாகிய கபிலருடைய செய்தி சற்று விஸ்த்தாரமாகக் காட்டியிருக்கும்.

ச) பிராமணாளுக்கும், வள்ளுவச் சாதியாருக்கு மிருக்கிற எதிரிடையு மவர்க ளொன்றுக்கொன்று காண்பிக்கிற பங்காளித் தத்துவத்தையும், அத்தோடேகூட, வள்ளுவருக்கும் பறையருக்கு மிருக்கிற வித்தியாசங்களையுங் காண்பித்திருக்கும்.

ரு) பட்டீசுரத்துக்குங் கும்பகோணத்துக்கும் நடுவாக அரண்மனை யல்லது உப்பரிகையை யுண்டுபண்ணின சோழனுடைய சரித்திரம்...

சு) தஞ்சாவூருக் கடுத்த விளாறுக்கோட்டையிலே, சற்றுப் பேரெடுப்பாய் வாழ்ந்த அம்புலிச் சாமந்தநாறாயண் வெண்ண கரப்பெருமா னென்கிற ...... னுடைய சரித்திரம்.

எ) திருவாரூர்ச் சாமியாகிய தியாகச் சாம்பா னென்கிற ...... னுடைய சரித்திரம்.

அ) ஆனையேறும் பெரும் .... சரித்திரம்.

க0) சோழமண்டலத்தைச் சில வருஷமா யாண்ட நந்த னென்கிற ...... னுடைய சரித்திரமு மிந்த நந்தனைக் கம்மாளர் கலப்பந்தல் போட்டுக் கொன்றுபோட்டதி னிமித்தியம், .... கம்மாளருக்கு முண்டான தீராத பகையுஞ் சொல்லப்பட்டிருக்கும்

கக) நந்திராசா வென்கிற ...... னுடைய சரித்திரமும், நந்திக் கலம்பக மென்கிற பொஸ்த்தக முண்டான வரலாறுங் காண்பித் திருக்கும்.

கஉ) கனம் பொருந்திய கலநெல் காலன் மைக்கிஞ்சித் துரையவர்கள் வலங்கை யிடங்கைச் சாதியாளரைத் தொட்டுக் கேழ்க்கிற சில பிறதான கேழ்விகளுக்கு, **வேதநாயக வேதகாமக சிரோமணியார் கொடுக்கிற புறத்தி யுத்தாரங்கள்.**

கங) பள்ளனுக்கும் ...... முண்டாயிருக்கிற தொழில்களும், அவர்களுக்கு ளுண்டாயிருக்கிற தீராத பகைகளு மெந்த விதமா யுண்டாயிருக்கு தென்று காண்பித்திருக்கும்.

கச) பள்ளரும் ...... தங்க ளாண்டையாகிய வெள்ளாளச் சாதியாருக்கு முன்பாகப் பறுவகாலத்தி லெப்படி நடந்து கொண்டார்க ளென்று மிக்காலத்தி லெப்படி நடந்துகொள்ளு கிறார்க ளென்றுங் காண்பித்திருக்கும்.

கரு) அதிகாரம், கம்மாளருக்கும் ..... மிருக்கிற ஒவ்வா தனங்களையும் வித்தியாசங்களையுங் காண்பித்திருக்கும்.

கசு) அதிகாரம், மக்கத்துத் துலுக்கச்சியு மாந்தைக் கம்மாளனு மொன்றென்கிற பழிமொழியைத் தொட்டுக் காண்பித்திருக்கிற சில ஞாயங்க ளடங்கி இருக்கும்.

௰௬) அதிகாரம், கம்மாளச் சாதியானாகிய வாமனுக்கும், வலங்கை மாற்றானாகிய சண்டனுக்குந் தங்கள் தங்கள் சாதியின் மேன்மையைத் தொட்டொன்றுக்கொன்று பண்ணிக்கொண்ட சம்பாஷிணையைக் காண்பித்திருக்கும்.

௰௭) அதிகாரம், வெள்ளாளருடைய சாதி வகுப்பையும் அவர்களுடைய முறைமைகள் சடங்குகளையுங் காண்பித்திருக்கும்.

௰௮ அதிகாரம், வடமலையப்ப பிள்ளை திருநெல்வேலியில் திண்டு திருப்பி ராட்சிய பாரம் பண்ணினபோது, மறவரைச் சங்காரம் பண்ணின சரித்திரத்தைக் காண்பித்திருக்கும்.

௰௯) அதிகாரம், உடையார் அல்லது நத்தமாடிச் சாதியார் கள்ளர் பள்ளிச் சாதி மற்று மதற்கடுத்த சில் சாதிகளுடைய பூறுவோத்திரத்தையு முறைமைகளையுங் காண்பித்திருக்கும்.

௨௰ அதிகாரம், சாணார்ச் சாதியினுடைய பூறுவோத்திரத்தையும், அவர்கள் முறைமைகளையுங் காண்பித்திருக்கும்.

௨௧ அதிகாரம், மலையாளம் அல்லது திருவங்கூர் இராமராசர் எட்டுக் கூட்டம் பிள்ளைமாரையும் பதினாறு கூட்ட மாடம்பிமாரையு மழித்துப் போட்டு, அவர்கள் பெண்டுகளை முக்குவருக்குக் கலியாணம் பண்ணிவைத்த செய்தியு, மற்று மத்தேசத்தார் நடபடியும், புலையர் புலையாட்ட மாடுகிற காரியங்களுஞ் சொல்லியிருக்கும்.

௨௨ அதிகாரம், கவரைகளுடைய சாதி வகுப்பையும், அவர்களுடைய நாட்டாமையு மெந்தவிதமா யிருக்கு தென்கிறத்தைக் காண்பித்திருக்கும்.

௨௩ அதிகாரம், ௰ அதிகாரத்திலே சொல்லப்பட்ட வண்ணான் வீட்டிலே வளக்கப்பட்ட நந்தனுடைய ஙெங்கிஷத்தானாகிய .... பிள்ளையாண்டானுடைய குறைச் சரித்திரத்தையுங் காண்பித்திருக்கும்.

௨௪ அதிகாரம், கம்மாளர் போட்டிருந்த காந்தக்கல்க் கோட்டையினுடைய வர்தமானத்தைக் காண்பித்திருக்கும்.

# வலங்கைச் சரித்திரம்

# அல்லது

# வலங்கைமாற்றார் கம்மாளருடைய பூறுவோத்திரம்

## க. அதிகாரம்

இராவணனுடைய . . . . . . மல்லியப் பெருமானுடைய மூன்று பிள்ளைகளின் பேரிலே முன் இராவணன் இலங்காபுரி ஆளச்சே, அவனுடைய . . . . . . மல்லியப் பெருமானுக்கு மூன்று பிள்ளைக ளிருந்துது.

ஒருதன் பேர் சாம்புகன்; இளையவன் பேர் பிறவிடைச் சாம்பான்; மூன்றா மானின் பேர், தியாகன் அல்லது தியாகச் சாம்பான்.

பிற்காலத்தில், சோழன் வந்து காடுவெட்டி, நாடுண்டாக்கின இந்தத் தெண்டகாரணிய வனத்திலே, முன் சொல்லப்பட்ட மூன்று பேரும் ஆளுக்கொரு தலத்திலே குடியிருந்தார்கள்.

சாம்புகச் சாம்பான் இராவணன் தாயாதிகளாகிய ததிரிச் சிரசோடேகூட திருச்சிராமலையிலே குடியிருந்தான். இந்தச் சாம்புவன், இராமருக்குஞ் சினேகிதமாகக் கூடமாடத் திரிந்தா னென்று இராமாயணத்திலேயுஞ் சொல்லப்படுகுது.

உ) பிறவிடைச் சாம்பான் இப்போ சொல்லப்படுகிற தஞ்சாவூ ருண்டாகிற முன், அந்தக் காட்டிலே யிருந்தான்.

இந்த இடத்திலே, இப்போ சிவகங்கைக் கோட்டை அல்லது சின்னக்கோட்டை கட்டப்பட்டிருக்குது.

இந்த இட முன்னாலே விளாறுக்கோட்டைக் கடுத்த பருத்திக் கொல்லையும் அதினோரமாகச் சுடுகாடுமாயிருந்துது.

விளாறுக் கோட்டைக்குந் தஞ்சாவூருக்குந் தெற்கே மூன்று நாளிகை வழித்தூரம், இந்த விளாறுக் கோட்டையிலே இப்போ

கோட்டையில்லாமல் பட்டிக்காடாயிருந்தாலும் முக்காலத்திலே விளாறுக் கோட்டைக்கும் அதற்கு அருகாண்மையான நாஞ்சிக் கோட்டைக்குங் கோட்டை யிருந்துதாம்.

ஆனால், நாஞ்சிக் கோட்டையை வலங்கைமாற்றாருங் கட்டி பூறுவகாலத்திலே அதில்க் குடியிருந்தார்களாம்.

அந்தக் கோட்டை மண் கோட்டையா யிருந்தாலும், வெண் கலத்தாலே கதவும், இருப்புத் தூண்களு மிருந்துதாம், மலாரிக் கோட்டை யென்று அதற்குப் பேர்.

இது சின்னக் கோட்டையா யிருந்தாலும் அதற்கு வெளியே பெரிய பேட்டை யிருந்தது. இப்போ, அந்தக் கோட்டையும் பேட்டையு மழிந்துபோ யொரு சின்னப் பட்டிக்காடாக (ம)ாத்திர மிருக்குது. இப்போ தஞ்சாவூர் சின்னக்கோட்டை கட்டப்பட்ட இடம் விளாறுக்கோட்டைக்கு அல்லது மலாரிக் கோட்டைக்குச் சுடுகாடா யிருந்தபடியினாலே முன் சொல்லப்பட்ட இராவண னுடைய ........ மல்லியப்பெருமான் மகன் பிறவிடைச் சாம்பான் மரித்தபோது, இந்த இடத்திலே தகனம் பண்ணினார்கள். இவன் பெண்சாதி பெரியநாயகம் இவனைத் தகனம் பண்ணின இடத்திலே தீக்குளித்தாள். அந்த இடத்திலே ஒரு வேப்ப மரமும் அரசமரமும் வைத்து, அதைச் சுற்றித் திண்ணையும் போட்டு இரண்டு செங்கலை நட்டுத் தெய்வமாக வணங்கிக் கொண்டி ருந்தார்கள்.

அவிடத்திலே, பிற்காலத்திலே, ஒரு நந்தவனமும் இப்போ மன்னருள மென்று சொல்லப்படுகிற கிணறுந் தண்ணீர்ப் பந்தலுஞ் சவுக்கியமா யுண்டாக்கப்பட்டுது.

அக்காலத்திலே, வடக்கேயிருந்து சோழராசா இவிடத்துக்கு வந்தபோது, முதமுதத் திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே யிருக்கிற மதுக்கரை அய்யனார் கோவிலிலே வந்திறங்கினார்கள். அங்கே யிருந்து பிறவிடைச் சாம்பானு மவன் பெண்சாதியுந் தகனம் பண் ணப்பட்ட இந்த இடத்துக்கு வந்தபோது, இந்தத் தண்ணீர்ப்பந்தல் சவுக்கியத்தைக் கண்டு, இரண்டொரு நா ளிவடத்திலே சயனித்துக் கொண்டிருந்தார்.

இப்படி யிருக்கிறபோது, அவடத்திலே தகனம் பண்ணப்பட்டிருந்த பிறவிடைச் சாம்பானும் பெரியநாயக மென்கிறவனும் நித்திரையிலே வந்து, தங்களுக்குத் திருப்பணி கட்டிவைக்க வேணுமென்று சொன்னார்களாம். அப்போ, சோழராசா அந்தப்படியே சம்மதித்து தாம் நினைத்து வந்த காரியங் கைகூடி வந்தால், அந்தப்படிக்கு இவிடத்திலே திருப்பணி கட்டிவைக்கிறோ மென்று பிறிதிக்கினை பண்ணினார்.

இதற்கு முன்னாலே, கருவூரிலே பிறந்த மாரியம்மை யென்கிற . . . . . தன் புருஷனாகிற வெட்டியானோடேகூட பாண்டிய தேச மெல்லாஞ் சுற்றித் திரிந்து, பிச்சையெடுத்துப் பிழைத்து தன் புருஷன் செற்றுப்போன் பிறகு, சோழதேசத்திலிருக்கிற இந்த பிறவிடைச் சாம்பான்கிட்ட வந்து சேர்ந்திருந்தாள். இவள் அவனிடத்திலே சிறுது கால மிருந்து மரித்தபோது, அவளைத் தஞ்சாவூருக்குக் கிழக்கே மூன்று நாழிகை வழியிலே தகனம் பண்ணினார்கள் அந்த ஊருக்கு மாரியம்மன் கோவில் அல்லது புன்னலூ ரென்று பேர்: சந்தையும் பேட்டையுங் கோவில்க் குளமு முள்ள ஒரு பெரிய கிராமமா யிருக்குது. இந்த மாரியம்மையைத் தொட்டு சோழராசாவினுடைய சொற்பனத்திலே பிறவிடைச் சாம்பானும் அவன் பெண்சாதி பெரிய நாயகமும் ஒரு மனுக் கேட்டுக் கொண்டார்களாம். அதென்ன வென்றால், எங்களுக்கு மாத்திரந் திருப்பணி கட்டுகிறது போதாது என் சினேகிதியாகிய ஒருதி பாண்டிய தேசத்திலிருந்து வந்திருக்கிறாள்; அவளுக்கு மொரு திருப்பணி கட்டிக் கொடுக்க வேணுமென்று கேட்டுக் கொண்டார்கள். அந்தப்படியே, திருப்பணி கட்டித் தருகிறோமென்று சொல்லிப்போட்டுக் கிழக்கே போய் விட்டார்.

## உ) அதிகாரம்

மாரியம்மை யென்கிற . . . . . . பேரிலே.

இவிடத்திலே, சோழராசாவின் கதையை நிறுத்தி, இங்கே சொல்லப்படுகிற இந்த மாரியம்மையைத் தொட்டு அல்லது இவள் பூறுவோத்திரத்தைத் தொட்டு, இன்னெஞ் சற் றதீகமாய் விபரித்துக் காட்ட இவண்டி யிருக்குது. அதாவது, கருவூர்ப் பெரும் . . . . .

குமாரத்தி ஆதி யென்கிற வொரு . . . . . யிருந்தாள். இவள் சிறு பிள்ளையா யிருக்கிறபோது, காட்டுக்கு விறகெடுக்கப் போவாள். இப்படி யவள் சமைந்து பெரிய பெண்ணான பிறகும் நடந்து வந்துது.

ஒருநாள் அவள் விறகுக்குப் போன போது, விறகெடுத்து கட்டிக் கொண்டு வருகையில், பெரிய மழை பிடித்தபடியினாலே அந்தக் காட்டிலே யிருக்கிற ஒரு மடத்திலே வந்து விறகுகட்டை யிறக்கி உளுக்கார்ந்து கொண்டிருந்தாள். மழை விடாதபடியி னாலே, அன்று ராத்திரியிலே கூட அவளங்கே இருக்க வேண்டிய தாச்சுது.

அந்த மடத்திலே யிவளை யல்லாமல் இன்னொரு பாப்பானுந் தற்செயலாய் மழைக் கொதுங்க வந்து படுத்துக்கொண்டான். இவன் பேர் பகவன் அல்லது பகவர்.

இந்தப் பகவர் பேராளி மகாமுனியினுடைய மகன்; இவன் வாலிப மானபடியினாலே, அந்த மடத்திலே மழைக்கொதுங்க வந்து கிடந்த ஆதி யென்கிற . . . . . . வாலிபமான படியினாலே, வேறொருதரும் அவடத்தி லல்லாதபடியினாலேயும் இந்தப் பகவன், அவளை யேய்த்துப் பட்சமாகப் பேசி, அவளோடே சயனித்தான்.

பிற்பாடு, இவர்க ளிருவருங்கூடி ஊருக்கூர் ஓடிப்போக வேண் டியதாச்சுது. புருஷன் பாப்பானும் பெண்சாதி . . . . . . மான படியினாலே, எந்த ஊருக்குப் போனாலும் ஊருக்குள்ளே யவர்கள் வரக் கூடாமல், காட்டிலேதானே குடியிருக்க வேண்டியதாச்சுது.

இந்த ஆதியைக் காட்டிலே வைத்துப்போட்டு பகவன் ஊர் களிலே வந்து பிச்சையெடுத்துக்கொண்டு போய் சீவனம் பண்ணிக் கொண்டு வந்தான்.

இத்தப் பகவனுக்கு, ஆதி வயிற்றிலே மூன்று ஆண் பிள்ளை களும், நாலு பெண் பிள்ளைகளும் ஆக ஏழு பிள்ளைகள் பிறந்துது. ஆண் பிள்ளைகள் பேராவது :-

க) .........

உ) சிலையுமான் அல்லது சேரமான் பெருமான்

௩) கபிலர்

பெண் பிள்ளைகள் பேராவது :-

க) உப்பை அல்லது மாரியம்மை

உ) உறுவை அல்லது பிடாரி

௩) அவ்வை அல்லது அவையார்

௪) வள்ளியம்மை

இந்த ஏழு பேரும் ஆதியினுடைய பிள்ளைகள். இந்த ஏழு பேருக்கும் விஸ்தாரமான ஏழு சரித்திரமுண்டு.

இந்த ஆதிக்குத் தலைச்சன் குமாரத்தி மாரியம்மை.

இவளை ஊத்துக்காட்டிலே யிருக்கிற வண்ணாரெடுத்து வளர்த்தார்கள். இவள் வண்ணார் வீட்டிலே வளர்ந்தபடியினாலே வண்ணார் மாரியம்மை யென்று இவளுக்குப் புகழ் சொல்லி அக்கியானிகள் கும்பிடுவார்கள். இவளை வண்ணா ரெடுத்து வளர்த்தாலும் அவள் ......... வயற்றிலே பிறந்தபடியினாலே, வெட்டியாற்ப் .........க்குக் கலியாணம் பண்ணிக் கொடுத்தார்கள்.

இப்படி யிருக்கிற காலத்திலே அவளுக்கு வைசூரி கண்டு, மெத்த வருத்தப்பட்டு மணமெடுத்து ஈ மொச்சபடியினாலே அவள் புருஷன் வெட்டியான் தரித்திரிய நிமித்தியஞ் சீலையில்லாதபடியினாலே, வேப்பிலையைக் கீழு மேலும் போட்டு படுக்கவைப்பான். அவன் அவளைக் கூட்டிக் கொண்டு பிச்சைக்கு வருகிறபோது ஈயு பத்திரியத்துனாலே வேப்பிலையை விசிறிக்கொண்டு வீடு வீடாய்ப் பிச்சை யிரப்பான்.

இதை அந்த ஏழை அக்கியானிகள் யோசினை பண்ணிப் பாறாமல் அந்த மாரியம்மை யென்கிற வெட்டியாற்ப் .........

தெய்வமாக நினைத்து, அந்த வேப்பிலையைப் பத்திரியாகச் சிந்தித்து தங்கள் பிள்ளைகளுக்கு வைசூரி வந்தபோது அதுகளை கையிலே யிடிக்கிக் கொண்டு முற்காலத்திலே அந்த வெட்டியான் செய்ததுபோலே வீட்டுக்கு வீடு அலைந்து சகலசாதி வீட்டிலும் பிச்சையெடுத்து நேத்திக் கடனாகச் சாப்பிடுகிறார்கள். இன்னேர மட்டுந் தமிழருக்குள்ளே இது நடந்து வருகுது.

உ) உறுவை யென்கிற பெண்ணைச் சாணா ரெடுத்து வளர்த்தார்கள். இந்த உறுவைதான் பிடாரி.

இவள், ஊர் காக்கிறவளாம். அருகாண்மையான காட்டிலே கோவில் கட்டி, அக்கியானிகள் குடும்பிடுகிறார்கள். இந்தப் பிடாரி யும் அய்யனாருங் கூடி இராத்திரி காலங்களிலே, ஊர்கள் பட்டணங் களுக்குச் சேதம் வராதபடிக்கு காத்துக் கொண்டு வருவார்களாம்.

சாணார் ........ சாதியானபடியினாலே சாணார் வீட்டிலே வளக்கப்பட்ட பிடாரிக்கு விசேஷமாகக் கள்ளுச் சாறாய மிகுத்தமாகப் படைக்கிறது.

ந) ........ இவளை மதுரையில் பாணர் அல்லது தையல்க்கார ரெடுத்து வளர்த்தார்கள்.

இந்த ........ தான் பள்ளிக்கூடத்து பிள்ளைகள் படிக்கிற தற்கு உதவியான ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், கண்ணு மேற்றி, கல்வியொழுக்கம், பழமொழி, மூதுரை, இன்னஞ் சில சுவடி களையுமுண்டுபண்ணினவள். சோழராசாவுக்கு மிவளுக்கும் அறிமுக மிருந்தது. கம்பனென்கிற வித்துவானுக்கும் இவளுக்கும் எப் போதுஞ் சண்டை யுண்டா யிருந்து.

ச) வள்ளி அல்லது வள்ளியம்மை இவளைக் குறவ ரெடுத்து வளர்த்தார்கள். இவள்தான் பழனித் தெய்வமாகிய சுப்பிரமணிய னுடைய பெண்சாதி.

ரு) ........ தொண்ட மண்டலத்து மயிலாப்பூரிலே ........ வீட்டிலே வளர்ந்தான். இவன் ........ன்கிற பொஸ்த் தகத்தையும் ஞானவெட்டியான் கதையையு முண்டு பண்ணினான்.

இவன் பாண்டியராசாவின் காலத்திலே வேதசாஸ்த்திர விசாரிப்புக்கும், ஞாயம் விசாரிப்புக்கும் போட்டிருந்த சங்கத்தார் 49 பேரையு மழித்து, அவர்கள் போட்டுளுக்கார்ந்திருந்த சங்கப் பலகையையு மழித்தவன்.

௬) **சிலையுமான்** அல்லது **சேரமான் பெருமாள்:** கருவூர் அல்லது வஞ்சியூரிலே இராசாவினால் வளக்கப்பட்டான். இவன் தான் சேரனென்கிற ராசாவானான்.

௭) **கபிலர்** திருவாரூரிலே பாப்பார் வீட்டிலே வளர்ந்து, பாப்பானாக வேதமோதினான்.

இந்த ஏழு பிள்ளைகளுடைய தகப்பன்பேர் **பகவர்**, தாய்பேர் **ஆதி.**

இந்தப் பகவரைத் தொட்டும், ஆதி யென்கிறவளைத் தொட்டும் இன்னமொரு விதமாக பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அதாவது,

## ௩. அதிகாரம்

**ஆதி யென்கிற ......... பேரிலும், அவள் புருஷனாகிய பகவ ரென்கிற ...... பேரிலும்**

ஆதி யென்கிறவள் ... ...யல்ல. ஆனால், ஒரு அழிபிராமணத்தியினுடைய மகளென்று சொல்லுகிறார்கள். அதை விரித்துக் காட்டல்- ஒரு பிராமணத்தி ......, பிள்ளையைப் பெற்று காணாமல்க் காட்டிலே யெறிந்து போட்டாள். அதைப் ...... .. ரெடுத்து வளர்த்து அவளுக்கு ஆதி யென்று பேரிட்டார்கள். இந்தப் பெண் வாலிபமாய்ச் சமைந்து வருகிற பக்குவத்திலே ........தெருலிருந்து ஊர்களிலே வந்து கீரை வாங்கிக் கொண்டு போவாள்.

இதிப்படி யிருக்கிறபோது, ஒரு பிராமணச் சாத்திரியினுடைய மகன் பகவரென்றொருத ரிருந்தார். இவரும் நல்லாய்ப் படித்தவர். ஆனால்த் தரித்திரத்தோடே பிறந்து, தரித்திரமாய் வளர்க்கப்பட்டார்,

இவர் வாலிபமானபோது கலியாண முகியாமல் பிரமசாரியா யிருந்தார். இந்தப் பகவ ரென்கிற பிரமசாரி வீட்டுக்கு வீடு பிச்சை யெடுத்துப் பிழைக்கிறது இவருக்குத் தண்டக்கமா யிருந்துது.

அப்புற மிவர் யோசினை பண்ணி ஒரு கீரைத்தோட்டம் போட்டு, அதினடுவே ஒரு சின்னக் குடிசை கட்டி, அதிலிருந்து கொண்டு, அந்தக் கீரையை அறுத்து, வித்துக் காலட்சியம் பண்ணிக் கொண்டு வருவார்.

இவர் தோட்டத்துக் கீரை மெத்த நல்ல கீரையா யிருந்த படியினாலே எல்லாரு மிவர் தோட்டத்துக் கீரை வாங்க வருவார்க ளிப்படி யிருக்கிறபோது, . . . . தெருவிலே யிருந்து ஆதி யென்கிற பெண்ணு மிவரிடத்திலே வந்து கீரை வாங்கிக் கொண்டு போவாள். அந்தப் பெண் மெத்த அழகுள்ள பெண்ணானதினாலுஞ் சுத்தமாய்க் குளித்து முழுகி மேல்சாதியைப் போலே சீலை கட்டிக்கொண்டு போறதினாலும் அவள் ......... யென்று பகவருக்குத் தெரியாதே போச்சுது.

ஒருநாள், சாயுங்காலம் அவள் கீரை வாங்க வந்தபோது மழை மிச்சமாய் பெய்தபடியினாலே, அவள் இந்தப் பகவருடைய வீட்டுத் தாழ்வாரத்திலே வந்து ஒதுங்கி யிருந்தாள். பகவர் சாப்பிடுகிற போது அவளுக்குஞ் சாப்பாடு போட்டார். கடசியிலே பகவர் படுத்துக்கொள்ளப் போறபோது, அவர் விறும்சாரி யானபடியி னாலே மோக விசார மிச்சமா யுண்டாகி, இந்தப் பெண்ணோடே சயனித்து, விடியக்கால மனுப்பிவிட்டார்.

, காலமே யிவள் வீட்டுக்கு வந்து, இராத்திரி மழை பேய்ந்த தினாலே வரக்கூடாமல், அவ்விடத்திலே தரித்திருந்தே னென்று வீட்டாருக்கு வேறே விதமாய்ச் சொன்னாள். பகவர் தன்னை அழித்துப் போட்டதைச் சொன்னதில்லை.

ஒரு நாள் பகவர் வெளியே உலாவ வந்தபோது, இந்த ஆதி யென்கிற பெண் ......... சேரியிலே யிருந்து பிறப்பட்டதைக் கண்டு, "இவள் ......... யிருந்து நமக்குச் சொல்லாமல் நம்மை மோசம் பண்ணினாளே; நா மேல்சாதிப் பெண்ணென்றல்லோ

நினைத்து இவளோடே கூடினோம்; நல்லது ஆகட்டு மென்று" கருவிக்கொண்டு, வீட்டுக்கு வந்துவிட்டார்.

அப்புறம் ஒரு நாள் ஆதி யென்கிற பெண் எப்போதும் பழக்கத் தின்படி கீரை வாங்க வருகிற வாடிக்கையின்படி, அன்றைக்குங் கீரை வாங்க வந்தாள். அவளைக் கண்டமாத்திரத்திலே பகவருக்குக் கோபம் வந்து, "அடி ......! நீ . ...... யிருந்தும் அதைச் சொல்லாமல், மேல்சாதியைப் போலே காட்டி அன்றைக்கு வந்து என்னை மோசப் படுத்தினியே, இன்ன மென்னத்துக்குடி முண்ட யிங்கே வந்தாய்? இன்னம் மோசப்படுத்த வந்தியோ?" வென்று கையிலிருந்த உளவாரத்தினாலே தலையிலே அடித்தார்.

அடித்தவுடனே தலை பொத்துப் போய் இரத்தவிளா ரெடுத்துது. இந்த இரத்தத்தோடே அவள் வீட்டுக்கு ஓடிவந்து நடந்தத்தைச் சொன்னாள்.

எல்லாரும் அவளுக்கு காயங் கட்டி புண்ணை ஆற்றிப் பகவரிடத் திலே வந்து ஞாயம் விசாரிக்க யிருக்கிறபோது, பகவர் நமக்கு வீண் ஸச்சையாச்சே யென்று பயந்து மனுஷர் முகத்திலே முழிக்க வெழ்க்கப்பட்டத்தினாலேயும், .........யோடே கூடின பாவந் தீர்க்கத்தக்கதாகவுங் கா(சி) யாத்திரைக்குப் போய்விட்டார்.

அப்பால் அந்த ஆதியென்கிற பெண் தன் சிறு வயதினுடைய பூறுவோத்திரங்களையுந் தான் அழிபிராமணத்தி மகளா யிருந்து வெளியே யெறிந்து போடப்பட்டத்தையுந் தன்னைப் ......... ரெடுத்து வளர்த்தத்தையும் நாளடவிலே கேழ்விப்பட்டிருந்த படியினாலே இவளுக்குள்ளே தானே ஞானம் பிறந்து நா மினிமேல் ......... வீட்டிலே யிருக்க லாகாது. எங்கே யாகிலுங் காணாம டைராட்சியத்துக்குப் (மற்ற ராச்சியத்துக்கு) போக வேணுமென்று தீர்மானம் பண்ணிக் கொண்டு, வீட்டைவிட்டுப் பிறப்பட்டு பிராமணத்தி வேஷம் போட்டுக் கொண்டு, இரண்டு மூன்று நாளைப் பயணத்துக் கப்புறம் ஒரு மடத்திலே வந்து தரித்து நெல்லுக் குத்திப் பிழைத்துக் கொண்டிருந்தாள்.

இப்படி யிருக்கிற போது ஒரு பிராமணனும் அவன் பெண் சாதியுங் காசியிலே யிருந்து காவடி யெடுத்துக் கொண்டு இராமே

சுரத்துக்கு வந்துபோட்டு மறுபடியுந் திரும்பிப் போறவர்கள் இந்தப் பெண்ணிருக்கிற மடத்திலே வந்து தரித்தார்கள்.

அவர்க ளிந்தப் பெண் அழகுள்ள பெண்ணென்று கண்டு, இவளை ஆரென்று விசாரித்தார்கள். அவளதற்கு, "நான் பிராமணப் பெண்; என் தாய் தகப்பன் செற்றுப்போனார்கள். எனக்கு அன்ன வஸ்திரங் கொடுத்து நடத்துகிறவர்க ளில்லை. நீங்க ளென்னைப் பட்சமாய் விசாரித்து நடத்தக் கூடுமானால் உங்களுடனே கூட வருகிறேனெ"ன்று சொன்னாள்.

அவர்களும் அதற்குச் சம்மதித்து, சந்தோஷப்பட்டு, தங்களுக்குப் பிள்ளை யில்லாததினாலே இவளைக் கூட்டிக் கொண்டு காசி வந்து சேர்ந்து, தங்கள் வீட்டோடே தானே வைத்துக்கொண்டு தங்கள் பிள்ளையைப் போலே வளர்த்து ஒரு நல்ல மனுஷனுக்குக் கலியாணம் பண்ணிக்கொடுக்க வேணுமென்று யோசினை பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

இப்படி யிருக்கிறபோது, இதற்கு முன்னாலே காசியாத்திரைக்கு வந்திருந்த பகவர் நிற்ற மொரு தெருவாகப் பிச்சை யெடுத்துச் சீவனம் பண்ணிக் கொண்டு, ஒருநாளிந்தப் பெண்ணிருக்கிற தெருவுக்கும் வந்து பிச்சை கேழ்க்கிறபோது, இந்தப் பெண்ணவரைக் கண்டவுடனே இன்னாரென்றறிந்து கொண்டுது. ஆனா லவருக்கு இவளாரென்று தெரியாதே போச்சுது. ஆனா லவளிதை வெளிக்கு விடாமல் மனதிலே வைத்துக்கொண்டாள். இந்தப் பெண்ணை வளர்க்கிற பாப்பானும் பாப்பாத்தியும் அவருக்குச் சாப்பாடு விசாரித்து அவர் வாலிப மென்னுங், கலியாண முகியாதவரென்றும் நல்லாய்ப் படித்த சாஸ்த்திரி யென்றுங் கேட்டறிந்தபோது, அவருக்குத் தங்களிடத்திலே யிருக்கிற பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொடுக்க மனதா யவரோடே பேசி யிவன் சம்மதியான பிறகு காசி தீர்த்தமாகிய மணிகாணையிலே இஸ்த்தானம் பண்ணி விசுவனாதர் விஷாலாட்சி சன்னதிக்கு முன்பாக அக்கினி சாட்சியாகப் பெண்ணைக் கலியாணம் பண்ணிக் கொடுத்துத் தங்களாலே கூடின சீதனங்கள் வரிசைகள் மற்றதுகளுஞ் சவரட்சணையாகச் செய்தார்கள்.

அதின்பிறகு, பின்னையுஞ் சிறுது காலம் அவர்களோடே தானே யிருந்து அப்புறம் பகவர் தம்முடன் பெண்சாதியைக்

கூட்டிக்கொண்டு காசியிலிருந்து பிறப்பட்டுச் சோழ தேசமாகிய தம்முட சீர்மைக்கு வந்துவிட்டார்.

வருகிறபோது, வழியிலே ஒரு ஆலா விருட்சத்தின் நிழலிலே உளுக்கார்ந்திருக்கிற போது தம்முட பெண்சாதிக்கு மயிர் கோதி பேன் பார்க்கிறபோது முன்னாலே தாம் உளவாரத்தினாலே அடித்த காயத்தைக் கண்டார்.

கண்டவுடனே, "இதேது காயம்? ஒழியாமல்ச் சொல்"லென்று கேட்டார். அதற்கு அவள், "சொல்லப் பயமா யிருக்குதே" யென்றாள். "ஒன்றுக்கும் பயப்படத் தேவையில்லை; சும்மா சொல்லு பெண்ணே" யென்றார். அப்போ இவள் நடந்த விறுத் தாந்தங்களை யெல்லாம் ஒன்றும் ஒளியாமல்ச் சொல்லி, "நான் பிராமணப் பெண்தான்; என்னைப்...... ரெடுத்து வளர்த்தார்கள். நான் கீரை வாங்க வந்தபோது தேவரீர் உளவாரத்தினாலே அடித்த அடிதானிது. அப்புறம் நான் ...சேரியிலே யிருக்க மனது வராமல் இராமேசுர இயாத்திரைக்கு வந்த பிராமணரோடே கூடி காசிக்கு வந்துவிட்டேன். தெய்வ முங்களையே கூட்டிவந்து எனக்குப் பர்தாவாகக் கட்டளையிட்டுதெ"ன்று செய்தியெல்லாஞ் சொன்னாள்.

அப்புறம் பகவர் எல்லாத்தையுங் கேட்டு, "சங்கற்பங்களைத் தள்ளக்கூடாது. இனி தாமென்ன செய்யக்கூடும்; போனது போகட்டும். இனி நீ நடக்க வேண்டியதுகளைத் தொட்டுச் சொல்லு கிறேன் கேளெ"ன்று அப்புறஞ் சில செய்திகளைச் சொன்னார்.

அதுகளாவது :-

"நீ பிள்ளை பெறுகிறபோது ஒரு காட்டிலே செடி மறைவிலே போயிருந்து பிள்ளை பிறந்தவுடனே அதின் முகத்தை ஏறிட்டுப் பாராமல்த் திரும்பி வந்துவிடு. இப்படி நீ நடந்துகொண்டா லுன்பேரிலே யெனக்குப் பிறியமா யிருக்கு மெ"ன்றான்.

அந்தப்படியே அவள் சம்மதித்து புருஷன் சொன்ன பிரகாரத் துக்கு பிள்ளை பிறந்தவுடனே அதின் முகத்தைப் பாராமல்க் காட்டிலே போட்டுவிட்டு வந்துவிடுவாள். அதை வழியிலே கண்ட வர்கள் எடுத்து வளர்த்துக்கொண்டார்கள்.

இப்படி ஆறு பிள்ளைக்கும் நடந்துது. ஏழாவது பிள்ளை பிறந்தபோது இந்தத் தாய் அந்தப் பிள்ளையின் பேரிலே ஆசை யினாலே புருஷன் சொன்ன வாற்தையை மறந்து, அந்தப் பிள்ளை யினுடைய முகத்தை திரும்பிப் பார்த்(தார்).

அப்போ, அந்தப் பிள்ளை வாய்திறந்து பேசிற்றுதாம். உடனே அவள் தன் புருஷனிடத்திலே வந்து அழுதுகொண்டு பிள்ளையின் முகத்தை ஆசையினாலே தங்கள் கட்டளையை மீறிப்பார்த்தேன். அது என்னைப் பார்த்து ஏழு ஞானமான பாட்டுகளைப் பாடி என்னோடே பேசியது. ஆயினும் நானதை தூக்கிக் கொண்டு வந்தால், தாங்கள் கோவிப்பீர்க ளென்று பயந்து விட்டுவந்தேன். எல்லாப் பிள்ளையுந்தான் நமக்குதவாமல் போச்சுதே யிந்த ஒரு பிள்ளையை யாகிலும் நானாசைக்கு வளர்க்கிறதற்கு அடியாளுக் குத்தரவு கொடுக்க வேணுமென்று கேட்டாள்.

இதுகளைப் பகவர் கேட்டு, அதிசயப்பட்டு, நல்லது அந்தப் பிள்ளையை நானும் ப ர்க்க ஆசையா யிருக்கிறேன். அதைப் போயெடுத்து வளர்ப்போம்; காட்டு, வா, வென்று கூட்டிப் போனார்.

இப்படி யிவர்கள் போறதற்கு முன்னாக அந்த ஊரிலே யொரு பெரிய செட்டியார் தம்முட பிள்ளை செற்றுப்போன படியால், அதை யடக்கம் பண்ணிப் போட்டு திரும்பி வீட்டுக்குப் போறபோது வழியிலே கிடக்கிற இந்தப் பிள்ளையைக் கண்டு தூக்கிக் கொண்டு போய்ச் செற்றுப்போன பிள்ளைக்கு பதிளாக வைத்து வளர்த்துக் கொண்டார்கள்.

இதுகாரிய மிப்படி நடந்துபோன படியினாலே, பகவரும் ஆதி யும் வந்து தேடின இடத்தில் பிள்ளை காணாதபடியினாலே இவரிராட்சியங்கள் பட்டணங்க ளெங்குந் திரிந்து வீட்டுக்கு வீடு நுளைந்து, அந்தப் பிள்ளை சொன்ன பாட்டிலே ஒரு பாட்டைப் பாடிக் கொண்டு பிச்சையெடுத்துத் திரிந்தார்.

இப்படித் திரிகிறபோது, ஒருநாள் இந்தப் பிள்ளை யிருக்கிற செட்டியார் வீட்டிலே வந்து அந்தப் பாட்டைப் பாடிக்கொண்டு பிச்சை யெடுக்கிறபோது, அந்தப் பிள்ளை இந்தப் பாட்டைக்

கேட்டவுடனே பதிள்ப் பாட்டுப் பாடித்துதாம். அப்போ பகவர் இதுதான் தம்முட பிள்ளை யென்றறிந்து கொண்டு, அதைத் தமக்குத் தரவேணு மென்று கேட்கச் செட்டியார், "அது யென் பிள்ளை" யென்று வழக்குத் தொடுக்க, இருவருஞ் சண்டையாகி இராசா மட்டும் எறிவழக்குச் சொல்லிக் கொண்டார்கள்.

இராசா பகவரைப் பாத்து, அது உா்மிட பிள்ளை யென் கிறத்தை யேதினாலே யொப்பிவிப்பீ" ரென்று கேட்டார். அதற்கு பகவர், "அந்தப் பிள்ளை தன் சொந்தத் தகப்பனோடே மாத்திரம் பேசும்; மற்றவர்களோடே பேசா" தென்றார்.

அப்போ செட்டியாரைப் பேசச் சொன்னபோது செட்டியா ரென்னதான் பேசினாலும் பிள்ளை பிரத்தி யுத்தாரங் கொடுக்க வில்லை. கடசியிலே பகவர் முந்தின பாட்டைப் பாடினவுடனே, பிள்ளை மறுபாட்டுப் பாடிப் புரத்தி யுத்தாரங் கொடுத்துது.

அதினாலே, ராசாவும் நாயக்காரரும் அந்தப் பிள்ளை பகவ ருடைய தென்று தீர்த்துக் கொடுத்துவிடக் கட்டளை யிட்டார்கள்.

பகவ ரதை வாங்கிக் கொண்டு போய் வளர்த்துக்கொண்டார். அந்தப் பிள்ளை வளந்த பிறகு, அந்தப் பிள்ளை யாகசாலை கட்டி எக்கியம் வளர்த்து மந்திரகருமங்கள் செய்கிறபோது, மற்றப் பிராமணாளெல்லாம் இவனைப்பரிகாசம் பண்ணிச் செட்டிப்பயல் எக்கியம் வளர்க்கிறார்க ளென்று பரிகாசம் பண்ணி ஒருதரும் வராமல்ச் சாப்பிடாமல் போனார்கள்.

கடசியிலே, சில ஏழைப் பிராமணாள் மாத்திரம் இவருடனே கூட இருந்து எக்கியம் வளக்கிறபோது கூடமாட ஒத்தாசையா யிருந்து சாப்பிட்டார்கள். மற்றப் பரிகாசக்காறப் பிராமணாள் தூரத்திலே நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படி யிருக்கிறபோது, எக்கியத்திலே இவர் பாஞ்சு. அதிலிருந்து மறுபடியுந் தற் சுயரூபமாய் பழையபடி வந்து சகலத் திராளுக்கும் வேத மோதினார். இவர்தான் கபில ரென்று சொல்லப் படுகிறவர். இந்தக் கபிலரை அக்கியானிகள் மெத்தச் சங்கையாகக் கொண்டாடுவார்கள். இவர் ஒரு சின்னப் பொஸ்த்தகந் தமிழி

லுண்டாக்கினார். அதற்கு கபிலர் அகவ லென்றுபேர். ஆயிலு மிந்தக் கபிலரைத் தொட்டாகிலு மற்ற இவருடைய ஆறு சகோ தரங்களைக் குறித்தாகிலும் இயாதொரு சரித்திரங்களை இவிடத் திலே காட்டவேண்டிய அவசர மில்லாத படியினாலே வலங்கைச் சாதியார் சரித்திரத்தை மாத்திர மிவிடத்திலே நாடிறிய வேண்டி யிருக்குது ஆயிலு மிந்த ஆதி யென்கிற ........ தொட்டும், அவள் புருஷனாகிய பகவரைத் தொட்டும், அவர்களுடைய பிள்ளை களாகிய ...... அவையார் மற்றவர்களைத் தொட்டு ருத்திர சங்கிதை யென்கிற பொஸ்த்தகத்தி லின்ன மொருவிதமா கச் சொல்லப் படுகுது.

அதையுஞ் சரித்திர ஒழுங்குக்கு இவிடத்தில்க் காட்டவேண்டி யிருக்கிறபடியினாலே, அந்த ருத்திரசங்கிதையின் பதினெட்டா மத்தியாயத்துக் கதையின் அடக்கத்தை யெடுத்திவிடத்தில்க் காட்டினேன். அதாவது ருத்திர சங்கிதையில் பதினெட்டா மத்தியாயத்துக் கதை:-

முன்னொரு ஆதிகாலத்திலே, சீந்திய லோகத்திலே பிரம தேவரும் அவர் பெண்சாதி சரசுபதியும் ஏகாந்தமாய்ப் பஞ்சணை யில் சய்யோகத்துவமா யிருக்கிற வேளையிலே பிரமதேவர் தாம் சிருஷ்ட்டிக்கிற வல்லமை யுடைத்தானவரான படியினாலே, நாம் பூலோகத்திலே முதலாக எண்பத்து நாங்கு நூறாயிரஞ் சீவ செந்துக்களையுஞ் சிரிஸ்ட்டிக்குறோமே அவரவர்களுடைய முக பேதகம் வெவ்வேறாகப் போகவேண்டிய காரிய மேதென்று மனதிலே யெண்ணிக் குஞ்சிரிப்புக் கொண்டார்.

விறுமா இப்படிக் குஞ்சிரிப்புக் கொண்டதை அவர் பெண் சாதியாகிய சரசுபதி பார்த்து, ஏதோ நம்முடமேல்க் களங்கமாக எண்ணிப் பிரமதேவர் நகைக்கிறா ரென்று யோசினை பண்ணிப் பிரமதேவரைப் பார்த்து, "நீர் நகைக்க வேண்டிய காரிய மென்ன? அந்தக் காரியத்தை யெனக்குச் சொல்லவேணு" மென்று கேட்டார்.

அதற்கு பிரமதேவர், "நாம் சகல சீவ செந்துக்களையுஞ் சிருஸ்ட்டிக்கிற கற்தனா யிருக்கிறபடியினாலே அவரவருடைய முகம் வெவ்வேறாக வேண்டிய காரிய மென்ன வென்று நகைத்தோ" மென்று சொன்னார்.

அதற்குச் சரசுபதி, "நீ ரினைத்தானே யிப்படி வெகு அருமை யாக எண்ணினீரே; நானானால் அவரவருடைய வாக்கிலே யிருந்து பேதா பேதஞ் சந்த பேதங்கள் காண்பிக்கிறேனே" யென்று சொன்னாள்.

அப்போ பிரமதேவருக்கும் நமக்கு எதிரியாகச் சொல்லுவாளோ வென்று கோபம் வந்து, 'சண்டாள ஸ்த்திரியாய் அதாவது ...... பூமியிலே போய்ப் பிறக்கக் கடவா யெ'ன்று சாப மிட்டார்.

அப்போது, சரசுபதி விறுமாலைப் பார்த்து, "நான் பூமியிலே சண்டாள ஸ்த்திரியாய்ப் பிறந்தால், யென்னைப் பாணிக் கிரகம் பண்ணுகிறது. தேவரீரே யொழிய வேறே யில்லையே; ஆன படியினாலே தேவரீரும் பூலோகத்திலே பிராமணக் குலத்திலே பிறந்து யென்னைக் கலியாணம் பண்ணுவீரென்று சாப மிட்டாள்.

அப்படிச் சாபமிட்டு வெகுநாள்க் களிச்சவுடனே பிரமதேவர் வந்து திருவாரூரி லொரு பிராமணச் சாத்திரியார் குபேரனாக வாழ்ந்து கொண்டிருக்கிறவருக்குப் புத்திரனில்லாம லிருந்தது. அவருக்குப் புத்திரனாக வந்து சென்மித்தார். சரசுபதியும் ஆரணியா புரத்திலே சண்டாள ஸ்த்திரி வயற்றிலே வந்து சென்மித்தாள்.

இப்படிச் சென்மித்திருக்கிறபோது அவள் கூலி வேலைக்கு வந்து வேலை செய்கிறபோது அவடத்திலே குழந்தை பிறந்துது. அந்தக் குழந்தையை அவிடத்திலே வைத்துப்போட்டு, கூலி வேலை செய்கிற போது அந்த வழி மார்க்கத்திலே மதுரையிலிருந் தொரு பிராமணனும் பிராமண இஸ்த்திரியும் புத்திர பாக்கிய மில்லாமல்க் காசிக்குப் போக வேணுமென்று வழிமார்க்கத்தில் வருகிறபோது, இந்தக் குழந்தையைக் கண்டு சுவாமியே நமக்குத் தந்தா ரென்று ஈஸ்வரி போலே யிருக்கிற குழந்தையை யெடுத்துக் கொண்டு திரும்ப ஊரிலே வந்து சேர்ந்தார்கள்.

சரசுபதியும் அங்கே வளர்ந்தாள். பிரமதேவரும் திருவாரூரிலே பிறந்து வளர்ந்து சகல வித்தையுங் கற்று சமத்தனானதில் பிறகு இவருக்குக் கலியாணம் பண்ணப் பெண் வேணுமென்று விசாரித்துப்

பார்க்கும்போது, இவருக்கு ஏத்த பெண் மதுரையி லிருக்கு தென் றறிந்து கலியாண முகூர்த்தமு மிட்டு நாள்த் தேதியும் வைத்துக் கலியாண முடிந்தது.

முடிந்தவுடனே இராத்திரி பிரமதேவனான பிராமணன் சப்பிர கோள மஞ்சத்திலே யிருக்கிறபோது, இந்த அம்மனும் அவரிடத் துக்கு வந்தாள். வந்தவுடனே பிரமதேவருக்குப் பூறுவக் கியானம் பிறந்து இந்தப் பெண்ணைப் பார்த்து, "நீ யாருட பிள்ளை?" யென்று கேட்டார். கேட்டதற்கு நான் பிராமணப் பெண்ணென்று சொன்னாள். ஆனால் நீ திரும்பிப் போ யுன் தகப்பனைக் கேட்டுக் கொண்டு வாவென்று சொன்னார். அவளும் நல்லதென்று திரும்பிப் போய்த் தகப்பனைக் கேட்டுத் திரும்பி வந்து, நான் பிராமணப் பெண்தானென்று சொன்னாள்.

அந்தச் செய்தி கேட்டு பிரமதேவனுங் கீழே யிறங்கிக் காசி யாத்திரைக்கு நடந்தார். சரசுபதியுங் கூடவே துடந்தாள். இப்படி யிராவும் பகலுமாய்ப் போற போது, பிரமதேவர் இவள் நம்மை விடுகிறதில்லை யென்றெண்ணி யொரு ஆரணியமான காட்டிலே போறபோது அவிடத்திலே யொரு பாழுங் கேணி யிருந்துது. அந்தக் கேணி யண்டையிலே யிவர்போய் நின்றார். அவிடத்திலே அம்மாளும் வந்து நின்றாள். அவளை யந்தக் கேணியிலே தள்ளிப் போட்டுப் பிராமணன் காசிக்கு நடந்தான். அந்தப் பெண் அந்தக் கேணியிலேதானே கிடக்கிறபோது வழி மாற்கத்திலே செட்டிகள் பொதி யெடுத்துக் கொண்டு வந்தார்கள். அப்போ ஒரு மாடு வழி விலகி கேணியண்டை வந்துது. செட்டிகள் அந்த மாட்டை யோட்டி வருகிறபோது இந்தச் சத்தங்கேட்டு, அவளைத் தூக்கி விட்டார்கள்.

அப்புறம் அந்தச் செட்டிகளெல்லாங் கூடி அந்தக் காட்டிலே தானே யொரு கிராம முண்டாக்கித் தண்ணீர்ப் பந்தல் போட்டு அந்த அம்மாளைத் தண்ணீர்ப் பந்தலிலே வைத்தார்கள்.

இப்படிச் சிறுது நாளானதின் பிறகு காசிக்குப் போன பிராமணன், காசி யாத்திரையாடித் திரும்ப அந்த வழியிலே வருகிற போது தண்ணீர்ப் பந்தலிலே வந்து இளைப்பாற விருந்தார்

இந்த அம்மாள் இவரைத் தன்னுடைய பர்தா வந்திருக்கிறாரென் றறிந்து, கிட்ட வந்து "பிராமணா, எந்தவூர்? எங்கே வந்தீ" ரென்று கேட்டாள் அதற்கு இவர், "பெண்ணே, நான் காசி யாத்திரைக்குப் போன பிராமண வென்று சொன்னார்.

அதுகேட்டு, நீர் மோர் கொண்டுவந்து கொடுத்து சாப்பிடச் சொல்லி, யுபசரனை பண்ணி சமையல் பண்ணுகிறேனிருமென்று சொல்ல, நல்லதென்று, இருக்கச் சம்மதித்தார்.

அப்புறம் அவள், போசன மற்றது பண்ணிவைத்து. வென்னீர் வைத்துக் காலுக்கு விட்டு, பாக்கு வெற்றிலை கொடுத்து காலைப் பிடிக்கிறபோது பூறுவக் கியானம் பிறந்து அவளோடே சேர்ந்து விட்டார்.

சேர்ந்தவுடனே . . . . . . பிறந்தார். பிறந்தவுடனே கியானம் வந்து, மோசம் போனோமேயென்று அப்புறம் நடந்தார். அம்மனும் பிறகே நடந்தாள்.

இப்படி இரண்டு பேருமாய்ப் போற போது ஒரு பட்டணத் திலே பிராமணன் வீட்டிலே போய்ச் சேர்ந்தார்கள். அந்த வீட்டுப் பிராமணன் வந்து, நீங்களா ரென்று கேட்க, அந்த அம்மாள் சொல்லுவாள்," நானிவருடைய பெண்சாதி; யென்மேலே கோபமா யிருந்த பிராமணன் வந்திருக்கிறா" ரென்று சொல்ல, அவர்க ளெல்லாருங் கூடி, இரண்டு பேருக்கும் ராசி பண்ணி, அவிடத்திலே சிறுது நாளிருந்தார்கள்.

அங்கே கபிலர் பிறந்தார் அதின் பிறகு அவிடம் விட்டு நடந் தார்கள். இப்படி ஏழு தாவிலே போய்ச் சேர்ந்தார்கள். சேர்ந்த வுடனே, யேழு பிள்ளைகள் பிறந்துது அந்தப் பிள்ளைகளுட போரன்ன வென்றால், . . . . . . . கபிலர், சேரமான் பெரு மாள், மாரியம்மை, வள்ளியம்மை, அவையார், பகவதியம்மை இபபடி ஆண்பிள்ளைகள் மூன்று, பெண்பிள்ளைகள் நாலு. ஆக ஏழு பிள்ளைகள் பிறந்தவுடனே பிறகு கீற்திய லோகத்திலே தங்கள் சொருபத்துடனே போய்ச் சேர்ந்தார்கள்.

இவ்விதமாக ருத்திர சங்கிதையில் பதினெட்டாம் அத்தியா யத்துக் கதையி லெழுதியிருக்குது.

இங்கே மேலாகச் சொல்லப்பட்ட இந்த இரண்டு மூன்று விதமான சரித்திரத்தினாலே விளங்கிற தென்ன வென்றால், . . . . . . . சேரமான் பெருமாள், கபிலர், மாரியம்மை, பிடாரி, அவையார், வள்ளியம்மை யிவர்க ளெல்லாரும் . . . . . பெற்ற பிள்ளைக ளென்று, மிவர்களுடைய தகப்பன் பிராமண னென்றுந் திட்டமாய் வெளியாகுது.

ஆனபடியினாலே . . . . . . . . . . . . . பிறந்திருந்தாலும், அவனுடைய தகப்பன் பிராமண னானபடியினாலே, தன் தகப்பனுடைய தொழிலை நான் செய்வேனென்று தன் தகப்பனாகிய பிராமணன் போலே தானும் பூண்நூல்ப் போடவுஞ் சாஸ்த்திரங் குறிகள் சொல்லவும் வேதமோதவுந் தலைப்பட்டு, பிராமணனுக்குப் பங்காளி யானான்.

இன்னாள் மட்டும் அந்தத் . . . . . . வங்கிஷத்தாராகிய . . . . . . சாதியார் அந்தப்படி செய்கிறார்கள். அதாவது

## ச) அதிகாரம்

**பிராமணாளுக்கும் . . . ள்ளுவருக்கு மிருக்கிற**
**எதிரிடையின் பேரிலும் வள்ளுவருக்கும்**
**. . . . . . . மிருக்கிற வித்தியாசத்தின் பேரிலும்**

க) பிராமணாள் பூண்நூல்ப் போடுகிறபடி வள்ளுவச் சாதியாரும் போடுகிறது.

உ) பிராமணாள் . . . . . . கலியாணம் பண்ணுகிறபோது அக்கினி வளர்த்து ஓமஞ் செய்து பெண்ணுக்கு மாப்பிள்ளைக்குஞ் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து கலியாண முகித்து வைக்கிற பிரகாரமாக, வள்ளுவர் . . . . . . . . . . . . சேர்ந்த சாதியாருக்குங் கலியாணம் பண்ணுகிறபோது, வேத மோதி அந்தப் பிரகாரமாகச் சடங்கு செய்கிறார்கள்.

ங) பிராம்மணாள் . . . . ளுடைய இளவு காடையத்து எட்டு கர்மாந்திரத்துக்கு என்ன செய்கிறார்களோ அந்தப்படியே

வள்ளுவச் சாதியாருந் தங்கள் சேஷாக்க ளாகிய . . . . சாதியாருக்குச் செய்கிறார்கள்.

ச) பிராமணாள் பஞ்சாங்கச் சுவடியை யெப்போதுங் கையிலே பிடித்துக்கொண்டு, தெருவிலே திரிந்து . . . ளுக்குச் சாஸ்திரஞ் சொல்லுகிறபடியே இவர்களுந் தங்கள் கையிலே எப்போதும் பஞ்சாங்கச் சுவடியை வைத்திருந்து . . . . . மாத்திரமல்ல தமிழருக்குங் கூடக் குறி சொல்லுகிறார்கள்.

இப்படியே மற்றக் காரியங்களிலும் நன்மை தின்மையிலும் பிராமணாளுக்கும் வள்ளுவருக்கும் ஒத்திருக்குது.

ரு) பிராமணாளுடைய வேதத்தை சகல அக்கியான சாதியாருஞ் . . . ளும் அங்கிகாரம் பண்ணுகிறபடி திருவள்ளுவனுண் டாக்கின குறளென்கிற பொஸ்த்தகத்தையும் ஞானவெட்டியான் கதையையும் மற்றும் அவர்களுக்குள்ளாண்டாகிய பஞ்சாங்கச் சாஸ்த்திரத்தையும் அங்கிகாரம் பண்ணுகிறார்கள்.

சு) பிராமணாளுக்கும் இவர்களுக்கும் எப்போதும் பகை. இது அவர்களுடைய தாயாதி அல்லது பங்காளி வியாச்சியத்தினாலே யுண்டாச்சுது, பிராமணாள் எப்போதும் வள்ளுவச் சாதியாரையும் . . . . . . பகைக்கிறது. இவர்களுடைய நிழல் முதலாய்த் தங்கள் பேரிலே பட்டால் மகாதோஷமென்று ஒதுங்கித் திரிகிறது.

இந்தப் . . . . . யாகிலும் . . . . யாகிலும் இயாதொரு சாதியான் தொட்டா லுடனே இஸ்த்தானம் பண்ணவேணும், மில்லாதே போனால் மகா பாவமென்று அவர்கள் தங்கள் சனங் களுக்குப் போதிவித்திருக்கிற படியினாலே இந்தச் சாதியாரைச் . . . . . தொட்டவுடனே இஸ்த்தானம் பண்ணுகிற வாடிக்கை வெகு காலமாய் நடந்து வருகுது.

இதற்கெதிரியாக வள்ளுவர் ஒற்றைப் . . . வைக் கண்டால் மகா தோஷமென்று எல்லோருக்கும் போதிவித்திருக்கிறார்கள்.

இந்தக் காரியம் இன்னாள்வரைக்குந் தமிழருக்குள்ளே நடந்து வருகுது. அவர்க ளொரு ஊருக்குப் போறபோது அல்லது ஒரு

கலியாணத்தை ஒரு நன்மையான காரியத்தை நாடிப் போறபோது, எதிரே ஒற்றைப் பாப்பான் வந்தா லுடனே தங்கள் பயணத்தை நிறுத்தி, வீட்டுக்குத் திரும்பி விடுவார்கள். இதைப்பற்றிச் சில பிராமணாள் ஒரு பெரிய மனுஷரிடத்திலே போறபோது, ஒற்றை யாய்ப் போகாமல் கூட ஒரு பிராமணனை அல்லது ஒரு சின்னப் பிராமணப் பய்யனையாவது கூட்டிப்போற தண்டக்கமுண்டு.

"இங்கே சொல்லப்பட்டபடி நன்மையான காரியத்தை நாடிப் போறபோது, ஒற்றைப் . . . . . காண்கிறது மகா பெரிய சகுனத் தடை யென்று இக்கியானிகள் சகலத்திராளும் நம்பி விசுவாசித்து, அதின்பெரிலே யொரு கதையுஞ் சொல்லுவார்கள். அந்தக் கதையையுஞ் சுருக்கமாக இவிடத்திலே யெழுதிக் காட்டு கிறேன். அதாவது,

முன்னொருதன் கலியாணம் பண்ணிக்கொடுக்க தன் மகளையும் பெண்வழிச் சனங்களையுங் கூட்டிக்கொண்டு நல்லநாள்க் கேட்டு வீட்டைவிட்டுப் பிறப்பட்டு மாப்பிள்ளை யிருக்கிற ஊருக்குப் போறபோது நடுவழியிலே யிவர்களுக்கெதிராக ஒரு பிராமணக் குருக்கள் மகா பெரியவர் வேத சாஸ்திரமெல்லாம் படித்தவர் வந்தார்.

அவரைக் கண்டவுடனே இவர்க ளெல்லாரும் பெரிய சவனத் தடையாச்சுதே யென்று பயந்து கையை முறித்துக்கொண்டு அப்புறம் நடக்க மனதுவராமல் பயணத்தை நிறுத்தி ஒரு வண்ணான் வீட்டுக் கூடத்திலே வந்து கிடந்தார்கள். அவர்களன்று ராத்திரி யெல்லாஞ் சஞ்சலப்பட்டு, "பெண்ணுக்கென்ன நடக்குமோ? மாப்பிள்ளைக்கென்ன நடக்குமோ? ஒருவேளையிலே நம்முட மகள் தாலியறுத்துப் போவாளோ? இப்படி மோசமான சவனத்தடை நடந்துதே? ஊருக்குத் திரும்பிப் போகவேணுமானாலும் வீட்டார் கலியாண நாளுங் குறித்து சகல வேகிமையும் பண்ணிப் போட்டார்களே? யென்னசெய்வோ?" மென்று இல்லாத யோசினைக ளெல்லாம் பண்ணி விசாரப்பட்டுக் கொண்டிருக்கிறபோது, அந்த வீடு வண்ணான் வீடானபடியினாலே அந்த வீட்டுத் தொழுவத்திலே சில கழுதைகள் அடைத்துக் கிடந்துது.

அப்போ, ஒரு ஆண் கழுதை பெண் கழுதையைக் கண்டு மகா பெரிய சத்தமாய்க் கத்தித்துது. இந்தச் சத்தத்தைக் கேட்டவுடனே

"பெருவாயன் கத்தினான்; நல்ல சவன முண்டாச்சுதுர் இனிமே லொரு சிந்தனையு மில்லை; பெண்ணுக்கு மாப்பிள்ளைக்குஞ் சேதம் வரா"தென்று உடனே பிறப்பட்டுக் கலியாண வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

இந்த விதமாக, அந்த ஏழை அக்கியானிகள் தங்கள் குருக்களைக் கண்டது பெரிய சவனத்தடை யென்றும், வண்ணானுடைய கழுதை கற்றினது மகா நன்மை யென்றுஞ் சிந்தித்துக்கொண்டு போனார்கள். இன்று முதலாய் அக்கியானிகள் ஒரு ஊருக்குப் பிறப்பட்டுப் போற போது கழுதை கத்தினால், அது கிடைக்கத் தக்கனை சவனமல்ல வென்று புகழ்ந்து கொள்ளுவார்கள்.

இப்படியாக ஒற்றைப் பிராமணன் சவனத்தடையா யிருக்கிறாப் போலே மொட்டைப் பாப்பாத்திகளுஞ் சவனத் தடையா யிருக் கிறார்க ளென்று அக்கியானிகள் நம்புகிறார்கள். இதெல்லாம் பிராமணாளுக்கும் வள்ளுவராகிய . . . . . . முண்டாகிய தாயாதிப் பகையினாலே யுண்டாச்சுது.

.........க்கும் .........க்கு மிருக்கிற வித்தியாச மென்னவென்றால் ...... ...... வீட்டிலே சாப்பிட மாட்டார்கள். தாங்க ளொன்றுக் கொன்று தொட்டுக் கொண்டாலும், பானை சட்டிகளைத் தொட மாட்டார்கள். .. ... மாடு சாப்பிடுகிறபடி ......... சாப்பிடமாட்டார் கள். இவர்களுக்குள்ளே கொள்வினை கொடுப்பினையுமில்லை. ஆனா லிப்போ இங்கிலீசு ராசாங்கமான பிறகு ......... அனேகர் அய்சுவரியவான்களாய்ப் போனதினாலே தங்கள் பணத்தினாலே சில ...... ...... பெண்களைக் கலியாண முகித்திருக்கிறார்கள்.

இத்தனை தூரம் ......... செய்தியைச் சொல்லிக்காட்டினது இவிடத்திலே போதும்.

இதுகளை யெல்லாம் மாரியம்மனுட பூறுவோத்திரத்தைக் காட்டவேண்டி யித்தனை தூரம் இவிடத்திலே விஸ்தாரமாகச் சொல்லவேண்டிய தாச்சுது. அப்புறம் இதைத் தொட்டுப் பேச வேண்டிய அவசரமில்லை. ஆனபடியினாலே முன்னிறுத்தின சோழ ராசாவினுடைய சொச்சக் கதையை மறுபடியு மிவிடத்திலே சொல்லிக் காட்டுகிறேன். அதாவது,

## ரு. அதிகாரம்

**பட்டீசுரத்துக்குங் கும்பகோணத்துக்கும் நடுவாக உப்பரிகை யுண்டுபண்ணின சோழன் பேரிலே**

முன் சோழராசாவுடைய சொற்பனத்திலே பிறவிடைச் சாம்பானும் அவன் பெண்சாதி பெரியநாயகமும் வந்து தங்களுக்கும் மேலாகச் சொல்லப்பட்ட மாரியம்மைக்குங் கோவில் கட்டிவைக்க வேணுமென்று கேட்டபடியே திரும்பி வருகிறபோது, கட்டி வைக்கிறோ மென்று சொல்லிப்போட்டுக் கிழக்கே திருக்கடையூருக்கு வந்தார்.

அக்காலத்திலே, திருக்கடையூர் திருப்பணி தவிர வேறே திருப்பணி அல்லது கோவில்க் குளங்க ளிந்த ராட்சியத்தி லெங்குங் கிடையாது. திருக்கடையூர் தரங்கம்பாடிக்கு வடக்கே மூன்று நாழிகை வழி. சோழராசா சொல்லப்பட்ட திருக்கடையூருக்கு வந்து அவிடத்துச் சாமியைச் சேவித்துக் கொண்டு அவிடத்திலுள்ள சாஸ்த்திரிகளைக் கேட்டு அவர்களால்க் குறிக்கப்பட்டபடி பட்டீசுரத்துக்கு மேல் பாரிசமா யிருக்கிற சோழ மாளிகையைக் கட்ட நிலவரப் படுத்திக் கொண்டான்.

இந்தச் சோழ மாளிகை பட்டீசுரத்துக்குங் கும்பகோணத்துக்கும் நடுவேயிருந்தது அந்தச் சோழ மாளிகைக்கும் இரண்டு நாழிகை வழித் தூரமிருக்கும். அந்தச் சோழ மாளிகை அரண்மனையெல்லாம் அழிந்து போய் ஒரு உப்பரிகை அல்லது ஒரு கோபுரம் போல ஒரு அடையாள மாத்திரம் நிற்குது. அதிலோர மெல்லாம் புஞ்சைப் பயிரிடுகிறார்கள். இந்த உப்பரிகைக்குச் சிலர் நந்தன் மாளிகை யென்றுஞ் சொல்லுகிறார்கள்.

நானினைக்கிறபடி, சோழ ராசாங்கத்துக்கு பிற்காலத்திலே நந்த னென்கிற ....... அவிடத்திலே சிறுது கால மிருந்து ராட்சிய பாரம் பண்ணினதாய்க் காணுது. அந்த நாளிலேதான் விளா றிலே அவர்களுடைய உறவின் முறையாரில்ப் பெரிய மனுஷர் மலாரிக் கோட்டை போட்டிருந்தார்களாக்கும். பின்னையும் விளாறுக் கோட்டை யென்று வருகிற பேரினாலே அதற்குக் கோட்டை யிருந்துதென்று நிதானிக்கக் கூடாது. ஏனென்றால் தமிழர்களுடைய

வாடிக்கை ஒரு சின்னப் பட்டிக்காடு அல்லது கோட்டையில்லாத சின்ன ஊருக்கு முதலா யிப்படிக்கொத்த பேரிடுகிறதுண்டு.

இப்படியே பருத்திக் கோட்டை, சூரக்கோட்டை, ஆதனக் கோட்டை, கருக்காக் கோட்டை, கண்டரக் கோட்டை யென்று தஞ்சாவூரைச் சுற்றிலுஞ் சில ஊர்க ளிருக்குது. ஆயிலும், அது களுக்குக் கோட்டை யில்லை.

பின்னையும், விளாறுக் கோட்டை என்கிற கிராமத்திலே முன் கோட்டை யிருந்து தென்கிறதற்கு யாதொரு அஸ்த்திவாரங்கள், கல்லுகள், செங்கல்கள் பின்னெந்த அடையாளமு மில்லை. அதைப் பற்றி அதை யத்தனை சீக்கிரமாய் நம்பக் கூடவில்லை. என்றாலும், அதிலே முற்காலத்திலே கோட்டை யிருந்துதென்று அனேகர் வாய் விசேஷமாகச் சொல்லுகிறார்கள். அப்படியே கோட்டை யிருந் தாலும், அது சோழ ராசாங்கத்துக்குப் பிற்காலத்திலே யுண்டான தாக யிருக்கவேணுமே யல்லாமல், பூறுவ காலத்திலே துவக்கி யுண்டா யிருந்துதென்று நினைக்கப் போகாது.

பின்னையு மிவிடத்திலே யறிய வேண்டியது சோழராசாவாலே யிந்த ராட்சியத்தின் காடுகளெல்லாம் வெட்டப்பட்டுக் குடியேறின தற்குப் பிக்கில்லை என்றாலும், ஒரேமுட்டா யிது நடந்ததில்லை; ஒரே சோழன் தானே எல்லாக் காட்டையும் அழித்துப்போட்ட தில்லை. நாளடவிலே பல ராசாக்களாலே எல்லாக் காடுகளும் வெட்டப்பட்டு எங்கும் பட்டணமும் ஊர்களுந் தோட்டங்களும் வயல்களும் புஞ்சைகளு முண்டாச்சுது. துவக்கத்திலே யிருந்த அந்த ராசாக்கள் பட்டணங்களுக்கு விரகுண்டாகும் படியாகவும், ஆடு மாடுகள் மேய்க்கிறதற் கிடமுண்டாகும்படிக்கும் அங்கங்கே பட்ட ணத்தைச் சுற்றி காத வழி இரு காத வழி தூரமான காடுகளை விட்டுவைத்தார்கள்.

வடுக ராசாக்கள் நாளிலே முதலாய அனேகங் காடுகளை யழித்து நாடாக்கினார்கள். வடுக ராசாங்கத்துக்கு முன்னே மறவ ரிருந்த காலத்திலே சோழ ராசாங்கமும் பாண்டிய ராசாங்கமு மற்றுப்போனபடியினாலே அவனவன் வலுவிலே நினைத்தபடி அந்தந்த இடங்களிலே தன்னை யுயர்த்தி சீர்மை கட்டி யாண்டார்கள்.

மறவர் நினைத்த படிக்கு யெழும்பி பாண்டியன் வங்கிஷத்தை யழித்து பாண்டி மண்டலஞ், சோழ மண்டலந், தொண்டை மண்டலத்தை யாண்டுகொள்ளத் துணிந்தாப் போலே இச்சோழ தேசத்தில் மிச்சமாய்ப் பெருகிப்போயிருந்த ...... மெழும்பி நந்த னென்கிற ஒரு ...... ராசாவாக்கி மேலாகச் சொல்லப்பட்ட பட்டுசுரத்துக்குங் கும்பகோணத்துக்கும் நடுவே யிருக்கிற சோழ மாளிகையிலே யிருந்து கொஞ்ச நேரம் ராட்சிய பாரம் பண்ணி னான். மறவர் திரண்டு கூடி அவனையும் அழித்துப் போட்டார்கள். பின்னையும் விளாரிலே . . . . . . போட்டிருந்த கோட்டையை வடுக ராசாக்கள் தங்கள் ராட்சியபாரத்தின் காலத்திலே அழித்துப் போட்டார்க ளென்று சொல்லுகிறார்கள். அதெப்படி யென்றால்,

## சு) அதிகாரம்

**'அம்புலிச் சாமந்த நாராயண் வெண்**
**ணகரப் பெருமா? னென்கிற பறையன்**
**பேரிலே**

இப்போ விளாறுக்கோட்டை யென்று சொல்லப்படுகிறதற்கு, முற்காலத்திலே மலாரிக்கோட்டை யென்று பேர். அதிலே, மேலாகச் சொல்லப்பட்ட இராவணனுடைய ......... மல்லியப் பெருமான் வங்கிஷத்தானொருதன் குடியிருந்தான். அவனுடைய பேர் அம்புலிச் சாமந்த நாராயண வெண்ணகரப் பெருமான். இந்தப் பேருடைய அர்த்த மேதென்றால், அம்புலி - சந்திரன், சாமந்தன் - .... ...., நாராயணன் - சூரியன், வெண்ணகரப்பெரு மான் - விஸ்ட்னுபத்தன், இதின்படியே இந்தப்பேருடைய பொரு ளேதென்றால், சந்திராள் சூரியா ளுள்ளவரைக்கும் நிற்கப்பட்ட விஸ்ட்னுபத்தனாகிய ... ....,. னென்கிற அர்த்தங் கொள்ளும். இந்த அம்புலிச் சாமந்த நாராயண வெண்ணகரப் பெருமான் மலாரிக்கோட்டை அல்லது விளாறுக் கோட்டையைத் தனக்குந் தன் சமுசாரத்துக்கு முதலியா யிருக்க வுண்டுபண்ணி யிருந்தான்.

இவனுக்கு ஏழு பெண்சாதிகள். இவர்களும் இவர்கள் பெற்ற பிள்ளைகளு மாத்திரம் அந்தக் கோட்டைக்குள்ளே குடியிருந் தார்கள். வெளியே பேட்டையிலே மற்ற அவனுறவின் முறையார் குடி யிருந்தார்கள். அந்தப் பெண்சாதிகளுக்கு பின்னொரு ஆண்

பிள்ளைகளையுங் காணக் கூடாதபடிக்குக் காவலுங் கட்டுமிருந்துது. அவிடத்திலே பெண்பிள்ளைகள் மாத்திரம் போக்குவரத்தா யிருக்கக் கூடும்.

சொல்லப்பட்ட அம்புலிச் சாமந்த நாராயண் வெண்ணகரப் பெருமான் நித்த மொருவிசை தன் சேவுகரோடேகூடக் குதிரை மட்டத்தி லேறிக்கொண்டு நாயக்கரிடத்திலே போய்க் கண்டு கொண்டு வருவான்.

இப்படி, நாயக்கரிடத்திலே போய் வருகிறபோ தொருநாள், இவனுடைய கட்சிப் பெண்சாதியாகிய மல்லியப்பிச்சன் மகள் கதவின் மறைவிலே நின்றுகொண்டு வாசல் காக்கிற மனுஷனுக்குச் சுருட்டு பத்தவைக்க நெருப்புக் கொடுத்ததைக் கண்டான். அப்போ, அவனுக்குள் மிகுந்த கோப முண்டாகி இவளுடைய துணிகரத்தைப் போலே தான் மற்றப் பெண்டுகளுக்கு மிருக்குமென்று தீர்த்துக் கொண்டு ஏழுபேரையும் வரவழைத்து தன் சாதியார் சனத்தார் ஆருக்குஞ் சொல்லாதபடிக்கு கோட்டைக்குள்ளே நெருப்பு வளர்த்து அவர்களை யதிலே தள்ளிவிட்டான்.

இந்தச் செய்தியை ராட்சியபாரம் பண்ணுகிற விசையராகவ நாயக்க ரறிந்து அவனையும் அவனண்ணன், தம்பி, பெண்டுகள், பிள்ளைகள், சகலத்திரானையுங் கொன்றுபோட்டு அந்தக் கோட்டையையு மிடித்துப் போட்டார்கள். ஆனபடியினாலே, அவிடத்திலே அந்தக் கோட்டை யிருந்ததும் அதை வடுக ராசாக்கள் அழித்துப்போட்டது மெய்தானென்று சில பெரிய மனுஷர் சொல்லு கிறார்கள்.

இப்போ தஞ்சாவூரிலே யிரண்டு விதமான ........ ரிருக்கிறார் கள். ஒரு வகுப்புக் கல்லுவெட்டி; ஒரு வகுப்புத் தஞ்சன் கோடியான்.

இந்த இரண்டு கூட்டத்துக்குஞ் சொல்லிமுடியாத பகையுஞ் சண்டையு மிருக்கிறது. கல்லுவெட்டி சொல்லுகிறது, "நான்தா னித்தேசத்துக் காணிக்குடையவன்; காவலும் பிணஞ் சுடுகிறதும் செற்றமா டெடுக்கிறதும். இதுக்கு வருகிற ஆதாயங்க ளெல்லாம் எங்கள் கூட்டத்தைச் சேரவேணு மெ"ன்கிறான்.

தஞ்சன்கோடியான், "அப்படியல்ல, நான்தான் காணிக்குடையவ னென்னைச் சேரவேணு" மென்றான்.

இவர்களுடைய வழக்கு இப்படி முப்பது நாற்பது வருஷக்காலமா யிருக்குது. இப்போ இருக்கிற சரபோசி மகாராசாவின் நாளிலே சூஎாஈகஅ (1798) வருஷத்திலே துவக்கி இரண்டு மூன்று வருஷக் காலம் இரு தரத்தாரும் வழக்கிலே கிடந்து நெய்யிலே கையிட்டுக் கொண்டார்கள்.

என்றாலும் இன்னஞ் சண்டை சண்டைதான். இந்த இருவரில் முந்தினவனாகிய கல்லுவெட்டி சொல்லுகிற வாக்குமூல மென்ன வென்றால், மேலாகச் சொல்லப்பட்ட விளாறுக்கோட்டையிலே யிருந்த அம்புலிச் சாமந்த நாராயண வெண்ணகரப் பெருமானுக்குத் தஞ்சாவூ ரெல்லைக் காவலு மயானக் காணிகாட்சியுமிருந்துது. நாயக்கர் அவனையும் அவன் வங்கிஷத்தையு மழித்துக் கோட்டை யையு மிடித்துப் போட்ட பிறகு ஒரு ஆண்பிள்ளை மாத்திரந் தப்பிப் பிழைத்துது. அதற்கு இப்போ இரண்டு வயது அதைப் பலபட்ட டையார் அதாவது பலசரக்குக்கடை.. யாபாரிகள், அந்தப் பிள்ளை யின் பேரில் மனதுருகி தங்கள் கடை கூட்டி சாணி போடுகிற ... .... கையிலே கொடுத்து, தங்கள் சிலவினாலே வளர்த்தார்கள்.

இப்படிப் பலபட்டடையாருடைய விசாரணைக்குள்ளே மூன்று வருஷமிருந்துது. பிள்ளைக்கு அஞ்சு பிராய மாகிறபோது பள்ளிக் கூடத்திலே வைத்து ஆயுத பரிச்சை படித்துக் கொடுத்தார்கள். நல்லாய் வாழ்ந்த பெரிய மனுஷனுடைய பிள்ளையென்று பலபட் டையார் மெத்தவுந் தயவு வைத்து அவனுக்கு நல்ல வஸ்த்திரங்கள் வாங்கிக்கொடுத்து, சாப்பாட்டுக் காரியங்கள் மற்றதி லொன்றுங் குறைவில்லாதபடிக்குப் பிராமரித்துக்கொண்டு வந்தார்கள்.

இந்தப் பய்யன் சிலம்பம் நல்லாய்ப் பழகிறத்தைக் கண்ட வொருபயல் போய் அதை நாயக்கர் வீட்டுப் பிள்ளைகளுக்குச் சொன்னான்.

நாயக்கர் வீட்டுப் பிள்ளைகள் அவனை அழைப்பிவித்து அவனோடே நித்தஞ் சிலம்பம் விளையாடிக் கொண்டிருப்பார்கள். ஒரு நாள் நாயக்கர் வீட்டுப் பிள்ளை பதஸ்ட்டமா யிவனைத்

தோளிலே யொரு அடி அடித்தது. உடனே அந்தப் பய்யன் கோல் வாங்கி, நாயக்கர் வீட்டுப்பிள்ளை தலையை யுடைத்துப் போட்டு, சந்தடி ஆகிறதற்கு முன்னோடிப் போய்விட்டான்.

நாயக்கர் வீட்டுப் பிள்ளைகளுக்குத் தலையிலே பெரிய காயமாய் ரெத்தம் வந்தபடியினாலே, அடித்தவனாரென்று விசாரிக்கிற போது பலபட்டடையார் வளக்கிற ......ப்பிள்ளையாண்டானென்று ராசாவுக்குக் கேழ்வி யாச்சுது. அவர்களை யழைப்பிவித்து, இந்தக் காரியத்தை நீங்கள் வளக்கிற அந்தப் பய லாரென்று கேட்டார். அதற்கவர்கள் தாங்க விளாறுக் கோட்டையை யழித்த போது நாங்கள் வேடிக்கை பார்க்கப் போயிருந்தோம். இந்தப் பயல் இரண்டு வய்சுக் குழந்தையா யிருந்தபடியினாலே செற்றுப் போன தன் தாயை உயிரோடிருக்கிறதாக நினைத்து பால் குடித்துக் கொண்டிருந்ததைக் கண்டு மனதுருகித் தூக்கிக்கொண்டு வந்து வளர்த்தோம், மேலும், அந்தப் பிள்ளையாண்டா னுங்களுடைய .........யிருக்கிறா னுங்களுக்குச் சித்தமானதைச் செய்யுங்கோளென்றார்கள்.

அப்போ, ராசா இது காரியங்களைக் கேட்டபோது ஆச்சரியப்பட்டு, நல்லது, அவன் வங்கிஷத்தாரைத்தான் நாமழித்துப் போட்டோமே; இந்தப் பயலின்னேர மட்டும் பிழைத்தது சுவாமி கிறுபைதான்; இனி இவனையாகிலும் நாம் வைத்து ஆதரித்து நடத்த வேணுமென்று தீர்மானம் பண்ணி தம்முட முதுப்போக்கிலே யிருந்து நித்தம் அவனுக்குச் சாப்பாடு போடக் கட்டளையிட்டார்.

அப்படியே சாப்பாடு போட்டு வந்தார்கள். அரமனை முதுப்போக்கிலே யிருக்கிற பெரிய மனுஷன் இந்தப் பய்யனுக்கு எப்போதுஞ் சோறுவாங்கிப் போட ஒரு ஆள் வேணுமே யென்று யோசனை பண்ணிச் சத்திரத்திலே தாய் தகப்பனில்லாத ஒரு ஏழைப் பெண்பிள்ளையை வியாதி விக்கின மில்லாததாய்ப் பார்த்துக் கூட்டிவந்து இவனுக் குதவியா யிருக்கவைத்தார்கள்.

இப்படிச் சில வருஷ யிருந்தபோது, இவனுக்கும் பதினெட்டுப் பிராயமாகி அந்தப் பெண்ணும் பெரியவளானபோது இவர்களொன்றுக்கொன்று கூடினத்தினாலே அந்தப் பெண் கெற்பிணியாகி ஒரு ஆண் பிள்ளையைப் பெற்றாள். அதற்குப் பேர் கல்லுவெட்டி.

அந்தக் கல்லுவெட்டியினுடைய வங்கிஷத்தா ரிப்போ சொல்லுகிற தென்னவென்றால், எங்களுக்குத்தான் தஞ்சாவூர்க் காவலு மயான சுதந்திரமுஞ் செல்லு, மற்றப் ...... ரெல்லாம் மராட்டிய ராசாக்கள் வருகிறபோது வடக்கேயிருந்து வந்தார்கள். மராட்டிய ராசாக்கள் இந்த ராட்சியத்தை வடுக நாயக்கமாரிடத்திலிருந்து பிடித்துக் கொண்டபோது அவர்களோடே கூட குதிரை பிடித்துக்கொண்டு வந்தக் காசுதாரிப் ......... அவர்க ளிப்போ எங்கள் காவலையுஞ் சுதந்திரத்தையு மெடுத்துக்கொண்டார்க ளென்று சொல்லு கிறார்கள்.

அவர்க ளெதிரியாகிய **தஞ்சன் கோடியான்** வாக்குமூலத்தை விசாரிக்க இரண்டு மாஸ்த்தை வரையில்ப் பண்ணாத எற்றினமெல் லாம் பண்ணியுங் கூடாதே போச்சுது. ஏனென்றா லவன் தன் பூறுவோத்திரங்களைச் சொல்லப் பயப்படுகிறான்.

இதுகளையெல்லாங் கேட்டெழுதிக்கொண்டு தங்களுடைய காணி காவல் சுதந்திரத்தைப் பிடிங்கி யெதிரிக்குக் கொடுத்திரு வார்க ளென்று அவர்கள் வீணாகத் தேற்றிக்கொள்ளுகிற பய(த்)தி னாலே நானென்னதான் அவர்களைச் சினேகம் பண்ணினாலும் ஆணையிட்டாலு மென்னை நம்பவில்லை. ஆனபடியினாலே அதை விட்டுவிட்டேன்.

இங்கே யிந்தக் கல்லுவெட்டியினுடைய சரித்திரத்தை நான் காட்டின முகாந்திர மென்னவென்றால், இவன் முற்காலத்திலிருந்து இராவணன் . . . . . . . மல்லியப்பெருமான் வங்கிஷஞ் சோழ ராசாக்கள் காலந் துவக்கி நெடுகிலும் லங்கிஷ பாரம்பறையாய் வருகிறத்தினாலும் இவர்கள் வங்கிஷத்தில் மேலாக சொன்னபடி மூன்று பிறதான மனுஷராகிய தியாகச்சாம்பான்; பிறவிடைச் சாம்பான், சாம்புகச் சாம்பான் என்கிறவர்களுடைய விக்கிறகங்கள் திருவாரூரிலுந் தஞ்சாவூரிலுந் திருச்சிராப்பள்ளியிலு மிருக்கிற பிறதான கோவில்களில் வணங்கப்படுகிறபடியினாலும், அம்புலிச் சாமந்த நாராயண வெண்ணகரப் பெருமா னிவர்கள் வங்கிஷத்திலே கடசியாக விளாறுக் கோட்டையிலே பேரெடுப்பா யிருந்தா னென்கிறத்தைப் பற்றியும் இதெல்லாம் வலங்கைச் சாதியார் சரித்திரத்தைக் காட்டுகிறதற்கு ஏற்த்த எற்றினமாயிருந்தபடி யினாலேயு மிவிடத்தி லெழுதினே னொழிய மற்றப்படியல்ல; அப்புறஞ் சோழ ராசாவின் கதையைத் துவக்குவோம்.

## எ. அதிகாரம்

### தியாகச் சாம்பா னென்கிற ...... பேரிலே

மேலாகச் சொல்லப்பட்ட சோழராசாத் திருக்கடையூர்ச் சாஸ்திரிகள் சொன்னபடிக்குப் பட்டீசுரத்துக்கு மேல்பார்சமா யிருக்கிற சோழ மாளிகை கட்ட நிலவரப்படுத்திக் கொண்டு திருக்கடையூரிலிருந்து தில்லையாழிக்கு வந்து, அதிலிருந்து காரைக் காலுக்குப் போய், அதிலிருந்து நாகூருக்குப் போய், நாகூரிலிருந்து திருவாரூருக்கு வந்தான்.

திருவாரூர் தியாகச்சாம்பானுடைய தெருவீதிக்கு வருகிறபோது, தியாகச்சாம்பான் மகள் எதிர் வீட்டிலே நெருப்பெடுக்கக் குறு[க்]க போனாள். அவள் அழகான பெண்ணும் வாலிப இஸ்த்திரியுமா யிருந்தபடியினாலே, அவள் மேலே ஆசைப்பட்டு அவளைத் தூக்கி தன் பல்லக்கிலே வைத்துக் கொண்டு அப்புறம் நடந்தான்.

அப்போ, அவளுடைய பெந்துசனங்கள் ஆயுத முஸ்த்திப் போடே பிறப்பட்டு அவரோடே சண்டை போட்டுப் பெண்ணை விடச் சொன்னார்கள் அப்போ சோழராசா அந்தப் பெண்ணுடைய தகப்பனாகிய தியாகச்சாம்பானை தகனப்பண்ணி யிருக்கிற விசானக்கரைக்கு[1] அருகாண்மையாய்ப் பல்லக்கை நிறுத்தி அவாள் பெந்துசனங்களை அமத்தி யுளுக்காரச் சொல்லி, தனதுபண்ணி வெற்றிலை பாக்குக் கொடுத்து அந்தப் பெண்ணை தாம் விவாகம் பண்ணிக்கொள்கிறோ மென்று சொல்லி வாற்தைபாடு கொடுத்து, அவிடத்திலே கொஞ்ச நாளிருந்து, அந்தப் பெண்ணுடைய தகப்ப னாகிய தியாகச்சாம்பானைத் தகனம் பண்ணின இடத்திலே அரச மரமும் வேப்ப மரமும் வைத்து திண்ணை போட்டு, ரெண்டு செங்கலை நட்டு, அவனைத் தெய்வமாகச் சனங்கள் கோரிக் கொண்டிருந்தார்கள்.

அந்த இடத்திலே அந்தப் பெண்ணை விவாகம் பண்ணிக் கொண்டார். அந்தப் பெண்ணின்பேரிலே யிருந்த பிறியத்தினாலே

---

[1] விசானக்கரை - மயானக்கரை.

யும் அவளுடைய தகப்பன் செற்ற இடத்திலே சத்தி ஷழங்குதென் றங்கே யிருந்தவர்களால்க் கேழ்விப்பட்டபடியினாலேயும் அந்தத் தியாகச்சாம்பான் பேருக்கு அவிடத்திலே திருப்பணி கட்டிவைத்தார்.

அதை யிப்போ அக்கியானிகள் தியாகராச சுவாமி யென்று கும்பி[டு]கிறார்கள். சில வருஷத்துக்கு முன்னாக இந்த தியாகராச ரென்கிற விக்கிறகங் காணாமல்ப் போனதினாலே ஆரிசுத் துறைக் கும் முத்தய்ய முதலியாருக்கும் வாக்குவாதங்கள் நடந்துது. இப்போ வேறே விக்கிறகத்தை வார்த்து. அந்த இடத்தில் வைத் திருக்கிறார்கள்,

அப்புறஞ் சோழராசா திருவாரூர்விட்டுப் பிறப்பட்டுத் தஞ்சா வூருக்கு வந்து தாமுன் சொல்லியிருந்த பிறிதிக்கினைப்படிக்கு முன் பருத்திக்கொல்லையா யிருந்த விசான பூமியை நடுப்புற வைத்துச் சுற்றி மதிளெடுத்து, நடுவே கோபுரங் கட்டிப் பெருவிடைச் சாம் பானுக்கும் பெரியநாயகத்துக்கும் முன்னிருந்த பேரை மாற்றி பெருவிடை நயினா ரென்றும் பெரியநாயகி அம்மாளென்று மறுபே ரிட்டு பூசை புலக்காரந் தீவாராதனை பண்ணி நடத்தினார்.

அப்புறம் வடுக ராசாக்கள் நாளையிலே அந்தப் பிறவிடை யீசுரரென்று சொல்லி யழைத்தார்கள். இப்போ மராட்டிய ராசா வின் காலத்திலே பிறதீசுரரென்று சொல்லுகிறார்கள். அப்புறஞ் சோழராசா தஞ்சாவூர் விட்டுப் பிறப்பட்டு முன்தாம் நேமுகம் பண்ணியிருந்தபடி பட்டீசுரத்துக்கு மேல்பக்கஞ் சோழ மாளிகை கட்டி, இந்த ராட்சியத்தை ஆண்டனுபவித்துக் கொண்டு வெகு தேவ இஸ்த்தலங்களைச் செய்வித்து அதுகளுக்கெல்லா முபகாரியா யிருந்து தன் காலத்தைப் பின்னிட்டார்.

இவிடத்திலே அறியவேண்டியது சோழன் மருத்துவ மென்கிற பொஸ்த்தகத்திலே பார்க்கிறபடி சின்னக்கோட்டைக்குள்ளே யிருக்கிற பிறதீசுரர் கோவிலைக் கட்டினவன் கரிகாலச் சோழ னென்று சொல்லப்படுகுது. பின்னையுஞ் சோழன் பட்டீசுரத்துக் கிட்ட அரண்மனை கட்டியிருந்தாலும் இவர்களுடைய பிறதான ஆதிக்கம் உறையூ ரல்லாமல் மற்றப்படி யல்ல.

பின்னையுந் திருவாரூரிலே தியாகராச சுவாமி யென்று சொல்லப்படுகிறவர் தியாகச் சாம்பானென்கிற...... யிருந்தா னென்று இந்தச் சரித்திரத்திலே சொல்லப்படுகுது இது ஏறக்குறைய நிலவரமா யிருக்குமென்று ஆனையேறும் பெரும் ...... னென்று சொல்லப்படுகிறவனுக்கு திருவாரூரிலே இன்னாளிலேகூடத் திரு நாள் பண்ணுகிறதினாலே எவளவாகிலுங் கண்டுகொள்ளலாம்.

இவிடத்திலே பிராமணாளுஞ் சூத்திராளுமா யிருக்கப்பட்ட மேல்சாதி மனுஷர் கீழ்சாதியாகிய ..... திருநாள் பண்ண வேண்டிய முகாந்திர மென்னவென்று சற்றுக் கலனித்துப் பாக்க வேணும். அதையவர்கள் வேறே விதமாகச் சொல்லுகிறார்கள். அதாவது,

## அ. அதிகாரம்

### ஆனையேறும் பெரும் ...... பேரிலே

மாணிக்கவாசக ருண்டுபண்ணின திருவாசகத்திலும் திருவாரூர் தேவாரத்திலும் பார்க்கிறபடி சிவன் அல்லது ருத்திரனுக்குப் பயித்தியம் பிடித்து வெகுகாலஞ் சுரணை இல்லாமல் தன் பிறந்தக மான வூரையும் வீட்டையும் விட்டு சுடுகாட்டில் போய்ப் பிரண்டு எலும்புகளைப் பொறுக்கித் தின்று தலையோடுகளைப் பொறுக்கிக் கழுத்திலே கட்டிக் கொண்டுதிரிந்தான்.

அப்போ, மதங்கி யென்கிற ஒரு வேட்டிச்சி அந்தச் சுடுகாட் டிலே புணஞ் சுடுகிறபோது பிணத்துக்குப் போடுகிற வாய்க்கரிசி களையும், அந்தப் பிணத்துக்குப் போடுகிற துணிகளையும், அந்தப் பிணங்களைச் சுடுகிற விராட்டிகளில் மீதியானதுகளையும் பொறக்க நித்தஞ் சுடுகாட்டிலே வந்து காத்திருப்பாள். அவளுக்குஞ் சொல்லப் பட்ட சிவனுக்குஞ் சினேகிதமாகி பதினாலு வருஷம் அவர் பயித்தியந் தீரமட்டும் அவளை வைத்திருந்தார்.

அப்போ அவருக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தது. ஒருதன் திருநாளுக்குப் போவான்; ஒருதன் ஆனையேறும் பெரும் ...... இவர்க ளிருவருக்கும் இன்னாள்களிலேகூட வருஷா வருஷாந்திரந் திருவாரூரிலே திருவிளா நடக்குது. ......

இங்கே சொல்லப்பட்ட ஆனையேறும் பெறும் . . . . . . திரு நாளுக்குப் போவா னென்கிற இந்த இரண்டு பேருடைய கதையை அக்கியானிக ளின்னம் அனேகந் துத்தியமும் விஸ்தாரமுமாகச் சொல்லிக் கொள்ளுவார்கள்.

இந்தச் சிவனும் விறுமாவும் விஸ்ட்ணுவும் முன்னிந்த வுலகத்தி லிருந்த பெரிய மனுஷர்தான். இவர்கள், பின்னாலே தேவர்களா னார்கள்.

இவர்களும் இன்னஞ் சில பெரியோர்களும் பிராமணாளும் ராசாக்களும் அந்தக் காலத்திலே . . . . . வலைச்சிகளையும், புலச்சிகளையும், வேடச்சிகளையுங், கூத்தாடிச்சிகளையுங், குறத்திகளையும், பரத்திகளையுந், துலுக்கச்சிகளையும் இடைச்சிகளையும், வண்ணாத்திகளையும் இன்னம் பல கீழ் சாதிப் பெண்களையும் வைத்திருந்தார்கள். அதினாலே அந்த இஸ்த்திரி களுக்கும் அவர்கள் வைத்திருந்த புருஷருக்கும் இன்னாள் வரைக் கும் அந்தந்த தேசத்திலே தேர் திருநாள் நடக்குது. அதில்ச் சிறுதுகளை மாத்திர மிவிடத்திலே காட்டுகிறேன். அதாவது,

க) சிவன் மதங்கி யென்கிற வேடிச்சியையுந் துலுக்கச்சியை யும் வண்ணாத்தியையும் வைத்திருந்த சரித்திரத்தை திருவணாமலை யிலே கொண்டாடி திருநாள்ச் செய்கிறார்கள்.

உ) விஸ்ட்ணு இடைச்சிகளையுந் துலுக்கச்சியையும் வைத் திருந்தார். இதைத்தொட்டு, சீரங்கத்திலே துலுக்க நாச்சியா ரென்கிற ஒரு விக்கிரகத்தை விஸ்ட்ணுவென்று சொல்லப்படுகிற இரங்கநாயகருடைய விக்கிரகத்துக் கிட்டச்செய்து வைத்திருக்குது.

ந) சிவனுடைய மகனாகிய சுப்பிறமணியன் குறப் பெண்ணா கிற வள்ளியையும் மீன் பிடிக்கிற பரத்திப் பெண்ணாகிற தெய் வானையையும் வைத்திருந்தார்.

ச) விறுமா புலச்சியையுங் கூத்தாடிச்சியையும் வைத்திருந்தார்.

ரு) சத்தீச ரென்கிற பேரெடுப்பான் பிராமணன், சண்டா ளியை அதாவது . . . . . . வைத்திருந்தார்.

௬) பிராமணருக்கு வேத முண்டாக்கின வேத விசாகருடைய தகப்பன் பராசர் மீன் பிடிக்கிற பரத்தியை வைத்திருந்தார்.

௭) இந்தச் சரித்திரத்திலே சொல்லப்படுகிற திருவள்ளுவருடைய தகப்பனாகிய பகவர் ஆதி யென்கிற ...... வைத்திருந்தார்.

௮) ...... மகளாகிற அருந்துதியை, பிராமணருக் கெல்லாம் பிறதான குருவாகிய வதிஸ்ட்டர் விவாகம் பண்ணினார்.

௯) காத்தா னென்கிற ...... ஆரியமாலை யென்கிற பிராமணத்தியை வைத்திருந்தான்.

௰) மதுரைவீர னென்கிற சக்கிலியன் மதுரைப் பாளைப் பட்டாகிற தொட்டியப் பொம்மைய னாயக்கன் மகளாகிற பொம்மியம்மாளை வைத்திருந்தான்.

இப்படி, யின்னம் அனேகம் பேருடைய சரித்திர முண்டு.

அதுகளையெல்லா மிவிடத்தில்க் காட்டினால்ப் பெரிய புராணமாகும்.

துரையவர்களுக்குச் சித்தமா யிருந்தால் இங்கே மறுசாதிப் பெண்களை வைத்திருந்தார்க ளென்று சொல்லப்பட்ட பத்துப் பேருடைய சரித்திரத்தை அலாதியாக வேறே பொஸ்த்தகத்திலே யெழுதி யனுப்புகிறேன்.

## ௯ அதிகாரம்

### சோழமண்டலத்தையாண்ட நந்த னென்கிற ..... பேரிலே

முன் சொல்லப்பட்ட சோழன் பட்டீசுரத்துக்கிட்ட சோழ மாளிகை கட்டிக் குடியிருக்கிற போது தான் திருவாரூரிலே யிருந்து கொண்டுவந்த தியாகச் சாம்பானுடைய மகளுக் கொரு பிள்ளை பிறந்துது. அதற்கு நந்தனென்று பேரிட்டார்கள். சோழராசா செற்ற பிற்பாடு, .....யினுடைய மகனாகிய நந்தன் சோழ ஆதிக்கத்துக்கு வந்தான். வந்தவுடனே ஒரு கெட்ட ஆலோசனை இவனுக்குள்ளாண்டாச்சுது.

அதென்ன வென்றால், தான் . . . . . மகனானபடியினாலே மேல்சாதி வங்கிஷங்களிலே சாதிக்கொரு பெண்ணைக் கலியாண முகித்தால் எல்லாங் கொள்வினை கொடுப்பினையினாலே யொன்றாய்ப் போம்; ஒன்றுக்கொன்றுத் தொடச் சாப்பிடப் பெண் கொள்ளப் பெண் கொடுக்க அன்னியவுன்னியமாய்ப் போம்; அப்போ நம்முடைய அங்கிஷையான பேர் மாறிப் போமென்று யோசனை பண்ணி, முதமுத வெள்ளாளப் பெண்ணைக் கலியாண முகித்தால் மற்றச் சாதியா னெல்லாந் தடையில்லாமல் பெண் கொடுப்பா னென்று யோசனை பண்ணினான். அப்படியே வெள்ளாளரை அழைப்பிவித்து நான் சோழராசாவின் மகனாயிருக்கிறபடியினாலே யெனக்குங்கள் வங்கிஷத்திலே பெண் கொடுக்கவேணு மென்று கேட்டான்

அப்போ வெள்ளாளரெல்லாருங் கூடி யோசனைபண்ணி அதிகார மிவனுக்குள் ளிருக்கிறபடியினாலே பெண் கொடுக்க மாட்டோ மென்றால் பொல்லாப்புச் செய்வான்; பெண் கொடுத்தால் நம்முட சாதிக்கு இங்கிஷையா யிருக்குது ஆனபடியினாலே பெண் கொடுப்போ மென்று சொல்லி, கவுத்துவமா யிந்த நந்தனையு மிவன் சாதியனைத்தையுங் கோன்றுபோடவேணுமென்று யோசனை பண்ணி, உம்முடைய வங்கிஷத்தார் சகலத்திரானையு மொருவர் தப்பாமல் பேசிக்கொண்டு எங்கள் சாதியாரையும் ஒன்றுவிடாமல் அழைப்பித்து எல்லாருங்கூடி ஆலோசனை பண்ணிக்கொண்டு ஒன்றுக்கொன்று வெற்றிலை பாக்கு மாற்றிக், கூட இருந்து சாப்பிட்டு, இந்தவிதமாகச் சாதியை யொன்றாக்கிக்கொண்ட பிற்பாடு பெண்ணையுங் கலியாண முகித்துக் கொடுத்து எகசம்பந்தமாய்ப் போவோமென்று சொன்னார்கள்.

அப்போ, நந்தன் சந்தோஷப்பட்டு தன் இனத்தாருக்குஞ் சாதியாருக்குந் தேசதேசத்தி லிருக்கிறவர்களுக்கும் பாக்கு வெற்றிலையு மோலையும் ஆண்களையு மனுப்பிக் கலியாணத்துக் கழைப்பித்தான்.

...... வெள்ளாளப் பெண்ணைக் கலியாண முய்க்கப் போறானென்கிற செய்தி யெங்கும் பிராசித்தமான படியினாலே யிந்தச்

சந்தோஷத்தையும் வேடிக்கையையும் பார்க்கக் குறிக்கப்பட்ட நாளிலே சகல ..... சாதியாரு மொன்றுதப்பாமல் வந்து கூடினார்கள்

அப்புறம் வெள்ளாளர் கம்மாளரிடத்திலே போய் அவர்களைச் சினேகிதம் பண்ணித் திரவியங்களைக் கொடுத்து என் சாதிக்கு ஈங்கிஷையாயிருக்குது; ...... யனாகிய நந்தன் எங்கள் பெண்ணைத் தனக்கு விவாகம் பண்ணித்தரச் சொல்லிக் கேழ்க்கிறான். ஆனபடியினாலே யிந்த வேளைக்கு நீ யுதவியாயிருந்து என் மானத்தைக் காக்கவேணும். இந்த சகாயத்தை நா னொருக்காலு மறக்க மாட்டேன். இதற்கென்ன சொல்லுகிறா யென்று கேட்டான். அதற்கு கம்மாளர், "எங்களுக்கு பெலத்த மரங்களுங் கல்லுகளும் அழைப்பித்துக் கொடுங்கோள்; நாங்கள் பொறிப்பந்தல் போட்டு ... ..... யெல்லாங் கொன்றுபோடுகிறோம்; அதற்கு ஆலோசனை பண்ணவேண்டிய தில்லை" யென்றார்கள்.

இந்த உபகாரத்தை வெள்ளாளர் பின்னாலே மறந்துபோனார்கள். அவர்க ளொன் சொந்த சாதியா யிருந்தாலும், அவர்களிதுகாரியத்திலே சொன்னவர்க்குத் தத்தந்தை நிறைவேற்றாமல் கம்மாளர் தங்களுக்கு அந்த இக்கட்டின காலத்திலே செய்த உபகாரத்தை மறந்துபோனத்தினாலே அவர்கள் முழுதும் நன்றி கெட்டவர்க ளென்று நான் மனஸ்த்தாபபட்டுச் சொல்லவேண்டியிருக்குது. ஏனென்றால் கம்மாளர் அன்றைக்குப் பொறிப்பந்தல்ப் போட்டு நந்தனையும் வஞ்சனத்தையுஞ் சங்காரம் பண்ணாதே போனால். இவன் பெண்ணைப் . . . . கலியாணம் முடிக்கிறதற்குப் பிக்கில்லை. இந்தப் பெரிய உபகாரத்தைச் செய்து, தன்மானத்தைக் காத்த கம்மாளனைப் . . . . . இக்காலத்திலே சகல உபத்திரப் படுத்துகிறத்தையு மிவன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான்.

இந்தப் பெரிய நஸ்ட்டங் கம்மாளருக்குத் தங்கள் சுய குற்றத்தினாலே வராமல் வெள்ளாளனுக் குபகாரஞ் செய்யப்போய் வந்துது. மற்றப்படி கம்மாளர் தங்கள் விருதுகளையு மடிக்கடி தங்கள் சீவனையு மிழந்துபோய், தங்கள் பெண்சாதிகளோடே தாங்களு மானத்தாட்சிபட இடமிராது.

அந்தப்படியே சகல வெள்ளாளரும் கூடி நந்தநார் சாவுக்குச் சொல்லி கல்லு மரமும் அழைப்பித்துக் கொடுத்து சகல சனங்களு மிருக்கும்படியான ஒரு பெரிய பந்தலை ஒரு வருஷ காலமாய்ப் போட்டார்கள். சகலவிதச் சிறப்பினாலும் பந்தலைச் சோடித்து ஒரு தூணிலே பொறிவைத்துக் கலியாணத்துக்கு முகுற்த்தநாள்க் குறித்து, நந்தன் ராசாவையும் அவனுறவின் முறையார் சகலத்திரா ளையும் ஒன்று தப்பாமல்ப் பந்தல்ச் சதிரிலே யிருக்கச்சொல்லிப் போட்டு வெள்ளாளருக்கெல்லா மரத்தாலே வேறே பந்தல்ப் போட்டிருந்துது. அதிலே அவர்கள் கூடியிருந்துகொண்டு பெண்ணை அழைத்துக்கொண்டு வருகிற பாவினையாக, பந்தல் முகப்பிலே வந்து நுழையுமுன்னே முன் கம்மாளனுக்குத் தந்து சொல்லியிருந்தபடியே, பந்தலுடைய பாரமெல்லாந் தாங்கியிருந்த பிறதான தூணிலே சூட்சஞ் செய்திருந்தபடியினாலே அந்தப் பொறியைத் தட்டிவிட்டுப் பந்தலைக் கீழே கவிழப்பண்ணினார்கள்.

பந்தல் விழுந்தவுடனே நந்தனுமவனுடைய சகல ..றனை முறையாரு மடிந்து போனார்க ளுடனே வெள்ளாளர் கூடிக் கொண்டுப் பந்தலைச் சுற்றி வளைந்துகொண்டு ஒருதருந் தப்பிப் போகாதபடிக்கு எல்லாரையுஞ் சமூலமாய்க் கொன்றுபோட்டார்கள்.

அப்போ ஒரு வண்ணான் வேடிக்கை பார்க்க வந்தவன், ஒரு வாலிப . . . பெண் எட்டொன்பது மாஸத்தைப் பூரண கெற்பினியா யிருந்தவள் ஒரு கல்லிடுக்கிலே கிடந்து மொண்டு மகா வுருக்கமா யழுது, தன்னை யிந்த அலதிக் கென்னைக் காந்துவிட வேணு மென்று அந்த வண்ணானைப் பார்த்து மன்றாடினாள்.

அந்த வண்ணான் பயத்தோடும் நடுக்கத்தோடுஞ் சீக்கிறமாக கல்லைப் பிரட்டி அந்தக் கெற்ப இஸ்த்திரியைத் தூக்கிவாரித் தன் சீலை மூட்டையிலே வைத்துக் கட்டிக் கொண்டு பார மிகுந்திருந்த படியினாலே யொரு கம்பு மூணிக்கொண்டு மெள்ள மெள்ளத் தன் வீட்டுக்கு நடந்து போனான்.

இவ னிப்படிப் போறத்தை ஒரு வெள்ளாளன் சாடையாகக் கண்டு, "ஏது, எழுகாலி, யெங்கே போறா யெ"ன்று கேட்டான் அதற் கந்த வண்ணான், எதையா வென்னை யெழுகாலி யென்று

சொன்னீர்க ளெ''ன்று கேட்டான். அதற்கு வெள்ளாளன் நீ போற நோக்கம் எனக்குத் தெரியாதென்று நினையாதே; நா னெழுகாலி யென்றுனக்குப் பேரிட்டது நாயமா யிருக்குது; ஏனென்றால் உனக்கு இரண்டு கால்; நீ முதுகிலே சுமந்துபோற கெற்ப இஸ்த்திரிக்கிரண்டு கால்; அவள் வயற்றிலே யிருக்கிற பிள்ளைக் கிரண்டு கால். நீ யூணிக்கொண்டு போற தடி யொருகால் ஆக ஏழுகால் ஆனபடியினாலே யுன்னை எழுகால் யென்று கூப்பிட்டே னென்று சொன்னான்.

இன்னாள் வரைக்குஞ் சகல சாதியாரும் ....... கூப்பிடுகிறபோது, எழுகாலி -அல்லது ஏகாலி யென்றழைக்கிறார்கள்.

அப்பா லந்த வெள்ளாளன் அந்த ..... சொன்னது, ''நல்லது, அந்தப் பெண்ணைக் கொண்டு போ: கெற்பஇஸ்த்திரியைக் கொன்றுபோடுகிறது, பாவம். அவள் வயிற்றிலே ஆண் பிள்ளை பிறக்குதோ பெண்பிள்ளை பிறக்குதோ? அப்படியே பிள்ளை பிறந்தாலும் அவன் மனுஷனாய் வளர்ந்து பொல்லாப்புச் செய்துபோடப் போறானா? அப்படியவன் பொல்லாப்புச் செய்யத் துணிகிற காலத்திலே இன்னொரு கல்பந்தல் சொன்னபடி கேட்குது போ'' வென்றனுப்பிவிட்டான்.

அப்புறம் ..... தன் வீட்டுக்குப் போய், தன் பெண் சாதிக்குச் சொல்லி அந்தப் பெண்ணைப் பத்திரமாய்ப் பிராயரிக்கச் சொன்னான்.

அப்போ அந்த வண்ணானுடைய பெண்சாதியுங் கெற்பஇஸ்த்திரியா யிருந்தாகள். இவர்க ளிரண்டு பேருக்கும் பேறுகாலம் வந்தபோது, முதப் ..... ஆண்பிள்ளையைப் பெற்றாள். பிற்பாடு வண்ணாத்தி பெண் பிள்ளையைப் பெற்றாள். இந்த இரண்டு பிள்ளைகளும் வளர்ந்து, ஒன்றுகூடி விளையாடிக் கொண்டிருந்துது. கடசியிலே அந்தப் ......பய்யன் வளந்தபோது இந்த வண்ணான் தன் மகளைத் தானே அவனுக்குக் கட்டிக்கொடுத்தான். ஆனாலப் .... கம்மாளர் மேலே யிருக்கிற பகையினாலே, அப்படியல்ல கம்மாளப் பெண்ணைத் தானே அந்த ... பிள்ளையாண்டான் பிற்பாடு கலியாணமுகித்தானென்று, கம்மாளருக்கு வெட்கமுண்டாகச் சொல்லுவார்கள். அது செய்திகளெல்லாம் விஸ்த்தாரமாக பின்னாலே சொல்லப்பட்டிருக்குது.

இங்கே கவனிக்கப்பட வேண்டிய தென்னவென்றால், மேலாகச் சொல்லப்பட்ட நந்தனுடைய தாயாகிய . . . சோழராசாக் கலியாணம் பண்ணினா ரென்கிறது அபத்தம். ஒரு காலத்திலும் வெள்ளாளராகிலும் மற்ற ராசாக்க ளாகிலுந் தங்கள் சாதியான் பெண்ணைக் கலியாண மூய்க்கிறதே யல்லாமல் மறுசாதிப் பெண் களைக் கலியாண மூய்க்கிறதில்லை. ஆனால் மறுசாதியி லொரு பெண் அழுதாயிருந்தால், அவளை வைப்பாட்டியாக வைத்திருக்கிற வாடிக்கை யுண்டு. பின்னையுஞ் சோழராசாவுக்கு நந்தன் பிறந்தா னென்கிறது நம்பக் கூடாத காரியமா யிருக்குது. ஆனால் நந்தன் இயாதொரு இராசாவின் வீட்டுக்குப் . . . யெற்றிலே பிறந்த பிள்ளை யென்கிறதற்குச் சந்தேகமில்லை. ஆனால் நந்தனைப் பெற்றவன் சோழன்தானோ அல்லது இந்த ராட்சியத்தை யாண்ட வேறொரு ராசாக்களோ, அதைத் தீர்மானப் படுத்திச் சொல்லக் கூடாது.

ஆயிலும், அக்கியானிகளுக்குள்ளே **நந்திக்கலம்பக** மென்கிற ஒரு சுவடி யிருக்குது; அது நூறு பாட்டு. அது நந்தி யென்கிற ராசாவின் பேரிலே யுண்டு பண்ணப்பட்டது. அந்த நந்தி . . . அவனொரு ராசாவின் மகனென்றும், அவன் பேரிலே பகையாய் அவன் தகப்பனுடைய மூத்த தாரத்தின் மக னிந்த நந்திக்கலம்பகத் தைப் பாடினா னென்றும் பெரியோர்களும் வித்துவான்களுஞ் சொல்லுகிறார்கள். அதைச் சற்று விபரித்து இவிடத்திலே சொல்லு கிறேன். அதாவது,

## ௰ அதிகாரம்

### நந்திராசா வென்கிற . . . . . பேரிலே

ஒரு ராசா விருந்தார். அவருக்கொரு பெண்சாதி யிருந்தாள். அவளுக்கு ஏழு ஆண் பிள்ளைகள். இதை யல்லாமலந்த ராசா ஒரு . . . . ., வைத்திருந்தார். அவளுக்கொரு ஆண் பிள்ளை; அவன் பேர் **நந்தி**. இந்தப் . . . . . வாலிபமா யிருந்தபடியினாலே இராசா யிவள்மேலே யதிமோகமாயிருந்துது. இவள் மன்றாட்டுப் படிக்கு தனக்குப் பிறகு தன் பட்டத்தை அவன் மகனுக்குத்தானே கட்டி வைக்கிறோ மென்று வாற்தைப் பாடு கொடுத்தார்.

அப்போ அந்தப் . . . சொன்னது, "தாங்க ளுயிரோடே யிருக்கிறபோதுதானே தங்கள் கண்காண என்மகனுக்குப் பட்டங் கட்டுகிறதானாய்க் கட்டுங்கோ, ளில்லாதே போனால் தங்களுக்குப் பிற்பாடு மூத்தகுடியாள் பிள்ளைகள் என் பிள்ளைக்குப் பட்டங் கட்டவொட்டார்க" ளென்று சொன்னாள்.

அப்போ ராசா, "நல்லது, நானுயிரோடே யிருக்கிறபோது தானே யுன் பிள்ளைக்குப் பட்டங் கட்டுகிறேனெ"ன்று சொல்லி, தன் மந்திரியையுந், தன் னுறவின் முறையார், பெரிய மனுஷரையும் அழைப்பித்து, "என் வைப்பாட்டி . . . . . யிருந்தாலும் அவளுக்குப் பிறந்த பிள்ளை யென்னுடைய பிள்ளையல்லாமல் மற்றப்படியல்லவே; ஆனபடியினாலே அவனுக்கே பட்டங்கட்ட வேண்டியிருக்குது. அதற் கென்ன சொல்லுகிறீர்க" ளென்று கேட்டான்.

அப்போ அந்த ராசாவின் மந்திரியு, முறவின்முறையார், பெரிய. மனுஷருஞ் சொன்னது: "அந்தப் பிள்ளை யும்முடைய பிள்ளையா யிருந்தாலும் வைப்பாட்டி பிள்ளையாயிருக்கிறபடியினாலும், அதிலுந் தீழ்ப்பான . . . . . க்குப் பிறந்திருக்கிறபடியினாலும், அவள் வயிற்றிலே பிறந்த பிள்ளைக்குப் பட்டங் கட்டக் கூடா தெ' ன்று சொன்னார்கள்.

அது ராசாவின் பார்வைக்கு ஆகாததாய்க் கண்டபடியினாலே மனதில் விசாரப்பட்டுக்கொண்டு வேறே யுபாயம் பண்ண வேணு மென்று பேசாமலிருந்துவிட்டான். அப்புறஞ் சிறுது நாளைக்குப் பிறகு இரகசியத்தில் ஒரு நாய்க்கு பால்ச்சோற்றிலே இரத்தினத் தைப் பிசிரிப்போட்டு கொத்தளத்து மூலையிலே அந்த நாயைக் கொண்டு போய்க் குத்திப்போட்டு, அதைப் பத்திரமாய்க் காக்கப் பாறா வைத்தான்.

ஆறுமாதங் கழித்த பிற்பாடு நாய் கிடந்தவாக்கிலே கிடந்து மண் தின்று சதை வேறே யெலும்பு வேறாகக் கழிந்துபோன பிற்பாடு நாய் வயற்றிலே யிருந்து மிச்சமான ஒளிவுள்ள இரத்தினங் கள் சிதறிக் கிடக்கக்கண்டு ராசாவுக்கு வந்து சொன்னார்கள். அப்போ ராசாவு மந்திரியுஞ் சிறுதுறவின் முறையாருமாய்ப் போய் அதைப் பார்த்துவரப் போனார்கள்.

அப்போ ராசாவின்கூடப் போனவர்க ளெல்லாரும் அந்த மாணிக்கத்தைக் கண்ட வுடனே ஆவலாகக் குனிந் தெடுத்தார்கள். இராசா அவர்களைப் பார்த்து, "இந்த மாணிக்கத்தை யென்ன செய்யலா" மென்று கேட்டார். அதற்கவர்கள், "கிரீடத்திலே மார்ப் பதக்கத்திலே மற்றும் பல உசத்தியான ஆபரணங்களிலே வைத்து பதிக்கலா மெ'ன்று சொன்னார்கள். அதற்கு ராசா, "அது நாய் யெற்றிலே யிருந்துதே தேவலையா" வென்று கேட்டார். அதற்கவர்கள் "அது நாய் வயற்றிலே யிருந்தால்தா னென்ன, பேய் வயிற்றிலே யிருந்தால்தா னென்ன, மாணிக்க மென்கிறதற்குச் சந்தேக மில்லையே! அதற்குத் தீட்டில்லை" யென்றார்கள்.

அதற்கு ராசா அவர்களைப் பார்த்துப், "பயித்தியக்கார மனுஷரே! இந்த நாய் வயற்றிலே யிருந்த மாணிக்கத்துக்குத் தீட்டில்லை யென்றீர்களே, அப்போ . . . . . வயற்றிலே யெனக்குப் பிறந்த பிள்ளையல்லாமலிது வேறே யல்லவே! பின்னை யெப்படி அதற்குப் பட்டங் கட்டக் கூடாதென்று சொன்னீர்க ளே"ன்று கோபித்து, மந்திரியைக் கண்ணைப் பிடுங்கிப்போட்டு, வலுவிலே தனக்குப் . . . . வயற்றிலே பிறந்த நந்தியென்கிற பிள்ளைக்குப் பட்டங்கட்டி வைத்தான்

இந்த நந்தி, ராசாவான சிறுது காலத்துக்குப் பிறகு அவனுடைய தகப்பன் விழுந்துபோனார். அதின்பிறகு அவனுடைய மூத்தகுடி யாளையும் அவளுடைய ஏழு பிள்ளைகளையும் பகைத்து அவர்களுக்கு அன்னவஸ்திர முதலாய்க் கொடாமல் மிகவுஞ் சிறுமைப் படுத்தினான்.

அப்போ அந்த பிள்ளைகள் பட்டினியினாலே பொறுக்க முடியாத கஸ்த்தியை யனுபவித்து, கடசியிலே திருடிப் பிழைப்போ மென்று யோசனை பண்ணி, தங்கள் சகோதரனாகிற நந்திராசா வீட்டிலேதானே அம்மவாசி யிருட்டிலே கன்னக்கோலை வைத்து ஒருதனை யுள்ளே யனுப்பி, மற்ற ஆறுபேரும் வெளியே நின்றார்கள்.

அப்போ நந்திராசாவும் அவன் பெண்சாதியுந் தூங்கும் மஞ்சத் திலே யிருந்து பேசிக்கொண்டிருந்தார்கள். தூண்டா விளக்கு எரிந்தது. உள்ளே திருடப்போனவன் பாதி ராத்திரி யாச்சே,

யெல்லாருந் தூங்குவார்களென்று நினைத் துள்ளே வந்தான். இவன் வந்தவுடனே நந்திராசாக் கண்டுகொண்டு, சத்தப்படாமல் பிடித்து, "நீ யா ரெங்கே வந்தா யெ"ன்று கேட்டார். நான் ராசா வுடைய மூத்தகுடியாள் மகன். பட்டத்தை நீர் பிடுங்கிக்கொண்ட படியினாலேயு மெங்களுக்கு அன்னவஸ்திரம் நீர் கொடாதே போன படியினாலேயும் நாங்கள் பட்டினியே கிடந்து பசி பொறுக்க மாட்டாமல்த் திருட வந்தோமென்று சொன்னான். அப்போ நந்தி ராசா ஒரு ஆகாத யோசனை பண்ணினான். இவர்களை நாம் கொன்றுபோட நினைத்தோம். இவர்களே யிப்போ வலிய நம்மிடத்திலே வந்து அகப்பட்டுக் கொண்டார்கள். நாமிப்போ யிவர்களைத் தப்பவிட்டா வினிமே லிவர்கள் தலையெடுத்து நம்முட ராட்சியத்தையுங்கூடப் பிடுங்கிக்கொள்ளுவார்கள்.

ஆனதினாலே யிப்போதானே யிவர்களைச் சரிப்பிடித்துப் போடுகிறது உத்தமமென்று அவனை வெட்டிப் போட்டான். இதற்குள்ளே வெளியே நின்றவர்கள் முன்போனவ னின்னம் வரவில்லையே அதென்னவென்றுப் பார்த்துவா வென்று இரண்டாம் பேரை யனுப்பினான்.

அவன் வந்தவுடனே அவனையுஞ் சத்தப்படாமல்ப் பிடித்து வெட்டிப்போட்டான். இப்படி யாறுபேருக்குஞ் செய்தான். அப்போ யேழாவது கடைக்குட்டிப் பய்யன் சற்றே புத்திசாலி யானபடியினாலே யோசனை பண்ணி முன்னே போன தன் தமையன்மார் ஆறுபேரும் வராதேபோன முகாந்திர மென்னமோ தெரியவில்லையே அவர்க ளகப்பட்டுக் கொண்டார்களோ கொன்று போடப் பட்டார்களோ தெரியவில்லையே; இதை சோதித் தறியவேணு மென்று தெருவிலே கிடந்த ஒரு கரிப்பானையை யெடுத்து ஒரு தடியிலே கொடுத்து அந்தக் கன்னவாசலிலே நீட்டி நீட்டி யுள்ளே வாங்கினான்.

அப்போ உள்ளே யிருந்த நந்தி ராசா யோசனை பண்ணி நாமானால் லாறு பேரைக் கொன்றுபோட்டோம். இந்தக் கடைக் குட்டிப் பயலையுங் கொல்லாதேபோனால் பகைவைத்திருந்து நம்மைப் பழிவாங்குவான். இவன் சற்றே தந்திரக்காரப் பயலான படியினாலே யொருவேளையிலே உள்ளே வராமல் ஓடிப் போனாலும் போவா னென்று யோசனைபண்ணிக் கத்தியை

யுருவிக்கொண்டு தயாராய் வந்து கன்ன வாசலி னோரத்திலே நின்றான். அப்போது அந்தக் கடைக்குட்டிப் பயல் கரிப்பானையைத் தடியிலே கோர்த்து பரிச்சை பார்க்க கன்ன வாசலுக் குள்ளே நீட்டினான். இவ னதைக் கண்டவுடனே தலையாக்கு மென்று நினைத் துடனே கத்தியினாலே வெட்டினான்.

இதைப் பய்யன் கண்டு நம்முட சகோதரங்க ளாறுபேருங் கொன்றுபோடப்பட்டது நிலவரம். இனி நாமிங்கே தரிக்கக் கூடாதென்று கரிப் பானையையுந் தடியையும் போட்டுவிட்டு, வீட்டுக் கோடிவந்து நடந்த சமாசாரத்தைத் தன் தாயாருக்குச் சொல்லிப்போட்டு, தாயிடத்திலே யுத்தரவு வாங்கிக்கொண்டு தூர தேசத்துக் கோடிப்போனான்.

இவனொரு பெரிய பட்டணத்திலேபோய் தனக்குள்ளே யோசனை பண்ணிக்கொண்டது, நம்முட தகப்பனுக்குப் . . . . . வயற்றிலே பிறந்த நந்தி ராசாவானால் நமக்குச் சத்துருவா யிருக்கிறான். நம்முட சகோதரங்க ளாறு பேரையுங் கொன்று போட்டான். இராட்சியத்தையு மெடுத்துக்கொண்டான்; நா மவனைக் கொல்லவேணுமானாலும் நமக்குப் பெலனில்லை. ஆனபடியினாலே சாஸ்த்திரங்களைப் படித்து சுயம்பாடுகிற வரத்தைப் பெற்றுக்கொண்டு அரம்பாடி அவனைக் கொன்று போட்டிராட்சியத்தை யெடுத்துக்கொள்ள வேணுமென்று தனக்குள்ளே தீர்மானித்துக்கொண்டு ஒரு பெரிய படித்தெடுத்த கவிராயனிடத்திலே போய்ச் சேர்ந்து இது சமாசாரங்க ளெல்லாஞ் சொல்லி யவரிடத்திலே தரித்திருந்து சகல வித்தைகளையும் படிப்புகளையும் அவரிடத்திலிருந்து படித்துக்கொண்டு சுயம் பாடத்தக்க வல்லமை தனக்கு வந்தபோது, நந்திராசா மேலே **நந்திக்கலம்பக** மென்கிற ஒரு பாடலை யுண்டுபண்ணினான். அந்த பாடல் சகல வித்துவான் களாலே புகழப்படத்தக்க மகா மதுரமுங் கட்டு முகனையுமான பாடலா யிருக்கும் வித்துவாங்கிஷ ரொன்றுக்கொன்று சந்தோஷ மாய் பேசிக்கொண் டிருக்கிறபோது அந்த நந்திக்கலம்பகத்திலே சில பாட்டுக்களைப் பாடி **தாப்பிறியம்** பண்ணிக்கொண்டிருப்பார்கள். அந்தப் பாடல்கள் நந்தியின் பேரிலே புகழ்ந்து பாடின

---

தாப்பிறியம் – தாத்பர்யம் – கருத்து ஈடுபாடு

பாட்டுப்போலேயிருக்கும். ஆனா லந்தப் பாட்டிலே யுபாயமா யவன் சாகிறதற் கெற்றினமான வாற்தைக ளடங்கி யிருக்கும். இப்படிக்கொத்த ஈரடியான அற்தம் அந்த பாட்டுகளுக்குள் ளடங்கி யிருக்கிறபடியினாலே யின்னாள்க்களிலே முதலாம் வித்துவான்க ளதை முக்கியமாய்ப் புகழ்ந்து கொள்ளுவார்கள்.

இப்படியாக அவன் நந்திக் கலம்பக மென்கிற பாடலை யுண்டுபண்ணி, அதை யனேகம் பிரிதியாகப் பெயர்த்தெழுதித் தேச தேசங்கள் பட்டணங்கள் கிறாமங்க ளெங்கு மனுப்பினான். கடசியிலே அந்தப் பிரிதி நந்திராசா விருக்கிற பட்டணத்துக்கும் வந்துது. அந்தப் பட்டணத்தா ரெல்லாரும் அந்தப் பாட்டின் பேரிலே யிருக்கிற பிறியத்தினாலே அதுகளைப் பாறாமல்ப் படித் தார்கள். இது செய்தி ராசா வறிந்து, அந்தச் சுவடிகளி லனேகம் பிறிதிகளைக் கிழித்துப் போட்டு, இதற்கு முன்னாகப் பாறாமல்ப் படித்திருக்கிறவர்களதை மறந்துபோகவேணும்; அதை யாதாமொரு வன் பாடினால் அவனிடத்திலே ஒரு பாட்டுக்கு நூறு பொன் அவதாரம் வாங்கப்படுமென்று ராசாக் கட்டளை பிறந்துது.-இந்தக் கட்டளை பிறந்த சிறுது நாளளக்குப் பிறகு ஒரு தேவதாசி தன் மேல்வீட்டி லிருந்துகொண்டு நந்திக்கலம்பகத்திலே ஒரு பாட்டுப் படித்துக்கொண்டிருந்தாள். இதைத் தலையாரி கேட்டு இவளைப் பிடித்துக்கொண்டு நூறு பொன் அவதாரங் கேட்டான். அவ ளதற்கு அரைப்பாட்டுத்தானே பாடினேன்; முழுதும் பாடிப்போட்டு அப்படியே தருகிறேனென்று பாட்டை முடித்துப் போட்டு, பெட்டியைத் துறந்து நூறு பொன் எண்ணி அவன் கையில் கொடுத்தனுப்பிவித்தாள்.

தலையாரி யதை வாங்கிக் கொண்டு இராசாவின் சமுகத்திலே கொண்டு வந்து வைத்து நடந்த சமாசாரங்க ளெல்லாத்தையுஞ் சொன்னான்.

இராசா இதைக் கேட்டபோ தாச்சரியப்பட்டு ஒரு தேவரடி யாளுக்கு அந்தப் பாட்டின் பேரி லித்தனை ஆசையா யிருந்து நூறு பொன்னைக்கூடப் பாறாமல்க் கொடுத்துப் போட்டு, அந்தப் பாட்டை முழுதும் பாடினாளே ஆகையா லந்தப் பாட்டு எத்தனை நேத்தியா யிருக்குமோ அதை நா மினிமேல்ப் பாட வேண்டா மென்று கட்டுப் பண்ணினாலும் நிற்க மாட்டாது; ஆகையால்

நாமு மந்தப் பாட்டைக் கேட்கிறதே யுக்தமென்று தனக்குள்ளே தீர்மானம் பண்ணிக்கொண்டு பெரிய மனுஷரோடே ஆலோசனை பண்ணினான்.

அதற்கவர்கள் சொன்னது; "நீ ரந்தப் பாட்டைக் கேட்கவே போகாது அது அறமானபடியினாலே யும்முட காதிலே விழுந்த வுடனே யுமக்குச் சாவு வருமெ"ன்று சொன்னார்கள். அதற்கு நந்தி ராசா எனக்குச் சாவு வந்தாலும் வரட்டும்; எப்படியும் நானந்தப் பாட்டைக் கேட்கவேணும். அதைப் பாடினவனை யழைப்பிக்க வேணுமென்று சொல்லி தன் சகோதரனை வரச் சொல்லி யோலை யெழுதி யனுப்பிவித்தான்.

அதற்கு அவன், "நான் வரமாட்டேன்; நான் வந்தால், என் சகோதரங்களாறு பேரைக் கொன்றபடி யென்னையுங் கொன்று போடுவீ ரெ"ன்று சொல்லி யனுப்பிவித்தான். அதற்கு நந்தி ராசா, "அப்படிக் கொல்லுகிறதில்லை" யென்று ஆனை சத்தியம் பண்ணி பெரிய மனுஷர் பிணையிலே அவனைத் தன்னண்டைக் கழைப்பித்தான்

இவன் சுவடியை கக்கத்திலே வைத்துக் கொண்டு தயிரயத் துடனே இராசாவின் சமுகத்திலே வந்து நின்றான். இராசா அவனைக் கண்டவுடனே கன்னவாசல்க் கரிப்பானையோ வென்று கேட்டான். அதற்கிவன், "ஆம் அவன்தான் நானெ"ன்று சொன் னான். "வந்த முகாந்திர மென்ன?" வென்றான். "உம்மைக் கண்டு நான் பாடின நந்திக்கலம்பகத்தை அறங்கேற்ற வந்தே னென்"றான். அப்படியே அரங்கேற்றுவோம் அதற் கென்ன செய்யவேணு மென்று" கேட்டான். அதற்குக் கன்னவாசல்க் கரிப் பானனச் சொன்னது: "பெரிய பந்தல்ப் போடவேணுஞ் சகல உறவின்முறையாரையும் அழைப்பிக்க வேணும். நீர் சதிரிலே யுளுக்கார வேணும் - நானும்மோடே கூடஇருந்து பாடவேணும். இதுவெல்லாமல் இதற்குஞ் சுடுகாட்டுக்கும் பந்தல் போட்டுத் தோரணங் கட்டவேணும். அப்புறஞ் சுடுகாட்டுக்குப் பிறப்பட்டு வழியிலே நாற்பது பாட்டுக் கேட்கவேணும். அதின்பிறகு கட்டை மேலே படுத்துக்கொண்டு ஒன்பது பாட்டுக் கேட்டவுடனே யுமக்குச் சீவன் போய்விடும். கடசிப் பாட்டும் பாடுகிறபோது திடீரென்று அக்கினி கட்டை யிலே பற்றிக்கொண்டு நீர் வெந்துபோவீர். அப்புறம் நானிராட்சியத்தை யெடுத்து ஆண்டுகொள்ளுவே னெ"ன்றான்.

அதற்கு நந்திராசா சம்மதிப்பட்டுச் செற்றுப்போனாலுஞ் செற்றுப்போறோம். எப்படியும் அந்தப் பாட்டைக் கேட்கவேணு மென்றுசொல்லி, அவன் சொன்னதிலே யொன்றுங் குறையாமல் பந்தல்ப்போட்டு, சதிர்ச்சோடித்து சுடுகாடு போகமட்டும் பந்தல் போட்டு, தோரணங் கட்டி வாழை நாட்டி சுடுகாட்டிலே தயாராய்ச் சந்தனக் கட்டை யடிக்கிவைத்துப்போட்டு, பாட்டுக் கேட்க ஆரம்பம் பண்ணினான்.

இப்படிச் சதிரிலே யிருந்து அன்பதுபாட்டுக் கேட்ட பிறகு எழுந்திரிந்து இராசாவுஞ் சனங்களும் விசான பூமிக்கு நடந்தார்கள். விசான பூமி போகமட்டும் நெடுகிலும் பாட்டைச் சொல்லி அர்த்தம் பண்ணிக்கொண்டு வந்தான். கடசியிலே நந்திராசாவைக் கட்டையின் பேரிலே படுத்துக் கொள்ளச் சொன்னான். அந்தப் படியே படுத்துக்கொண்டு குறைப் பாட்டையுங் கேட்டான். இந்த விதமாகத் தொண்ணூற்றைந்து பாட்டுமட்டுங் கேட்டு வருகிற போது இராசாவுக்குப் பெலன் குறைந்து சற்று நேரத்துக்குள்ளே சீவன் போறதா யிருக்கிறபோது, இராசாவினுடைய சாந்த குணத் தையும் மெத்தனவையும் பொறுமையையுங் கண்டு மனஸ்தாபப்பட்டு கன்னவாசல்க் கரிப்பானை இராசாவைப் பார்த்துச் சொல்லுகிறான்: "இராசாவே யும்மைக் கொன்றுபோட்டு நா னெத்தனை நாளைக்கு இராட்சியத்தை யாளப்போறேன் நீர் விசாரப்பட வேண்டாம். நான் மறுபடியும் நூறு பாட்டு நல்ல பாட்டுப் பாடி யும்மைக் கொண்டுபோய்ச் சிம்மாசனத்திலே வைக்கிறே னெ"ன்றான்.

அதற்கு ராசா, "அப்படி வேண்டாம். கீர்த்தியே பிரதான மல்லாமல் மற்றப்படி யல்ல. என்றைக் கிருந்தாலு மொரு நாளைக்குச் சாகவேணும். மேலுஞ் சுடுகாட்டுக்கு வந்த பிணந் திரும்பிப் போகுதா; இப்போ நான் திரும்பி வந்தால் பார்க் கிறவர்கள் மதிக்க மாட்டார்கள். சாகிறதற்குப் பயந்து வந்தா னென்று சொல்லுவார்கள். அப்படியெல்லாம் வேண்டாம். நீ சொச்சப் பாட்டையும் பாடி முகித்துப் போடெ"ன்று சொன்னார்.

அப்புறம் அவன் கசை [99] பாட்டும் பாடினான். இராசாவுக் குயிர் போச்சுது. நூறாம் பாட்டு பாடுகிறபோது அக்கினிக் கட்டை யிலே பிடித்து வெந்து போனான். இவிடத்திலே அந்த நந்திக் கலம்பகத்தின் கடசிப் பாட்டை மாத்திரம் பாடி யர்த்தம் பண்ணு கிறேன். அதாவது,

விருத்தம்

வானுறு மதியை யடைந்துதுன் வதனம்
 வையகம் புகுந்துது வண்மை
கானுறு புலியை யடைந்துதுன் வீரம்
 கற்பகம் தகுந்துதுன் கரங்கள்
தேனுறு குழலாள் மாலிடம் புகுந்தான்
 செந்தழல் புகுந்துதுன் மேனி
யானுமென் வறுமை யெவ்விடம் புகுவேன்
 நகைமுக நந்தி காவலனே

அதாவது, நந்தியினுடைய பெண்சாதி தன் புருஷனைப் பார்த்துச் சொல்லுகிற பாவினையாக இந்தப் பாட்டுப் பாடப் பட்டிருக்குது. இந்தப் பாட்டினுடைய அற்தமேதென்றால், மகா சிரித்த முகமுள்ள நந்திராசாவே யும்முடைய முகஞ் சந்திரனிடத் திலேபோய்ச் சேர்ந்துபோச்சுது. உம்முடைய மகிமை யுலகத்துக் குள்ளே புகுந்துது. உம்முடைய வீரம் புலியைப் போய்ச் சேர்ந்துது. யுன்னுடைய கரங்கள் கற்பக விருட்சத்திலே போய்ச் சேர்ந்துது. யுன்னிடத்திலிருக்கிற இலட்சுமி மகா விஷ்ட்ணுவிடத்திலே போய்ச் சேர்ந்தாள். உன்னுட மேனி நெருப்பிலே புகுந்துது. ஆனபடி யினாலே, யுன் பெண்சாதியாகிய நானும் என்னுடைய தரித்திரமும் எந்த இடத்திலே அல்லது ஆரிடத்திலே போய்ச் சேருவேன் என்கிறதுதானே.

இப்படியாக நந்தி அக்கினியிலே வெந்துபோன பிறகு, கன்ன வாசல்க் கரிப்பாளை அரண்மனைக்கு வந்து பட்டத்திலே யிருக்க மனதில்லாமல், அந்த இடத்திலே வேறொருதனைப் பட்டங்கட்டி வைத்துப்போட்டு, தான் பரதேசம் போய்விட்டான்.

இதுதான் நந்திராசாவினுடைய கதை.

இவிடத்திலே கவனிக்க வேண்டிய தென்னவென்றால், மேலாகச் சொல்லப்பட்ட நந்தனும் நந்தியும் . . . . . வயிற்றிலே ராசாவுக்குப் பிறந்தவர்கள். சிலர் இந்த நந்தனும் நந்தியும் ஒன்றுதான்; இந்த நந்தனைத்தான் நந்தியென்று சொல்லிகிற தென்கிறார்கள். வேறே சிலர் நந்தன் வேறே : நந்தி வேறே;

யிவர்களிரண்டு பேராயிருக்கிறார்களென்று சொல்லுகிறார்கள். இந்த யிருவருடைய சரித்திரத்துக்கும் பெரிய வித்தியாசமிருக்கிறபடியினாலே, அதை மெய் யென்றும் நம்ப வேண்டி யிருக்குது.

பின்னையும் நந்தியென்று இன்ன மிரண்டு பிறதான மனுஷருக்குப் பேரிருக்குது. அவர்க ளாரென்றால்,

க. சிரங்கப்பட்டணம் அல்லது மைசூர் இராசாவுக்கு நந்திராசாவென்றே பேர்

உ. அகஸ்த்தியர் சரித்திரத்திலே சொல்லப்படுகிற ௰அ [18] சித்தாதிகளி லொருதருக்கு நந்தீச ரென்று பேர் ஆயிலு மிந்த இரண்டு நந்திகளும், மேலாகச் சொல்லப்பட்ட நந்தியல்ல.

இந்தச் சரித்திரத்தைத் தொட்டு இம்மாத்திர மிவிடத்திலே சொன்னது போதும்.

அப்புறம், வண்ணான் வீட்டிலே வளர்ந்த . . . பிள்ளையாண்டானுடைய குறைச் சரித்திரத்தையுஞ் சொல்லிக்காட்டுவோம். அதாவது,

கம்மாளர் போட்ட கல்ப்பந்தலினாலே நந்தனும் அவ னுறவின் முறையாரும் அவனுடைய வங்கிஷத்தாராகிய சகலப் . . . . ச்சாதிகளும் அழிந்துபோன பிறகு கல்லிடுக்கிலே அகப்பட்டுக் கிடந்த பூரண கெற்பமான ஒரு . . . . வண்ணான் கொண்டுவந்து தன் வீட்டோடே சேர்த்துப் பிராமரித்தான். அவளுக்கு பேறுகாலம் வந்தபோது, ஒரு ஆண் பிள்ளையைப் பெற்றாள். மறுபடி யந்த வண்ணானுடைய பெண்சாதி ஒரு பெண் பிள்ளையைப் பெற்றாள். இந்த இரண்டு பிள்ளைகளும் வளர்ந்து பிராயம் வந்தபோது அந்தப் . . . ப்பய்யன், இந்த வண்ணாரப் பெண்ணைத்தானே கலியாணம் பண்ணிக்கொண்டான்.

## ௰க அதிகாரம்

### வலங்கை இடங்கைச் சாதியாரைத்தொட்டுக் கேழ்க்கிற கேழ்வி, புறத்தி யுத்தாரங்களின் பேரிலே.

இவிடத்திலே கனம்பொருந்திய கலநெல் காலன் மைக்கிஞ்சித் துரையவர்கள் கேட்கிற ஒரு பிறதான கேழ்வி: "வேதநாயகம், 'நீரிங்கே சொன்னது புத்திக் கொத்திருக்கவில்லை. ஒரு பந்தலுக்

குள்ளே சகலமான . . . ச்சாதியும் அடங்கக் கூடுமோ? சதூ [4000], ருசதூ [5000] பேரைக் கொல்லவேணுமானாலும் எத்தனை பெரிய பந்தல்ப் போடவேணும்? அத்தனை பெரிய பந்தலுடைய பாரமும் விசையும் ஒரே தூணிலே வந்திருக்கக் கூடுமோ? நல்லது அப்படியே நடந்து பந்தலுக்குள் அகப்பட்ட . . . . ரெல்லாஞ் செற்றுப் போனார்களென்றே னைப்போம் அப்புறம் உலக மெங்கும் ஒரு . . . . . கிடையாமல்ப் போகக் கூடுமோ? உலகத்திலே யித்தனை பெரிய ராட்சியங்க ளிருக்குதே, வடக்கே காசி துவக்கித் தெற்கே மலையாள மட்டுங் கிழக்கே கண்டி தேச முதல் மேற்கே மைசூர் சீர்மை மற்ற ராட்சியங்க ளெங்கு மொரு . . . . அற்றுப்போய் இந்த வண்ணான் வீட்டிலே வளர்ந்த ஒரே . . . . . தானே யிப்போ யுலகத்திலே யிருக்கிற . . . . . ளெல்லா முண்டாயிருக் கிறார்க ளென்றும் ஆர் நம்பக்கூடும்? இதுகளை யெதினாலே ரூபகாரப் படுத்துவீர்!"

வேதநாயகம் : "சங்கிக்கப் படத்தக்க அய்யாவே, அக்கியானி களுடைய சரித்திரங்க ளெல்லாஞ் சின்னத்தைப் பெரிசும், பெரிசைச் சின்னதுமாகக் காட்டுகிறதே அவர்களுடைய தண்டக்கம். பகுமை யுள்ள ஒரே சரித்திரமாகிலும் அவர்க ளிடத்திலே கண்டுபிடிக்கக் கூட்டாது. ஆயிலு மிது காரியங்களைச் சகல சாதியாரும் விசேஷமாக இவர்க ளெதிரியாகிய கம்மாளரும் நம்புகிறபடியினாலேயும், இதுகளைத் தொட்டு இத்தனை சண்டைகளும் பொல்லாப்புகளும் வலங்கைக்கும் இடங்கைக்கும் உண்டாயிருக்கிறத்தினாலேயும், மேலாகச் சொல்லப்பட்ட காரியங்கள் எவ்வளவாகிலும் நடந்திருக்க வேணுமென்று நினைக்க வேண்டியிருக்குது.

என்றாலு, மிங்கே சொல்லியிருக்கிறபடி நம்புகிறது எனக்கும் வருத்தந்தான். ஆயிலு மிது காரியங்களைத்தொட்டு நா னினைக்கிற தென்ன வென்கிறத்தை மாத்திர மிவிடத்திலே காட்டு கிறேன். அதாவது, சோழ ராசாங்கமும் பாண்டியனுடைய ராசாங்கமு மற்றுப் போன காலத்திலே, இந்த நந்த னென்கிற . . . . . வட ராட்சியத்தி லெழும்பினான் இவன் தன் பெண்சாதியை முக்கியப்படுத்த வேணு மென்கிற நோக்கத்தினாலே, தோல்க்காசை யுண்டு பண்ணி, யெங்கும் வழங்கக் கட்டளை யிட்டான்.

அதை நந்தன் தோல்க் காசென்று இன்னாள் வரைக்கு முலகத்திலே சொல்லப்படுகிறது. அவன் கடசியிலே மிஞ்சின பெருமையைக் காட்டி, அனேகம் ... ...... தனக்குப் பாளையமாகச் சேர்த்துக் கொண்டு தனக் கடாத சங்கையைத் தக்கிஷித்துக்கொள்ள நினைத்து, வெள்ளாளரிடத்திலே பெண் கேட்டதினாலே யிந்தத் தெண்டினை யவனுக்கு வந்தது. ஏற்கனவே வெள்ளாளருக்கும் பகை யிருந்ததினாலே இவர்கள் மறவரை யெடுத்துவிட்டு அவர்களை யழித்ததாகக் காணுது; ஏனென்றால், நந்தனுடைய ராட்சியபார மறவருடைய காலத்திலேதானே யிருந்துது. ஆயிலுந் துவக்கத்திலே வெள்ளாளர் உபாயமாக கம்மாளரைக்கொண்டு, நந்தனையும் அவனோடே சேர்ந்த சில பெரிய மனுஷரையுங் கல்பந்தல் போட்டுக் கொன்றுபோட்டதாகவேணும். மற்றத் துண்டரிக்கம் பண்ணின ... ..... யெல்லாம் பாண்டியன் வங்கிஷத்து வெள்ளாளரு மறவருங் கூடிச் சரிப்பிடித்துப் போட்டார்கள். மற்ற ஏழைப் ... .. .. .. எப்போதும்போலே குடியானவர்க ளிடத்திலே யிருந்து உழுது பயிரிடவும், ஒருபக்கங் களுக்கோலை கொண்டுபோகவுஞ் செற்றுப் போன மாடுக ளெடுக்கவும் பிணஞ் சுடவுந் தப்படித்துக் கொம்பூதவு முதலியா யிருந்தார்கள்.

இந்த ஏழை. ......... தங்களுக்கு முகாலமையான நந்தனும் அவனைச் சேர்ந்த பெரிய மனுஷரான ......... கொன்று போடப் பட்டதை வெள்ளாளர் பேரிலு மறவர் பெரிலுஞ் சொல்லப் பயந்தார்கள். ஏனென்றால், மறவர் அன்றைக்கு ராட்சியபாரம் பண்ணினத்தினாலே தாங்க ளேதாகிலும் எதிர்த்துப் பேசினால் மீதியா யிருக்கிற தங்களுக்கும் பொல்லாப்பு வருமென்று பயந்தார்கள். வெள்ளாளர் பேரிலே சொன்னால் அவர்களிடத்திலிருந்து தாங்கள் பிழைக்கிற பிழைப்புக் கெட்டுப்போமென்று பயந்தார்கள்.

இது நிமித்தியம் ஏழை கம்மாளச் சாதியான் பேரிலே யந்தப் பழியைப் போட்டு, எய்தாரை நோகாமல் அம்பை நொந்த பழமொழியைப் போலே தங்களைக் கொல்ல ஏவிவிட்ட வெள்ளாளரை விட்டுப்போட்டு எல்லாச் சாதியாருக்கு முதலியா யிருந்து வேலை செய்து பிழைக்கிற ஏழைக் கம்மாளரோடே எதிரி பாராட்டி, அவர்களை மேல்க்கொள்ளுகிறதற் குதவியான எற்றின மெல்லாம் பண்ணினார்கள்.

எங்கெந்தச் சாதி யுயர்ந்த கையா யிருக்குதோ, எவர்கள் காரியக்காறரோ, அவர்க ளெல்லாம் வலங்கைத் தங்களோடே சேர்ந்தவர்க ளென்றார்கள். வெள்ளாளர், முதலிகள் மற்ற மேல்சாதியாரைத் தங்களுக் கடுத்தவர்க ளென்று சொல்லிக் கொண்டாப் போலே கவரைகள் அல்லது வடுகரையுந் தங்களோடே சேர்த்திக்கை யென்றார்கள். ஏனென்றால், வடுகருக்கு அப்போ ராசாங்க மிருந்தத்தினாலே அவர்களைத் தங்களுக்குத் தலைமை யென்று சொல்லிக்கொண்டார்கள். ..... தங்களோ டொத்த சாதியா யிருந்தாலும் அவர்கள் தங்களோடே சேர்த்தியல்ல, இடங்கை யென்று சொல்லுகிறார்கள். ஏனென்றால் குடியான வர்க ளிடத்திலே கம்மாளனும், ..... மிருந்து எப்போதும் வேலை செய்து பிழைக்க வேண்டியிருக்குது. இந்தத் தொழில் பேதகத்தினாலே விசேஷமாக யிந்தப் பகை யுண்டாயிருக்குது ஒரு குடியானவனுக்குக் கம்மாளன் கலப்பை போட்டுக் கொடுக்கிறான். ...... முழுது பயிரிடுகிறான். ......, களமளக்கவுஞ் செற்ற மாடெடுக்கவும் இழவு சொல்லிப் போகவும் பிணஞ் சுடுகிறதற்கு முதவியா யிருக்கிறான்.

இப்படியாக இந்த மூன்று பேருங் குடியானவர்களுக்கு விசேஷித்த வுதவியா யிருக்கிறார்கள். ஒரு யிடத்திலேதானே யெப்போது மிந்த மூன்று பேருஞ் சாவகாசம்பண்ண வேண்டி யிருக்கிறத்தினாலே சடுத்தம் போட்டுக்கொண்டு நீ பெரியவன் நான் பெரியவ னென்று போரிடுகிறார்கள்.

பின்னையு மித் தேசத்திலே கம்மாளருக்கும் ......... முண்டா யிருக்கிற சண்டையைப் போலே, மதுரை திருநெல்வேலி யிராமநாதபுரத்துச் சீர்மையிலே ..... ....... அடிக்கடி பெலத்த சண்டைகளுண்டாகி, யொன்றுக்கொன்று கொன்றுபோடுகிறார்கள். இந்தச் சண்டைகள் இயாதொரு விக்கிரகங்களுக்குத் திருநா ளுண்டாகிறபோ துண்டாகுது. அப்போ, அந்த விக்கிரகங் களுக்கு முன்னாலே வெங்கலக் கலசம் அல்லது செம்பை வைத்த வெள்ளைக் கொடையை ..... தங்களுடைய திரளாக கூட்டத்தோடும் ஆடம்பரத்தோடும் பிடித்துக்கொண்டு போறது. ........ அது சம்மதி யில்லாதபடியினாலே அவர்கள் தாங்கள் பிடிப்போமென்று வருகிறது. எப்போ ......... வந்து அந்தக் குடையைப்

பிடிக்கத் துவக்கினார்களோ, அப்போ யிந்தச் சண்டை யுண்டாகுது. அப்போ . . . றெமும்பி ......... பேரிலே விழுந்து, அவர்களைக் கொன்றுபோடுகிறார்கள்.

அஞ்சாறு வருஷத்துக்கு முன்னே முதலாய் சிவகங்கைச் சீர்மையிச் சேர்ந்த **கண்டதேவி** யென்கிற கிராமத்தில் திருநாள் நடந்தபோது, ...... வெள்ளக் குடை பிடித்த நிமித்தியம், . . . றெமும்பி பதினாறு பேருக்கதிகங் கொன்று போட்டார்கள்.

இப்படிப் ...... பாண்டியன் தேசத்தில் தோர்வையுஞ், சோழ தேசத்திலே வெற்றியு முண்டாகிறதெதினாலே யென்றால், பாண்டியன் தேசத்திலே . . . . சாதியார் மெத்த ஏராளமா யிருக்கிறார்கள். ... ... மெத்தக் கொஞ்சப்பேரா யாத்திர மிருக்கிறார்கள். சோழ தேசத்திலேயானால் ......... மெத்த மிச்சமா யிருக்கிறார்கள். பாண்டியன் தேசத்திலே இப்படிக்கொத்த ஒரு சண்டை யுண்டாகிறபோது, ஆயிரம் . . . . கூடினா லவர்களுக் கெதிரியாக நாலாயிரம் . . . . கூடுவார்கள்.

**கண்டதேவி** யென்கிற கிராமத்திலே இந்த வுயிர்ச்சேதமான சண்டைக்குப் பிறகு கோர்ட்டிலே யிரு தரத்தாரையுங் குடை பிடிக்கக் கூடாதென்று தாக்கிதை பண்ணினார்கள். . . . . அதற்குச் சம்மதித்துக் கையொப்பம் போட்டுக் கொடுத்தாலும் பின்னையும் பழையபடியே குடை பிடிக்கிறார்கள்.

## ௰௨. அதிகாரம்

### பள்ளருக்கும் . . . . . மிருக்கிற வித்தியாசங்களின் பேரிலே

இந்த . . . ருக்கும் ...... மிருக்கிற வித்தியாசங்க ளென்ன வென்றால், . . . . மாடு தின்கிறதில்லை; செற்ற மாடெடுக்கிற தில்லை; கூடினமட்டுத் துசுதுப்பரவா யிருப்பார்கள். பள்ளருடைய வீட்டுக்குள்ளே ...... போகக் கூடாது ...... வீட்டுக்குள்ளே . . . . போகலாம். . . . . . தங்க ளாண்டையாகிய குடியானவர் களுடைய வயலை யுழுகிறார்கள். அவர்கள் பெண்சாதிகள் நாற்று நடுகிறார்கள். நெல் விளைந்த பிறகு புருஷரும் பெண்சாதிகளுங் கதிரறுத்துக் கட்டிக் களத்திலே கொண்டுவந்து போட்டு, போர் கட்டிக் காத்திருந்து அரண்மனை கங்காணங் கூட்டி வந்து

போரடித்த பிறகு, தன் பெண்சாதிகளோடே நெல்லைத் தூற்றிப் பிடைத்து நெல் அம்பார முண்டாக்கி அரண்மனையார் வாரம் பிரித்துக் கொண்ட பிறகு . . . . தன் நாயன் வீட்டு நெல்லைக் கொண்டு வந்து சேர்த்து, சம்பளத்தையுஞ் சுகந்திரத்தையும் வாங்கிக் கொண்டு போறார்கள்.

இது முதலான பயிர்வேகிமைக்கடுத்த வேலையைப் பரிச் சேதம் ...... ரந்த ராட்சியத்திலே செய்யக்கூடாது. வயலிலே . . . . நாற்று நடுகிறபோது, ...... வெயலிலே யிறங்கவே கூடாது. அப்படி யொரு ...... வெயலிலே யிறங்கி நாற்று நடத் துவக்கின வுடனே யெல்லாப் . . . . களுந் தங்கள் நாற்று முடியைப் போட்டுவிட்டு, கரையிலே யேறிவிடுவார்கள். கதிரறுக் கிறபோது முதலாய்ப் . . . . வெயலிலே யிறங்கிக் கதிர் பொறக்கப் போகாது. கட்டெல்லாங் களத்துக்குப் போனபிறகு . . . . வயலைவிட்டுக் கரையிலே யேறின பிறகு . . . . கதிர் பொறக்கலா, மற்றப்படியல்ல.

பின்னையும் நெல்லடிக்கிறதற்கு முன்னே . . . . . களத்தைக் கூட்டலாம். நெல்லு வேறே வைக்கல் வேறேயான பிறகு பரிச் சேதம் பள்ளிகள் களத்தைக் கூட்டக் கூடாது அப்புறம் . . . தான் களங் கூட்டுகிறதுங் களத்திலே சிந்திப்போன நெல்லுகளைக் கூட்டிக் கொள்ளுகிற சுகந்திரத்தையுங் கொண்டிருக்கிறார்கள். நெல்லளக்கிறபோது . . . . . . மரக்கால் பிடித்து அளக்கக்கூடாது. அந்த நெல் அம்பாரங்கள் பேரிலே அரண்மனையார் குறி போடுகிற போது, . . . சாணி கரைத்துக் கொடுக்கவேணுமே யல்லாமல் . . . . செய்யப் போகாது.

சோழ தேசத்திலேயானால், . . . . ரத்தனை மிச்சமில்லை. தஞ்சாவூருககு மேல் பாரிசத்திலே மாத்திரம் . . . . மிச்சமா யிருக்கிறார்கள் ஆனால் கிழக்கே கடலோர மட்டும் . . . . மிச்சமா யிருக்கிறபடியினாலே . . . . ப்போலேதானே தங்க ளாண்டையினுடைய வயலையு முழுது நாத்து நட்டுப் பயிர் வேகிமை செய்து, கதிரறுத்துக் களத்திலே கொண்டுபோய்ப் போட்டுப் போரடிக்கிறமட்டுந் தங்கள் பெண்சாதிகளோடேகூடப் பாடுபடுகிறார்கள். வேறே . . . . வெட்டியார் தொல்லைச் செய்கிறார்கள்,

இப்படியாகப் ..... காலாகாலத்துக்குத் தக்கதாகச் சோழ தேசத்திலே பயிர் வேகிமைக்கடுத்த வேலைகளைச் செய்தாலும், இவர்கள் பூறுவ தண்டக்கத்தின்படிப் பயிர் வேகிமைத் தொழிலுக்குத் குறிக்கப்பட்டவர்களல்ல. பள்ளர் மாத்திரமே அதற்குக் குறிக்கப் பட்டவர்களா யிருக்கிறார்கள். இதற்கு அத்தாட்சியாக ஏறக்குறைய அஞ்ஞூறு வருஷத்துக்கு முன்னிருந்த என்னையினாப் புலவன் என்கிற வித்துவான் முக்கூடல்பள்ளு என்கிற ஒரு பாட்டுச் சுவடியை யுண்டாக்கி யிருக்கிறான். அதைத் தெட்சண ராட்சியத் திலே சகல பள்ளிக்கூடங்களிலேயும் படிக்கிறார்கள். அதிலே பள்ளரும் பள்ளிகளும் வயலுகிறதும், அவர்கள் நாற்று நடுகிறதுந் தண்ணீர் பாச்சுகிறதுங் கதிரறுக்கிறதும், மற்றும் பயிர் வேகிமைக் கடுத்த காரியங்களை செய்கிறத்தையும் பள்ளிகளொன்றுக் கொன்று சண்டைபோட்டுக் கொள்ளுகிறத்தையும் வேடிக்கையாகப் பாடிக் காட்டியிருக்குது.

இன்ன யிப்படிச் சில பள்ளுச் சுவடிகளு முண்டு. அதுக ளெல்லாத்திலேயும் பள்ளருக்குப் பயிர் வேகிமைக்கடுத்த காரியத் திலே சுகந்திரமே யல்லாமல் ..... குண்டாயிருக்கிறத்துக் கொரு விடத்திலும் ரூபகார மில்லை!

....ளெப்போ இயாதொருத்தனுடைய வயலிலே நாற்று நடத்துவக்கிறார்களோ, அப்போ பள்ளிகளுக்கும் அவர்களுக்கும் பெரிய சண்டையும் பொல்லாப்பு முண்டாகுது. ஏனென்றால் பள்ளி கள் தங்களோடேகூடப் ...... மாத்திரமல்லச் சாணாத்திகளை முதலாய் நாற்று நட இடங்கொடுக்கிறதில்லை. ஆனால் வெள் ளாளர், வடுகர், மறவர், கள்ளர், மற்றச் சாதியார் தங்கள் தரித்திரத்தினாலே கூலிக்கு நாற்று நட வந்தால், தங்களோடே கூட நின்று நாற்று நடச் சம்மதிக்கிறார்கள். ஆனால், ...... சாணாத்திகளுக்கும் பரிசேதஞ் சம்மதிக்கிறதில்லை.

பின்னையும் பனையேறுகிறதற்கடுத்த தொழிலெல்லாஞ் சாணாருக் கடுத்தது. செவகங்கைச் சீர்மையிலே சாணார் கொஞ்சமா யிருக்கிறத்தினாலே பள்ளர் பனையேறுகிறார்கள். இவர்க ளேறுகிற பதினியை, ..... மறவரும் வாங்கிக் குடிக் கிறார்கள்; வெள்ளாளர் வாங்கிக் குடிக்கிறதில்லை. பின்னையுஞ் செவகங்கைச் சீர்மையிலே சாணாரோடேகூட பள்ளர் மாத்திரம் பனை யேறலாமே யொழிய, ...... பரிச்சேத மேறக் கூடாது.

ஆனால், திருநெல்வேலிச் சீர்மையிலே யெங்குஞ் சாணார் மிச்சமாய்ப் பெருந்திருக்கிறத்தினாலே சாணாரைத் தவிர, ஒரு சாதியும் பனையேறக் கூடாது. பள்ளர் முதலாய்ப் பனையேறக் கூடாது. சாணாருக்குள்ளே வெகுகட்டுகள் முறைமைக ளுண்டு. அவர்களுக்குள்ளே இரண்டு அந்தஸ்துண்டு.

க. நல்ல சாணார்

உ. கள்ளச் சாணார்

பின்னையும், எல்லாச் சாணாரும் பனை யேறுகிறதில்லை. அனேகர் பெரிய யாபாரிகளா யிருக்கிறார்கள். இந்தச் சாணா ருடைய சாதிக்குத் தலைமையாகிய சிலருக்குப் பல்லக்கு விருது முண்டு. ஆரிச்சநாடான், வைகுந்த நாடான், குட்டத்து நாடான் இன்னஞ் சிலரும் பல்லக் கேறுகிறவர்கள். இவர்க ளெல்லாந் திருநெல்வேலிச் சீர்மையிலே யிருக்கிறார்கள், இந்தச் சாணாரச் சாதியினுடைய வளப்பத்தை பின்னாலே காட்டவேண்டி யிருக்குது. அன்படியினாலே பள்ளருக்கும் ...... மிருக்கிற வித்தியாசங் களிலே யின்னஞ் சிறுதுகளைச் சொல்லிக்காட்டுகிறேன்.

௬. அதிகாரம்

பள்ளரும் ..... தங்க ளாண்டை யாகிய வெள்ளாளச் சாதியாருக்கு முன்னும் பின்னு மெப்படி நடந்துகொள்ளுகிறார்க ளென்கிறத்தின் பேரிலே

இந்தப் ..... பள்ளரென் றழையாமல்க் குடும்ப னென் றழைக்க வேணும். அந்தப்படியே ..... ரென் றழைக் காமல்ச் சாம்பா னென் றழைக்க வேணும். இந்த விதத்திலே பள்ளரும் ..... மென்றோ டொன்று சரியொத் திருந்தாலும், .... ரவர்களை அசட்டைபண்ணி அவர்க ளெங்களோடே சேர்த்தி யல்ல. அவர்களுஞ் சக்கிலியருங் கம்மாளரோடே சேர்ந்தவர்க ளென்று சொல்லுகிறார்கள். முற்காலத்திலே யிருந்த வெள்ளாளர் ..... பள்ளருக்கும் அவர்கள் அந்திஸ்த்துக்குஞ் சாதிமேரைக்குந் தகுமான மட்டுஞ் சில விருதுகளை யவர்களுடைய நன்மை தின்மை நாள்க்களில்ப் பிடித்துக்கொள்ள வுத்தரவு கொடுத்திருந்தார்கள்,

... ..., வெள்ளாளரை தங்கள் ஆண்டை அல்லது நாய னென் றழைக்கிறது; அதாவது, தங்களுடைய ஆண்டவ னிசமா னென்கிற அற்தம். அவர்கள் தங்களிசமானை அல்லது இயாதொரு வெள் ளாளனை அல்லது வெள்ளாளருடைய பிள்ளைகள் சிறு வயதா யிருந்தாலுஞ் சரி, பெரிசா யிருந்தாலுஞ் சரி அதுகளை முதலாய்ச் சுவாமி யென் றழைக்கவேணும். வாற்தைக்கு வாற்தை எத்தனை விசை பேசினாலும் ஆண்டே, சுவாமி, நாயனே, யென் றழைக் கிறதே யல்லாமல், அய்யா வென்றழைக்கவே கூடாது. வெள்ளாளர் . . . . சற்றுப் பெரிய மனுஷரா யிருக்கிறவர்களைச் சாம்பா வென்றழைக்கிறது. தங்களுடைய ஆண்டைக ளிந்த விதமாகத் தங்களைக் கூப்பிடுகிறதற்காக அவர்கள் மிகுந்த சந்தோஷத்தைக் கொண்டிருக்கிறது.

......, வெள்ளாளருக்கெல்லாம் நெடுகிலுந் தொண்டு செய்து, தங்களைப் பிள்ளை யென்று சொன்னார்கள். ஆனபடியினாலே, த்கப்பனுக்குச் செல்லுகிற விருதுகள் தங்களுக்குஞ் செல்லு மென்றார்கள்.

இதினாலே, . . . . . சந்தோஷ முண்டாக, வெள்ளாளர் சில விருதுகளைக் கொடுத்தார்கள். ஆகிலும் அவர்கள் பல்லக்கிலே யேறக் கூடாது; அவர்களுக்குக் கலியாண முண்டாகிற போது, தங்களுக்குக் கொடுத்த சில விருதுகளைப் பிடித்துக்கொண்டு தங்கள் . . . . அல்லது . . . . தெருவிலே மாத்திரஞ் சுற்றி வரலாமே யொழிய, வெள்ளாளருடைய தெருவிலே வரக்கூடாது.

இந்தப் பிறகாரமாக வடுக ராசாங்கத்தின் காலமட்டும் நடந்து வந்துது. நவாபு சாயபு காலத்திலே . . . . தங்க ளாண்டைகளை விட்டுக் குதிரை பிடிக்கிற சேவுகத்திலே அமந்தார் கள். அப்போது துவக்கி தங்க ளாண்டைகளோட யெதிர்த்துப் பேசவும் பெருமைப் பண்ணவுந் துவக்கினார்கள். விசேஷமாக இங்கிலீசு ராட்சியபாரத்தின் காலத்திலே அந்தச் சாதியி லரை வாசிப்பேர் மட்டுஞ் சிப்பாயி சேவுகத்தி லெழுதவுங், குதிரை பிடிக்கிற சேவுகத்தி லெழுதவுந், துரைமார்க ளிடத்திலே குசினிக் காரராகவு, மேட்டிகளாகவும், பொட்டிலாராகவுந் தலைப்பட்டு தங்க ளிஸ்த்திரிகளையுந் தண்ணீர் வேலையிலேயுங், குசினி வேலை

யிலேயும், ஆயாள் வேலையிலேயு, மற்ற வேலைகளிலேயும் அமத்தின பிறகு, தங்களுக்கு வரத்து மிச்சமா யுண்டான போது, தங்களுடைய ஆண்டைகள் அல்லது வெள்ளாள ரிவர்கள் கண்ணுக்குக் கொஞ்ச எண்ணிக்கையாய்ப் போனார்கள்.

முக்காலத்தி லிவர்கள் தலைப்பா வைக்கக் கூடாது. அஞ்சு முளம் ஆறு முள வேட்டிக் சுதீகங் கட்டக் கூடாது. சொகாய், அங்கிப் போடக் கூடாது. கரண்டைக்கால் மட்டும் வேட்டிகளைத் தொங்கவிட்டு கட்டக்கூடாது. மேலே வல்லவட்டுப் போடக் கூடாது. அவர்களில் நாட்டாமைக்காறரா யிருக்கிறவர்கள் மாத்திரம் ஒரு லேஞ்சி அல்லது உருமால்க் கட்டலாம். அவர்களுடைய பெண்டுகள் பரிச்சேத முக்காடுப் போடக்கூடாது. இடையிலே மாத்திரஞ் சீலை கட்டவேணுமே யல்லாமல், மாரு மேலே முதலாய் சீலை போடக் கூடாது.

இந்தக் கட்டளையைப் . . . . . மாத்திர மல்லப், பள்ளருக்கும், மறவருக்கும், கள்ளருக்கும், உடையாருக்குஞ், சாணாருக்கும், மற்றச் சாதியோருக்குங் கொடுக்கப்பட்டிருந்தது. மறவ ராசாங்கத் தின் காலத்திலே சில மறவரும், மறத்திகளுஞ் சங்கையா யுடுத்தத் தலைப்பட்டார்கள். வெள்ளாளர் மாத்திரந் தாங்களுந் தங்கள் பெண்சாதிகளு மரியாதியா யுடுத்தவேணும். மற்றத் தங்களுக்குக் . . . . சாதிகள் அப்படிச் செய்யத் தகாது. அப்படியவர்கள் செய்கிறத்தினாலே தங்களுக்கும் அவர்களுக்கும் வித்தியாசங் காண மாட்டாது. தங்களுடைய சங்கைக்குத் தாட்சி யென்று நினைத் தார்களே யல்லாமல் மனுஷ சாதி யெல்லா மொன்றுதான்.

தங்களுக் கிருக்கிற மான மரியாதையைப் போலேதான் மற்றச் சாதியாருக்கு முண்டென்று நினையாதே போனார்கள். இக்காலத்திலே முதலாய்ப் பட்டணங் கோட்டைகள் தவிர நாட்டுப் புரத்திலே யிருக்கிற சகல . . . பெண் பிள்ளைகளும், பள்ளிகளும் மறத்திகளுங், கள்ளச்சிகளும், உடையாச்சிகளும், இடைச்சிகளும், பரத்திகள், குறத்திகள், வலைச்சிகள், சக்கிலிச்சிகள், மற்ற சாதியோ ரனைவரும், முக்காடும் போடாமல் மாரு மேலேயுஞ் சீலை போடாமல் முழுதுந் திறந்த மேரையாக யிருந்து கூச்ச நாச்ச மில்லாமல் வெளியே பிறப்பட்டு வேலை செய்வார்கள்.

இது அவர்களுக்கு வெகு காலத்துத் தண்டக்கமும் பழக்கமுமாய்ப் போனதினால அது சுவாப அற்பியாச மென்று மிருகங்களைப் போலே திரிகிறார்கள்.

ஆனா விக்காலத்திலே ..... வெள்ளாளருடைய அந்திஸ்த்தை போலே தாங்களுந் தங்க ளிஸ்த்திரிகளு முடுத்திக் கொள்ளுகிறார்கள். வெள்ளாளருக் கிருக்கிற விருதெல்லா மெங்களுக் குண்டென்று சொல்லிச் சகல விருதுகளையுந் துணிந்து பிடிக்கிறது மல்லாமல் தமிழருடைய தெருவிலேதானே பட்டணப் பிறவேசம் வரத் துணிந்தார்கள். தங்க ளாண்டைகளைச் சுவாமி யென்றழைக்கிற வர்கள், இப்போ அய்யா வென்றழைக்கிறதுகூட வருத்தமா யிருக்குது. ஆயிலும் பட்டணங் கரைதுரைப் போக்குகளிலே யிருக்கிற இத்தனை அஞ்ஞாயம் நாட்டுப் புறங்களிலே தங்க ளாண்டைகளுக்குக் கீழாக யிருந்து பயிர் வேகிமை செய்கிற ஏழைப் பள்ளர், ...... யில்லை. அவர்க ளின்னாள் வரைக்கும் எப்படியுந் தங்கள் ஆண்டைகளுக்கு மரியாதையைக் காட்டுகிறார்கள்.

இந்த வெள்ளாளரு மிவர்களைச் சேர்ந்த மேல்சாதியாருந் தங்களருமைப் பள்ளருக்கும் ..... காட்டின நேஸ்ட்டூரங்களுஞ் சொல்லி முடியாது. ஒரு ...... அல்லது ...... அவர்களுடைய பெண் சாதிகள் சகல பாடுகளையும் பட்டு, ராவும் பகலும் உழைத்துப் பாடுபட்டாலும் அவர்களுங்குப் போதுமான சாப்பாடு கொடுத்து விசாரிக்கிற தில்லை. அவர்களுக்கும் அவர்கள் பெண் சாதிகளுக்குந் துணி யில்லாமல் வெய்யிலிலேயும் பனியிலேயுங் காற்றுலேயுங் கிடந்து அவதிப்படுகிறார்கள். அவர்கள் ஆடுமாடுகள் மேய்த்து, கிடை வைத்துக் காத்து புல்லறுத்துப்போட்டு தங்க ளிசமான்களுடைய காரியத்திலே சறுவ சாகிறுதையாக தங்க பெண் சாதிகளோடேகூடப் பாடுபடுகிறார்கள்.

இப்படியெல்லா மவர்கள் செய்தாலு மிச்சமான ஆண்டைகள் அவர்களுக்குப் போதுமான அன்னவஸ்த்திரங் கொடாமல், அரை வயற்றுச் சாப்பாடு அல்லது மெத்தக் கொஞ்சக் கூலி கொடுக்கிறது. அடிக்கடி யவர்களி லனேகர் முழுநாளும் பட்டினிலே கிடந்து, அந்த பசியோடேதானே தங்க ளிசமானுடைய வேலையிலே குறை வராமல்ச் செய்கிறது. இதினாலே அவர்கள் மிச்சமான திருட்டிலே

பழகி யெப்போதும் பச்சைக் கதிர்களையுங் களத்திலே நெல்லு களையுந், தாங்களுந் தங்கள் பெண் சாதிகளும் ........ கொண்டு போய்ப் பிழைக்கிறது.

பின்னையும், ஆண்டைகள் அவர்களை யொரு சின்னக் குற்றத்துக்கும் மகா நெஸ்ட்டூரமாக அடிக்கிறது. இந்த ஏழைப் பள்ளர் ........ பிறையாசத்தினாலேயும், வேலையினாலேயும், அனேக மிராசுக் குடிகளும் - பாளையகாறருஞ் சீமான்களாய்ப் போனார்கள். சோழ தேசத்திலே யிப்போ பிரதான மிராசுக் குடிகளாயிருக்கிற அணைக்குடிச் - சாமிநாதபிள்ளை யென்கிற பேரெடுப்பான் வெள்ளாளனும், வடபாதிமங்கலத்தி லிருக்கிற தொண்டமண்டலத்து முதலியாகிய சொக்கப்ப முதலியும், பழைய னூர் பொன்னுடையா னென்கிற காவல்க்காற வலையனுங் கவஸ்த் தலத்தி லிருக்கிற சுருதிமான் சாதியாகிய முத்தய்ய மூப்பனும், அய்யம்பேட்டை அப்பு நாயக்க னென்கிற கள்ளனும், பெருமாக்கூர் அப்பு நாயக்க னென்கிற கள்ளனும், மேல்மாந்தை அப்பு நாயக்க னென்கிற கள்ளனும், பிரம்பூர் முருகய்ய நாடா னென்கிற கள்ளனும் செங்கிப்பட்டி வேலாயுத மேற்கொண்டா னென்கிற கள்ளனும், இன்னமனேகரும் பயிர் வேகிமை செய்கிறத்திலே மிச்சமான பள்ளர் ........ ஒத்தாசையினாலே பேரெடுப்பானவர்களுக்குஞ் சீமான்களு மானார்கள்.

இந்தப் பயிர் வேகிமைத் தொழிலினாலே மிச்சமான பணங்க ளுண்டாகு தென்கிறத்தை யெல்லாச் சாதியுங் கண்டபோது ஒவ்வொரு சாதியாருஞ் சில நிலங்களை விலைக்கு வாங்கி அதிலே சில பள்ளரையும் ...... விலைக்கு வாங்கிவிட்டு, வேலை செய்யப் பண்ணி அவர்களுடைய பிறையாசத்தினாலே அய்ச்சூரிய்வான்களாய்ப் போக நினைத்தார்கள். ஏனென்றால் ஒரு ...... அல்ல தொரு ...... ஒரு வராகனுக்குள்ளே வாங்கலாந். தெட்சண ராட்சியத்திலே ஒரு ......, அந்த வூரிலே வழங்கிற பணம் பத்துப் பணமும் ஒரு ..... பதினைந்து பணமுமாகக் கொள்ளுகிறார்கள். அவர்கள் பெறுகிற பிள்ளைக ளெல்லாம் அந்த ஆண்டையைச் சேரும். அவர்களுக்கு இவர்கள் மாதாந்திர மிம்மாத்திரந் தானியமென்று படியளந்து கொடுக்கிறது. அவர்க ள்ளதைக் கஞ்சியுந் தண்ணீருமாய் வைத்துக் குடித்துக் கொண்டு சகல நாள்க்களிலேயும் வேலை செய்கிறது.

அவர்கள் தங்கள் தரித்திரத்தினாலே முந்தின ஆண்டையை விட்டு வேறே யொருதரிடத்திலே போய் வேலை செய்யவுங் கூடாது. ஏனென்றா லவர்கள் முழுதும் பேதைகளும் புத்தி யீன மனுஷருமா யிருக்கிறார்கள். பயமே யவர்களை யொரு வஸ்த்திரம் போல மூடிக்கொண்டிருக்குது. ஆனபடியினாலே தங்கள் ஞாயத்தைக் காட்டித் தங்க ளாண்டைகளோட யெதிர்த்துப் பேசவும் வழக்காடவும் பயப்படுகிறார்கள்.

பின்னையுந் தெட்சணத்திலே தன்னிச்சையான பள்ளர் ..... மெத்தக் கொஞ்சம் அடுமைப் ..... அடுமைப் ..... தான் மிருத்தமா யிருப்பார்கள், இந்த விதமாகப் பள்ளர் ..... ஒரு மாட்டினுடைய விலை முதலா யில்லாத்ததினாலே கொஞ்சப் பண முள்ளவன் முதலாய்ச் சில அடுமைகளை வைக்கக் கூடும்.

அவர்கள் சில வருஷத்துக்குள்ளே மிச்சமாய்ப் பெருகிப் போனார்கள். இந்த ஆதாயத்தைப் பிராமணாளுங் கண்டு, அவர்கள் தங்கள் வேதமோதுகிற தொழிலை விட்டுப்போட்டுப் பயிர் வேகிமை செய்யவு முத்தியோக பண்ணவும் யேற்பட்டார்கள். பிராமணாள் தங்கள் வேத மோதுகிற தொழிலை விட்டுப்போட்டு, இயாதொருயாபாரங்களுக் குத்தியோகங்க ளொன்றுஞ் செய்யப் போகாது அப்படி செய்தால் மகத்தாகிய பாவ முண்டென்று அவர்களுக்கு வேத விசாரகரால்க் கட்டளை யிடப்பட்டிருக்குது.

அப்படியே பிராமணா ளோதுகிற வேதத்தைப் பிராமணச் சாதி தவிர வேறொரு சாதியுஞ் சொல்லப் போகாது.

இயாதாமொருதன் துணிந்து வேத மோதினானால் அவன் அதோ கதியாய் நரக பிளத்தியாய்ப் போவானென்று சொல்லியிருக்கிறார். ஆனபடியினாலே, சகல சாதியாரும் பயந்து அவர்களுடைய வேதத்தை யனுசரிக்கிற தில்லை. ஆனால் வெள்ளாளருடைய பயிர் வேகிமைத் தொழிலைச் சகல சாதியாருஞ் செய்யத் துணிந்தார்கள்.

இப்படி யெல்லாச் சாதியு மொழுங்கு தப்பிப் போனதைக்கண்டு, ........ பள்ளர் மற்ற நீசச் சாதியார் பேசுகிறாப் போலேயும் நடக்கிறாப் போலேயும், வேத மோதுகிற பிராமணாளு மற்ற மேன் சாதியாரும் பொய் பிரட்டு பேசவுந் திருடவுந் துவக்கினத்தினாலே மேஸ்த்தர் ஆரிசுத் துரையவர்கள் தஞ்சாவூர்ச் சீர்மையின் பேரிலே

விசாரணையா யிருந்த நாளிலே பிரம, சத்திரிய, வசிய, சூத்திர ரென்கிற நாலு சாதிகளையுந் தலைப்பு மாற்றி நாலாஞ் சாதியாகிய, சூத்திரர்களை முதலாஞ் சாதியாக்கி, முதலாஞ் சாதியாகிய பிராமணாளை நாலாஞ் சாதியாக்கி, மூன்றாஞ் சாதியாகிய வசியரை, யிரண்டாஞ் சாதியாக்கி, யிரண்டாஞ் சாதியாகிய சத்திரியரை மூன்றாஞ் சாதியாக்கி, பட்டத்திலே யெழுதி முழுச் சோழ தேசத்துக்கும் பிராச்சித்தமாக இந்தக் கட்டளையைப் பறை போடுவித்தார்.

இங்கே நெடுகச் சொல்லிக்கொண்டு வந்தத்தின் படியே நாமறிந்துகொள்ளுகிற தென்னவென்றால், பிராமணாள் வேத மோதுகிற சாதியும், வெள்ளாளர் பயிர் வேகிமை நடத்தி ராட்சியத் துக்கு அதிகாரிகள், மந்திரிகள், பிரபுகள், தானாபதிகள், மற்ற உத்தியோகஸ்தராகவும், மற்றச் சாதியா ரெல்லலாம் இவர்களுக்குத் தொழிலாளிகளாகவும் பள்ளரும் . . . . இவர்களுக்கு அடிமை களைப் போலே பயிர் வேகிமைக் காரியங்களிலேயு மற்ற நன்மை தின்மைக் காரியங்களிலேயும் பாடுபட் டுழைக்கிறவர்களாகவும் இருந்தார்க ளென்று இக் காலத்திலே முதலாய் நாம் பார்க்கிறபடி அனுபவ சித்தியினாலே காணப்படுகுது. ஆனா லவரவர்க் காலா காலங்களுடைய வேதாபேதகத்தினாலே மேலிது கீழிதுங் கீழிது மேலிதுவுமாய்க் கலந்து ஒன்றோடொன்று எகலெக்காய்ப் போச்சுது.

## ௯௪. அதிகாரம்

**கம்மாளருக்கும் . . . . மிருக்கிற ஒவ்வாத்தனத்தின் பேரிலும், வித்தியாசங்கள் பேரிலும்**

கம்மாளர் வெள்ளாளனுக் குதவியா யிருந்து, கல்ப்பந்தல் போட்டுப் . . . . கொன்றுபோட்டதி னிமித்தியம், . . . . கம்மாளர் பேரிலே பகை யுண்டாகி, கம்மாளர் தங்களுடைய நன்மை தின்மை நாளிலே சிறப்பாய்ப் பிறப்பட்க் கூடாதபடிக்கு எப்போதும் எதிரிடையா யிருக்கத் தலைப்பட்டார்கள். நாங்கள் வெள்ளாள ருக்குப் பிள்ளைகளைப் போலே யிருந்து வேலை செய்து, சகல பாடுகளையும் படுகிறபடியினாலே, எங்களுக்கு வெள்ளாளர் தகப்பன்மார்கள், ஆண்டைகள் ஆனபடியினாலே யவர்களுக்குச் செல்லுகிற விருதுக ளெல்லா மெங்களுக்கு மாத்திரஞ் செல்லு மென்றார்கள்.

அதுகளாவது வெள்ளைக்குடை, பச்சைக்குடை, பூச்சக்கரக் குடை, சிங்கக் கொடி, அன்னக் கொடி, வெள்ளைக் கொடி, அனுமக் கொடி, குயில்க்கொடி, மேழிக் கொடி, ஆழிக் கொடி, சிம்மலாடம், திருச்சின்னம், அருகு, தீவட்டி, பகல்த் தீவட்டி, செயமணி, உபைய வெண்சாமரம், வெள்ளானை, வெள்ளைக் குதிரை, தந்தப் பல்லக்கு, வெட்டி விசிரி, சுருட்டி, வெள்ளைப் பாவாடை, மகாதோரணந், தங்கக் கும்பம், இன்ன மற்ற விருதுகளும் எங்களுக்கு மாத்திர முண்டு. அதை இடங்கையார் பிடிக்கக் கூடா தென்கிறார்கள்.

பின்னையுங், கம்மாளர் கலியாணம் பண்ணுகிறபோது, வீட்டு முத்தத்திலே மாத்திரம் பந்தல்ப்போட வேணுமே யல்லாமல் தெருவிலே பந்தல்ப் போடக் கூடாது. இவர்கள் தெருவிலே பட்டணப் பிரவேசம் வர மனதானால், சிகப்புக் குதிரை, கறுப்புக் குதிரை மேலே யேறலாஞ்; சிகப்புக் குடை, காவிக் கொடி, சிகப்புக் கடுத்த மற்ற விருதுகளும் பிடிக்கலாம். ஆயிலுந் தங்கள் தெருவை விட்டு வெள்ளாளர், செட்டி வற்தகாள் தெருவிலே போறபோது இந்தச் சிகப்புக் குதிரை கறுப்பு குதிரைகளுக்குக்கூட சில வேளை களிலே சச்சர வுண்டாகிறதுண்டு.

இப்படி, மாப்பிள்ளை குதிரைமேலே போறபோது சற்று உண்டானவனுடைய பெண்ணா யிருந்தால், ஒயில் வண்டியிலே போறதுண்டு. மற்றப்படி, . . . . . செய்கிறாப் போலே மாப்பிள்ளையோடே கூடப் பெண், குதிரை மேலேறிப் போக மாட்டாது.

ஒயில் வண்டி யில்லாத வூர்களில், மாப்பிள்ளை குதிரை மேலே போறபோது பெண்கூட ஏற வெட்கப்படுகிறத்தினாலுங் கால்நடையாய் வந்தால்ச் சின்ன மென்கிறத்தினாலும், பல்லக்கி லேறிப் பிறப்பட்டா லுயிர்ச்சேதம் வருகிறத்தினாலும் அனேகர் கலியாண முகித்தப் பிறகு பட்டணப் பிறவேசம் வராம லிருந்து விடுகிறார்கள்.

பின்னையுங் கம்மாளருக்குள் இழவு வந்தால்த் தங்கள் பிணத்தைத் தேர்க்கட்டி யெடுக்கலாம். ஆனதினாலே வெள்ளைச் சீலை கட்டக் கூடாது.

பின்னையும் அதிலே க, உ, ங, ச, செம்பு மட்டும் வைக்கலாம் அஞ்சு செம்பு வைக்கக் கூடா தென்கிறார்கள், கம்மாளரானால், நாங்கள் அஞ்சு சகோதரர் அல்லது அஞ்சு சாதியார் அதாவது கொல்லன் தச்சன், தட்டான், கன்னான், கல்த்தச்சன். இந்த எங்கள் அஞ்சு பேருக்குஞ் சாதி யொழுங்கின்படியே அஞ்சு செம்பு வைக்கிறது. ஞாய மென்கிறார்கள். ஆனால் . . . , . ரப்படி யல்ல. விறுமாவுக்கு நாலு தலை; விறுமாவைப் போலே கம்மாளர் ஒரு காரியத்தை யுண்டாக்கிற படியினாலே இவர்களுக்கு நாலு செம்பு மாத்திர மிருக்க வேணு மென்கிறார்கள்.

இது காரியத்தைப் பற்றி நான் சொல்லுகிற தென்னவென்றால் . . . . . அறியாமையினாலே கம்மாளரை விறுமாவின் வங்கிஷமாக எண்ணுகிறார்கள். விறுமாவின் வங்கிஷ மெல்லாம் பிராமணாள்; பின்னையும் விறுமா பிறம, சத்திரியர், வசியர், சூத்திரர் என்கிற நாலு சாதிகளையும் நாலு வேதங்களையு முண்டுபண்ணினா னென்று அக்கியானிகளுடைய எல்லாச் சாஸ்த்திரங்களிலும், விசுவ புராணத்திலுஞ் சொல்லப்படுகிறதே யல்லாமல், வானம், பூமி, சமுத்திரம், மலை, கடல், மற்றச் சிஸ்ட்டிப்புகளை விறுமா உண்டு பண்ணாமல், விசுவகற்மா உண்டு பண்ணினா னென்று அவர்களுடைய சாஸ்த்திரஞ் சொல்லுகுது.

ஆனபடியினாலே விசுவகன்மாவுக்கு திஸ்ட்டிக்கிற தொழி லிருந்துது. கம்மாளர் அவனுடைய வங்கிஷத்தாரா யிருக்கிறார்க ளென்று முந்தின விசுவ புராணத்திலே சொல்லப்படுகுது. இதின்படியே விசுவகன்மா இவர்களுக்குப் பிதாவா யிருந்தால் அவனுக்கு அஞ்சு தலை யுண்டென்று அவர்கள் சாஸ்த்திரத்திலே சொல்லப்படுகிறது மல்லாமல், அவர்கள் தானே ஒத்துக்கொள்ளுகிற படியினாலே யிவர்கள் அஞ்சு செம்புப் பிடிக்கிறதற்கு ஞாயமிருக்குது. இப்போ அவர்கள் விறுமாவுக்கு நாலு தலை யென்று சொல்ல வந்தாலும் அதுவுஞ் சரி யல்ல; ஏனென்றால், சிவனுக்கும், விறுமாவுக்கும், விசுவகன்மாவுக்கும் இந்த மூன்று பேருக்கும் அஞ்சு தலைதான். விறுமாவுக்கு யிருந்த தலையிலே சிவ னொரு தலையைக் கிள்ளிப் போட்டார். அது ஏது முகாந்தரத்திலே யென்றால்,

விறுமா சிவனுடைய பெண்சாதி பார்வதி மேலே மோகத்தைக் கொண்டிருந்து, சிவ னில்லாத வேளையிலே பார்வதி யிடத்திலே வந்து, அவள் நித்திரை பண்ணுகிறபோது, கூடப் படுத்திருந்து போட்டுப் போனார். சிவன் வெளியே போயிருந்தவர் வந்து. தம்முட பெண்சாதியைப் பார்த்து, நீ விறுமாவோடே பேசிக் கொண்டிருக்க வேண்டியதென்ன வென்று கேட்டார். அதற்கவள் உமக்கும் அஞ்சு தலை, விறுமாவுக்கும் அஞ்சுதலை யிருக்குது. ஆனபடியினாலே எனக்குத் தெரியாமல் நீர்தா னென்று விறுமா வோடே பேசிக்கொண்டிருந்தே னென்று சொன்னாள். இந்த வாற்தையினாலே சிவனுக்குக் கோப முண்டாகி விறுமாவின் அஞ்சு தலையிலே யொரு தலையைக் கிள்ளினார். அப்போ அந்தத் தலையானது சிவனுடைய கையைக் கடித்துக்கொண்டு பதினாலு வருஷமாகக் கீழே விழமாட்டோ வென்றுச் சொல்லித்துது.

இதினாலே அவருக்கு விறுமத்தி பிடித்தது. பதினாலு வருஷ மாக தன்னை மறந்து நிர்மாணியாய்த் திரிந்து தம்முட கையைக் கடித்த விறும கபாலத்திலே அல்லது தலை மண்டை யோட்டிலே தானே பிச்சை வாங்கிக் குடித்துக்கொண்டு திரிந்தா ரென்று விறும பத்திர காண்டத்திலே சொல்லப்படுகுது.

இப்படி யிந்தத் தேவர்கள் தங்களுக்கு வருகிறத்தைத் தாங்கள் தானே அறியாமல்ப் போனார்கள். பார்பதியோடே பேசினால் சிவன் நம்முட தலையைக் கிள்ளிப்போடுவா ரென்று விறுமாவுக்குத் தெரியாதே போச்சுது. விறுமாவின் தலையைக் கிள்ளினால் நாம் பயித்தியங் கொண்டு பதினாலு வருஷ முபத்திரப்படுவோ மென்று சிவனுக்குத் தெரியாதே போச்சுது. இப்படி யிருந்துது அந்தச் சுவாமிகளுடைய மகத்துவம்.

முற்காலத்திலே யிருந்த ஒரு வித்துவான் இதன் பேரிலே ஒரு பாட்டுப் பாடினான். அதாவது,

### விருத்தம்

ஐங்கரன் தலையி முக்க
அரிவனந் தன்னில் போகச்
சங்கரன் பிச்சை யேற்கச்
சதுமுகன் எழுதி னானோ?

அங்கவ னெழுதி னாக்கா
லவன்தலை யற்று வீழ்க!
இங்கவ னெழுதி னான்சொல்
லிதுவெல்லா மயக்கந் - தானே!

அதாவது, விறுமா எல்லாருடைய தலையிலேயு மெழுதுகிற வராம். அவ ரெப்படித் தலையிலே யெழுதினாரோ, அந்தப் பிறகாரத்துக் கொன்றுங் குறையாமல் நடக்கிறது. இதைப் பற்றி யந்த வித்துவான் சொல்லுகிறான்.

அஞ்சு கை யுடைத்தான பிள்ளையார் தம்முட முந்தின தலையை யிழந்து போகவும் அரி யென்று சொல்லப்பட்ட ராமர் பதினாலு வருஷம் வனத்திலே போய் வாசம் பண்ணவுஞ் சங்கர னாகிற சிவன் பிச்சை யெடுக்கவுஞ் சதுமுகன் அல்லது நாலு முகத்தை யுடைய விறுமா வெழுதினானே, அப்படி யவ னெழுதினது மெய்யானால் அந்த விறுமாவினுடைய தலை யற்று விழுகிறதற்கு ஆரெழுதி னார்கள். ஆனபடியினாலே யிதெல்லாம் பயித்திய மென்று பாடினான். இவிடத்திலே நாம் அந்தத் தேவர்களுடைய நடக்கை களைத்தொட்டு விசாரிக்க வேண்டிய தில்லை.

கம்மாளருக்கு அஞ்சு செம்புண்டென்கிற ஒரு ஞாயத்துக்கு மாத்திரம் விறுமாவுக்கும் விசுவகன்மாவுக்கும் அஞ்சு தலை யுண் டென்கிற ஒரு திஸ்ட்டாந்திரத்தை யிவிடத்தில்க் காட்டினே னொழிய மற்றப்படி யல்ல.

காரிய மிப்படி யிருந்தாலுங் கம்மாளர் எப்போ அஞ்சு செம்பு வைக்கிறார்களோ அல்லது வெள்ளைக்கடுத்த யாதொரு விருது களைப் பிடிக்கிறார்களோ, அப்போ ...... ரெழும்பி அவர்களைக் கொன்று போடுகிறார்கள். இது காரியத்தைப் பற்றி அங்கங்கே நடந்த அனேகந் திஸ்ட்டாந்திரங்களை ரூபகாரப் படித்தலாம்.

ஆயிலு மிரண்டொரு கதைகளை மாத்திர மிவிடத்திலே சொல்லிக் காட்டுகிறேன். அதாவது, ஏறக்குறைய முப்பது நாற்பது வருஷத்துக்கு முன்னே துளசி மகாராசாவி னாளையிலே கம்மாள ருக்கும் ...... மொரு பெரிய கலாப முண்டாச்சுது. அதெப்படி யென்றால், துளசி மகாராசாவுக்குச் சந்தோஷம் வர நடந்து

கொண்ட ஒரு தச்ச மேஸ்த்திரி தன் மகனுக்குக் கலியாணம் பண்ண யிருந்தபோது மாப்பிள்ளையும் பெண்ணும் பல்லக்கிலே பட்டணப் பிறவேசம் வர இராசாவை யுத்தரவு கேட்டான். இராசா வுத்தறவு கொடுத்து இரண்டு மூன்று கும்பினிவாருங் குதிரையும் பெலபடியாகக் கொடுத்தார்.

தச்ச மேஸ்த்திரி தன் மகனுக்குக் கலியாண முகித்தான். இன்னம் பட்டணப் பிறவேசம் வர ஆரம்பம் பண்ணுகிறதற்கு முன்னே, கம்மாளருக்கும் .........கும் பலவிதமான சண்டை யுண்டானத்தினாலே, கம்மாள ரெல்லாங் குமுக்குப் பண்ணிக்கொண்டு பல்லக்கிலே யெங்கள் பெண்ணு மாப்பிள்ளையும் பட்டணப் பிறவேசம் வந்தாலொழிய, நாங்கள் பட்டணத்திலே யொரு வேலையுஞ் செய்யமாட்டோமென்று சொல்லி யெல்லாருங் குடி வாங்கி, மேற்கே பத்து நாழிகை வழிக்கப்பறம் பட்டிக்காட்டு களிலே போய்க் குடியிருந்தார்கள்.

எல்லா வேலையுங் கம்மாளரா லே நடக்க வேண்டினபடியி னாலே, துளசி மகாராசா அவர்களுக்குச் சொல்லி யனுப்பி சுகமே வந்து பெண்ணு மாப்பிள்ளையும் பட்டணப் பிறவேசம் பண்ணிக் கொண்டு பழயபடி யிருக்கலா மென்று முன்னிலும் இரட்டிப்பான சேவுகரையுங் குதிரைகளையுங் கொடுத் தனுப்பினார்.

ஆகிலும் ......... தலைமையானவர்கள் அப்போ சருக்கலா யிருந்த மானோசியப்பாவைக் கையிலேப் போட்டுக் கொண்டார் கள். மானோசியப்பா இராசாவினுடைய தீர்மானத்துக்கு நல்ல தென்று சொன்னவர், அவரை யறியாமல் ..... முள்க்கையா யிருந்தார்.

இது தவிர, வாயசாயபுக் கூட்டங்களெல்லா மின்றைக்கும் நாளைக்கும் வலங்கையோடே சேர்த்தி யல்லாம, லிடங்கையோடே சேர்த்தியல்ல. அவர்கள் தங்களுக்கு வளகி போடுகிற கவரை களோடே தான் எது காரியத்துக்குஞ் சேந்தானையாய்ப் பேசுகிறது. இராசா வொருதன் மாத்திரந்தா னெக்காலத்துக்கு மிடங்கையோடே சேர்த்தியா' யிருக்கிறது.

ஆனபடியினாலே யின்றைக்கு முதலா யெந்த ராசாவு மிடங்கை, யெந்த ராசஸ்த்திரியும் வலங்கை யென்று பழமொழி யாகச் சொல்லிக்கொள்ளுகிறது.

இதின்படியே மானோசி யப்பாவும் வாயுச்சாயபுக் கூட்டங் களும் வலங்கை மாற்றார் பாரிசத்திலேயும், இராசா மாத்திரங் கம்மாளர் பாரிசத்திலு மிருந்தபடியினாலே அந்த விசை கூட்டங் கூடின அந்தக் கம்மாளர் காரியஞ் செயமாகாமல் அவர்களுக்குத் திடீரென்று தோர்வை வந்துது. இராசா அனுப்பின கவுலின் பேரிலே கம்மாள ரெல்லாம் பட்டிக்காட்டுகளிலே யிருந்து பிறப் பட்டு பெரிய கூட்டங் கூடி, மேற்கத்திப் ......... யெல்லாஞ் சேர்த்துக்கொண்டு, மஞ்சப் பாவாடை போட்டுக்கொண்டு, பெண்ணையு மாப்பிள்ளையையும் பல்லக்கிலே வைத்துக் கொண்டு மிகுந்த சந்தோஷத்தோடும் அனேகம் ஆடம்பரத்தோடுஞ் தஞ்சாவூருக் கோட்டைக்கு வந்தார்கள்.

இப்படி வருகிறபோது, இதற்கு முன்னாகப் பட்டணத்திலுஞ் சுற்றுப்புரத்திலு மிருக்கிற சகல ......... கூட்டங் கூடி, தடிகளை யுஞ் சிலம்பக் கம்புகளையுங், கத்திகளையு, மீட்டிகளையும் பிடித்துக் கொண்டு விருந்துபண்ணிச் சாராயங்களுங் குடித்துக்கொண்டு, கொம்புத் தப்பட்டைச் சகலமும் பிடித்துக்கொண்டு, வடக்குக் கோட்டை வாசலுக்கு வெளியே வந்து தானைய மிறங்கி யிருந் தார்கள்.

அந்தத் தருணத்திலே, கம்மாளர் படையும் எதிர்ப்பட்டார்கள் கம்மாளரிலே மிச்சமானபேர்கள், மகா கெட்டிக்காறருஞ் சிலம் பத்திலே பழகினவர்களுமா யிருந்தார்கள். என்றாலுந் **துணிந்த படை வெல்லு** மென்கிற பழமொழிபபடிக்கு .... ... கிருக்கிற துணிவு கம்மாளருக் கில்லாதபடியினாலே, அவர்கள் தோர்வைப் பட்டுப் போறார்கள்.

ஒரு ... ........ பத்துக் கம்மாளனை அடிக்கிறான். பத்துக் கம்மாளர் கூடி ஒரு .............. யடிக்கக் கூடாமல்த் தெரிபட்டுப் போறார்கள்.. அப்படியே அந்தச் சண்டையிலே கம்மாளர் படையின் மேலே ......... விழுகிறத்தைக் கண்டு, இராசாவினுடைய சேவுகர் சுட்டார்கள். சுட்டவுடனே அந்தப் புகையிலேதானே போயுள்ளே

விழுந்து பல்லக்கைப் போட்டுவிட்டோடினார்கள். கூட வந்த கம்மாளருந் திக்காலுக்குத் திக்கால் தெரிபட் டோடிப் போனார்கள். ......... மாப்பிள்ளையையும் பிள்ளையுஞ் சில கம்மாளரையும் வெட்டி அவர்கள் தலைகளை யீட்டி முனையிலேயுங் காலிலேயுங் கட்டிக்கொண்டு தெருவுக்குத் தெரு கடைக்குக் கடை திரிந்து காசு வாங்கினார்கள்.

பட்டணங் கொல்லென்ற சத்தமாய்ப் போச்சுது இது காரியங் களை இரசாக் கேட்டு, எந்தப் ......... கண்டாலும் பிடித்து, பீரங்கி வாயிலே வைக்கச்சொல்லித் தாக்கிதை பண்ணினார். இது சமாசாரங்களைப் ......... ரறிந்து எல்லாருங் குடிவிலகி யோடிப்போய்ச் சுற்றுக் கிராமங்கள் பட்டிக்காட்டிலே யிருந்தார்கள்.

பட்டிக்காட்டிலே போனவர்களை இராசாத் தமக்கு என்ன வல்லமை யிருந்தாலும் பிடிக்கக் கூடாது. கும்பினியார் காருபாருக்கு முன் இராசாவி னாளையிலே, ஒரு கிராமத்திலே ஒருத்தனொரு குற்றத்தைச் செய்து, பின்னொருத்தனுடைய கிராமத்திலே போய்ப் பத்து வருஷ மிருந்தாலும், அவனைப் பிடிக்கக் கூடாது; சச்சரவு பண்ணக்கூடாது. மற்றப்படி நாட்டாருடைய பகையுண்டாகும். இந்த விதமாகப் ... ..... குடிவாங்கிப் போன பிறகு பட்டணத்திலே செத்த மாடுகள், பிணங்கள், குப்பை, மற்றதுக ளெடுக்க ஆள்க் கிடையாதே போச்சுது.

ஆனபடியினாலே, கம்மாளர் சக்கிலியரையும் ...... அதற்கு குறித்தார்கள். என்றாலும் அவர்கள், அந்தப் ......... போலே செய்யமாட்டாமல்ப் போனார்கள், பிணத்துக் குடையவர்கள் தாங்கள்தானே போய்த் தங்களுடைய பிணங்களைச் சுட்டார்கள். ......... ரில்லாதபடியினாலே பட்டணத்துக்கு வெகு நஸ்ட்ட முண்டாச்சுது. நாலு மாத மட்டு மிந்த வருத்தத்தை யனுபவித்த பிறகு இராசாப் ......... கபில்க் கொடுத்தனுப்பிச் சகல .........யும் பழையபடி கோட்டைக்குள்ளே யழைப்பித்தார்.

இத்தனை நெஸ்ட்டுரங் கம்மாளருக் கிந்தச் சோழ தேசத்திலே யிருந்தாலும், பிள்ளையு மந்தந்த வேளை யிரண்டொரு கம்மாளர் பல்லக் கேறின துண்டு. அதெப்படி யென்றால், தஞ்சாவூருக்கு மேற்கே பத்து நாழிகை வழியிலே தச்சன் குறிச்சி யென்கிற ஒரு

கிராம மிருக்குது. அதிலே யெண்பது வருஷத்துக்கு முன்னே முத்துப்பேரிச்சு ஆசாரி யென்கிற ஒரு வித்துவா னிருந்தான். அவன் கம்மாளச் சாதியா யிருந்தாலும் படிப்பிலே மெத்தவுங் கெட்டிக் காறனா யிருந்தான். அவன் அந்த வூர் நாட்டாம்மைக் காறனாகிய இராமய்யன் பல்லவராயன் னென்கிற அகம்ப(டி)ய வெள்ளாளன் பேரிலே அனேகம் பாடல்களைப் பாடினான். இது நிமித்தியமாக அந்த நாட்டாமைக்காறன், அந்த முத்துப்பேரிச்சு ஆசாரி மேலே சீவனும் பிராணனுமா யிருந்தான்.

ஒரு நாள், அவன் தன் மகனுக்குக் கலியாணம் பண்ணவேணு மென்றிருந்தபோது, இந்த நாட்டாமைக் காறனோடே என் மகனுக்குக் கலியாணம் பண்ணப்போறேன்; ஆனபடியினாலே பெண் பல்லக்கிலே பட்டணப் பிறவேசம் வருகிறதற்குத் (தா) முதவியா யிருக்க வேணுமென்று கேட்டுக்கொண்டான். "நல்ல தாகட்டு" மென்று சம்மதித்து நாட்டுப் படை வந்தாலும் வரட்டும், பல்லக்கிலேயே பட்டணப் பிறவேசம் பண்ணி, யுன் மகனுக்குக் கலியாண முகித்து வைக்கிறே, னீ யொன்றுக்கு மலைக்க வேண்டா மென வாக்குத் தத்தம் பண்ணிக் கொடுத்தான்.

பிற்பாடு, அந்த ஊர் ........ முகாமையானவர்களை அழைப்பி வித்து, அவர்களோடே யிரகசியமாய்ப் பேசி, "என் பேரில்ப் பாடின, முத்துப்பேரிச்சு ஆசாரி மகனுக்குக் கலியாணம் பண்ணப் போறேன்; அதற்குப் பல்லக்கிலே பட்டணப் பிறவேசம் வரவேண்டி யிருக்குது; ஆனபடியினாலே நீங்கள் சண்டைக்கு வராமல் அமந் திருங்கோ ளுங்களுக்குப் பத்துப் பொன் தருகிறே னென் றுடம் படிக்கை பண்ணினான். அவர்கள் நல்லதென்று சம்மதித்தார்கள். இந்தப் ........ வாற்தையை நம்பிக் கலியாணத்துக்கு வேகிமைப் பண்ணினார்கள் இவர்களுக்குள்ளே ஒரு . . . . . னோடிப்போய் அசலூருப் . . . . . . இந்தக் காரியத்தை யெல்லாஞ் சொல்லிப் போட்டான்.

அவர்கள், நல்லது, காரியமெப்படி வருகுதென்று பார்ப்போ" மென்றிருந்தார்கள்.

சொல்லப்பட்ட ராமய்யன் பல்லவராயன் தன் பங்காளியையுந் தன்னோடேகூடச் சேர்ந்திருக்கச் சொன்னான். ஆயிலும் ........ ........

வலங்கைக்கு,

1. னம்பி குடிகள்
2. செட்டியள்
3. வெள்ளாழர்
4. சோகு வளஞ்சியர்
5. சங்கறு கவறைகள்
6. கலிம்பு செட்டிகள்
7. தெலிங்கு செட்டிகள்
8. கோயிலான்
9. கீழ்மை யுடையான்
10. மாலுமி
11. வீறணுக்கன்
12. மலை தாங்கி
13. பட்டையர்
14. அறச மக்கள்
15. னாட்டுக்கு பிறந்தான்
16. ஏழுகத்தார்
17. கங்கர்
18. விலாடர்
19. மலையாளர்
20. துளுவர்
21. நத்த மக்கள்
22. மலையின மான்கள்[1]
23. சூனிமான்கள்
24. கடிகையார்
25. சாதி அம்மட்டர்
26. கன்னிடியச் சேணியர்
27. நொறுவாளர்
28. மறவர்

---

1. மலையினமான் - மலையமான்

29. மாசிலவர்
30. மயிலாடிகள்
31. காலுவர்
32. பூலுவர்
33. ஊறாளிகள்
34. பக்கத்தார்
35. வைகானசர்
36. அனுகூலர்
37. ஓலைக்குடயார்
38. ஓடமுடயார்
39. னாறணங் காத்தான்
40. னாத்தட்டங்கார்
41. குசவன்
42. பாரிசிவன்
43. யியாமளன்
44. உவச்சன்
45. கழியன்
46. யிலை பழுதிவோன்
47. அளவன்
48. பரம்பன்[1]
49. கொல்லன்
50. தச்சன்
51. தட்டான்
52. கன்னான்
53. கல்தச்சன்
54. வில் தச்சன்
55. மறவன்
56. கட்டிக் கருமான்
57. பனையான்
58. தாசுவன்
59. னாவிதன்
60. சேணியன்

---

1. பாம்பன் (ஓலை)

61. பச்சை னாடர்
62. சேடர்கள்
63. குறுங்கர்
64. மேதகாறர்[1]
65. மலைக் குறிஞ்சி னாடர்
66. மன்னாடிகள்
67. கொட்டியர்
68. மெத்தலியர்
69. கயிலை குலைகாறர்
70. காவாதிகள்
71. புனத்தினர்
72. பொருந்தர்
73. விட்டலவார்
74. ஒட்டர்
75. குவளை கிழவர்
76. மாலை காரர்
77. சான்றான்
78. உறைகாரர்
79. யிருளர்
80. குறவர்
81. குளுவர்
82. நுளையர்
83. வலையர்
84. சோனகர்
85. கடலுவர்
86. பாதைகாரர்
87. பட்டணவர்
88. .........
89. பண்டை பாகர்
90. ஆயிலியர்
91. கீழாயர்
92. தும்பர்
93. செம்மார்

1. மெதகாறர் (ஓலை)

94. கற்ணிகர்
95. கோவியர்
96. வங்கரர்
97. யிளமையர்
98. வனையாகற்

தொண்ணூத் தெட்டு சாதிகள்

இடங்கை

1. வையவர்
2. அலகர்
3. பவுந்தர்
4. அஸ்த்திர தாரிகள்
5. பட்டுடையான்
6. காயக்குடி மரையோன்
7. குடும்பர்
8. ஆரியர்
9. அபிமான பூஷணர்
10, வேலாடியர்
11. தூத பிராமணர்
12. பறாதர்
13. மருந்த பிராமணர்
14. ஊர் பிராமணர்
15. ஸ்ரீகரிணத்தார்
16. காவரிகள்
17. மஹாமந்திரிகள்
18. தேவசேனன்
19. யெண்ணியத்தான்
20. வன்னியத்தான்
21. வாள் எடுப்பான்
22. அம்பணவன்
23. வளக்கை கோளன்
24. வாணிய நகரத்தான்
25. மட்டைய கண்டன்
26. முகட்டேவி
27. அரசுபள்ளி

28. முன்னுதாரத்தில் கள்ளயப் பள்ளி
29. வஞ்சி னாடர்
30. மலைக் குறவர்
31. கள்ள மக்கள்
32. கமகண்டர்
33. ஆனைமேற் பாகர்
34. குதிரைமேற் பாகன்
35. முத்தணியாயற்
36. யிளைய நியாயம்
37. கொஞ்சிக்குறி நெய்யர்
38. சோழியப் பள்ளி
39. கொல்லையுங் கொண்டு மீன் பிடிக்கும் சோழிய பள்ளி
40. சிறுமணி வலை வீசும் சிவன் படபள்ளி
41. கோயிலங்காடிகள்
42. சன்றிசேர் சாலியர்
43. உருத்திர சாலியர்
44. செங்கொந்த சாலியர்
45. வேட சாலியர்
46. செக்காடு வாணியர்
47. சேனையங்காடிகள்
48. கோட்டைப் படையிலார்
49. தபுலர்
50. கோமுட்டிகள்
51. கொற்றி
52. முக்குவர்
53. முத்துக்குளிப்பார்
54. முத்த ஒள்ளியார்
55. சந்தனர் எரிவார்
56. . . . . காறர்
57. கன்னகாறர்
58. சங்குகட்டும் மாறமங் கொல்லியார்
59. கலைகாறர்
60. புலிகாறர்
61. கன்னிகார்
62. வேட்டைக்காரர்

63. புல்வேடர்
64. புனல் வேடர்
65. குன்றவேடர்
66. திருவேடர்
67. கானவேடர்
68. கறக்கஞ்சி வேடர்
69. புலிக்குடி முத்தறையர்
70. காடு கார்பான்
71. யிருசன்
72. ஒத்தர்
73. உடுக்கர்
74. கறையார்
75. கண்ம கூடர்
76. யிற்வாள்க் கொண்டு மறமறுக்கு மேனாதி
77. கறைத்தறி நெய்யவார்
78. ஞூள்த்தரி நெய்வார்
79. பட்டணத்தரி நெய்வார்
80. விளிம்பபற்
81. ப . . . னர்
82. பாடு மதங்கர்
83. கம்மகாரர்
84. சீனர்
85. பாறத்தார்
86. துலுக்கர்
87. திமலர்
88. குண் . . . லர்
89. அப்பிடுகாறர்
90. தீயிலிடுகாறர்
91. மு முருசிகள்
92. பலியர்
93. பலகுருஞ்சிப் பலியர்
94. குழையர்
95. கங்காறணன்
96. முகம்பழி யில்லாதார்
97. சக்கிலிப் ,
98. ?

தொண்ணூத் தெட்டு சாதிகள்

ஆதிப் பிறம்மா படைத்த பூலோகத்தில் மாகாஞ்சிமா நகரியில் ஏகாம்பரனாதனை கிறுத்த[1] திறேதத் துவாபற கலியுகத்தில் முன்னாள் ஆதித்த கிரணத்தில் பிறந்த மனுச்சக்கிற வற்றி கட்டின செப்பேடு பாற்கவேணுமென்று பெருமாள் விக்கிறமசோஷ தேவர் அருளிச் செய்கையில், யிவருக்கு அஞ்சாவதுனாளிலே, சங்கரம் பாடியாரும் திருவாய்ப் படியாரும் தங்களில் கெருடக்கொடிக்குப் பிணங்கி, பெருமாள் திருமுன்பே கேட்கையில், பெருமாளும் திருவாய் மலர்ந்தருளி, ஏகாம்பரனாதன் கோயில் ஆயிரத்து தொளாயிரம் பேரையும்அழைத்துப் போக்கு எழுதின திருமுகம்.

வழிப் பாவாடை யிட்டு, நகரி வலஞ்செய்து திருமுகப் பிறசாதம் பண்ணிக்குடுத்து, ஸ்ரீமுகப்படி யெடுத்து எதிரிடை யிட்டபடிக்கி படிவிருத மேல்வு, வலங்கைக்கு வகை.

நம்பிக் குடிக்குச் சுரிகையும்[2] விடுகோலும், அடையாள முடையவர்கள்.

வைசிய செட்டிகளுக்கு நவரத்தின மாலையும், குளைத்தாரும்,[3] அடையாள முடையவர்கள்

காரளற்கு, சித்திர மொழியும், குவளைத்தாரும், சங்கும், கவின்னியும்[4], சாமரமும், அடையான முடையவர்கள்.

கொழுவளஞ்சியற்கு, சிகித்திர மொழியும், பசுமையும், வெண்சாமரமும், அடையாள முடையவர்கள்.

சங்கறு கவறைக்கும், கலிம்புச்செட்டிக்கும், தெலுங்க செட்டிக்கும், பசுமையும், சக்கரக் கோலும், அதித்தாரும் அடையாள முடையவர்கள்.

---

1. கிருத்த - கிருத
2. சுரிகை - கத்தி
3. குளைத்தார் - குழைந்தார், குழை - தளிர்
4. கவின்னியும் கைவளையும்

கோயிலானுக்கு அன்னக் கொடியும், பொஷ்தகமும், பூணூலும், சிகையும் அடையாள முடையவர்கள்.

கிழமையுடையானுக்கு எழுத்தாணியும் முருந்தாரும், துளப மாலையும் அடையாள முடையவர்கள்.

மாலுமிக்கு நக்ஷத்திரக் கொடியும், மகரத்துடுப்பும் அடையாள முடையவர்கள்.

வீரனுக்கானுக்கு (?) செவ்வந்தி மாலையும், தவுண்டையும்,[1] வெண்சாமரமும் அடையாள முடையவர்கள்.

மலைதாங்கிக்கு, செங்கழுணி மாலையும், சீலக் கொடியும் அடையாள முடையவர்கள்.

பட்டையற்கு, அரசமக்களுக்கும் கலியாணக் கொட்டும், காப்பும், வெள்ளைக் கொடியும் அடையாள முடையவர்கள்.

நாட்டுக்குப் பிறந்தானுக்கு, ஏழகத்தாற்கும் கங்கர் விலாடிக்கும் யிவர்களுக்கும் மந்திரக் கொடியும், கழுநீர் மாலையும் அடையாள முடையவர்கள்.

துளுவனுக்குச் சுரிகையும், கக்கடத் தலையும்,[2] சீலைக் கொடியும், மணிந்தாரும், அடையாள முடையவர்கள்.

நந்த மக்கள், மலையமான்களுக்குச் சொட்டையும்,[3] வெள்ளைக் கொடியும் அடையாள முடையவர்கள்.

மாகுலவற்கு, வள்ளும்,[4] அல்லிமாலையும், அடையாள முடையவர்கள்.

நில்மையாற்கு, அனுமக்கொடியும், அலிந்தாரும், அடையாள முடையவர்கள்.

---

1. தவுண்டை - தவண்டை - இசைக் கருவி
2. கக்கடத்தலை - நண்டுத் தலை
3. சொட்டை - ஆயுத வகைகளில் ஒன்று
4. வள் - வாள்

சூனிமான்களுக்கு, ஊசி மல்லிகைத்தாரும், உசந்த சங்கமும் அடையாள முடையவர்கள்.

கடிகையாற்கு, வெண்கவரியும், மல்லிகைத் தாரும், அடையாள முடையவர்கள்.

சாதி அம்மட்டற்கு, புருஷா மிறுக்கக் கொடியும், தும்பை மாலையும், அடையாள முடையவர்கள்.

தொறுவற்கு, முல்லைத்தாரும், கறடிக் கொடியும், அடையாள முடையவர்கள்.

மறவற்கு கொங்கனும் கொக்குக் கொடியும் அடையாள முடையவர்கள்.

மாகுலவற்கு, வள்ளும், அல்லிமாலையும், அடையாள முடையவர்கள்.

மயிலாடிகளுக்கு, காலுவற்கும், மயில்க்கொடியுஞ், சிறுகுறிஞ்சித் தாரும், அடையாள முடையவர்கள்.

பூலுவற்கு, வேங்கைத் தாரும், அடையாள முடையவர்கள்.

ஊராளிகளுக்கும், பக்கத்தாற்கும், சேவலக்கொடியுஞ், சிறு வஞ்சித் தாரும் அடையாள முடையவர்கள்.

வைகானஸனுக்கு சங்கும் துளசி மாலையும் அடையாள முடையவர்கள்.

அனுக்கூலனுக்குக் கொட்டு கூடையும், பெட்டகமும், பெபரப் பந் தாரும் அடையாளமுடையவர்கள்.

ஓலைக் குடியானுக்கு, ஓடைமுடையானுக்கு ஓடக்கோலும், மகரத் துடுப்பும், சவளமும், கரணக்[1] கொடியும் அடையாள முடையவர்கள்.

1. கரணக் கொடி — கரடிக் கொடி

நாரிணன்ங் காத்தானுக்கு சக்கரக் கொடியும், தமறத்த மாலையு[1] மடையாள முடையவர்கள்.

னாத்தயங்காருக்கு மல்லிகை மாலையும், கனற்மணியும்[2] அடையாள முடையவர்கள்.

பாரிதிவனுக்கு யியாமளனுக்கு உவச்சனுக்கு வெண் கவரியும், மத்தளமும், னாகபாசக் கொடியும், குடமுழாவும், அடையாள முடையவர்கள்.

கழியற்கும் பம்பற்கும், கொலைத் தாரும் சுருமபும் சிலைக் கொடியும் அடையாள முடையவர்கள்.

யிலை பழுதிடுவாற்கும் நாகமல்லித் தாரும் மெட்டியும் அடையாள முடையவர்கள்.

அளவற்கு தளப்புக்கோலும், கழுகுக் கொடியும் அடையாள முடையவர்கள்.

மனுமயன் விஸ்வகன்மர் துவட்டர் யிவர்களுக்கு பச்சைக் கொடியும், குறடு வாச்சியும், உளியும், நடுத்தறியும், சுத்தியும், சக்கரக் கொடியும், காணிகைக் கோலும், பெண்ணனுமந்தக் கொடியும், மகுடாபுரியும், வோரானை யிரானையும் அடையாள முடையவர்கள்.

கல்தச்சர், வில்தச்சருக்கு கொட்டுலரமும், அன்னக்கொடியும் அடையாள முடையவர்கள்.

மறவருக்கு கட்டிக் கருமாருக்கு கரிக்கூடையும், பெருங்குரமும், துருத்தியும் அடையாள முடையவர்கள்.

அன்னக் கொடியுட ப்னையாற்கு சாணையும், பல குருகித் தாரும், கொடியும் அடையாள முடையவர்கள்.

---

1. தமறத்தை மாலை – தமரத்தை மாலை. தமரத்தை – விலா மிச்சை மரம், தம்பரத்தை மரம்; எனவே இவற்றின் மாலை யாக இருக்கலாம்.

2. கனற் மணி – கனல் நிற மணி

னாபிதற்கு புருஷர் மிறுகக் கொடியும், சூதத்தாரும், கல்லும், கத்தியும், சகதிரக்கூடும் அடையாள முடையவர்கள்.

கன்னிடியச் சேணியற்கு கண்ட பெரண்டனும், முல்லை மாலையும் விசுறு தண்டையும் அடையாள முடையவர்கள்.

தெலுங்க சேணியற்கு பெண் பொலிக் கொடியும், பிச்சி மாலையும் அடையாள முடையவர்கள்.

உறைகாறருக்கு பெண் புலிக் கொடியும், அவிரித்தாரும் அடையாள முடையவர்கள்.

பச்சை னாடற்கு அனிலக்கொடியும், வேங்கைத் தாரும் அடையாள முடையவர்கள்.

சேடர்களுக்கு குறுஞ்சிக் கொடியும், கூரருவாளும் அடையாள முடையவர்கள்.

குலுங்கற்கும் மேதைகர்னற்கும் கத்தியும், சிச்சிலிக் கொடியும் அடையாள முடையவர்கள்.

மலைகுறிஞ்சி னாடற்கு, வேங்கைத் தாரும், கரகட்டம் பூவும்[1], அடையாள முடையவர்கள்.

மன்றாடிகளுக்கு காவும், உறியும், கெருட நிழலும், அடையாள முடையவர்கள்.

கொட்டியற்கும், மேத்தலியாற்கும், காவாதிகளுக்கு கொன்றைத் தாரும், சுபி வட்டமும்; காவும் அடையாள முடையவர்கள்.

கயிலகுலகாற்கு உறிகத்தியும், மேலைத் தலையும்[2] அடையாள முடையவர்கள்.

புனத்திகளுக்கு குன்றுமணித்தாரும், கொஞ்சிக் கொடியும் அடையாள முடையவர்கள்.

---

1. கரகட்டம் பூ - கரகாடம் எனும் பூ - கழுநீர்ப் பூ
2. மேலைத் தலை - மேழகத் தலை - கட்டுத் தலை.

பொருத்தற்கும் வட்டத்தருக்கு, வன்னி மாலையும் அடையாள முடையவர்கள்:

வட்டலவாருக்கு வெண்குன்றித்தாரும், வீர வாளும் அடையாள முடையவர்கள்.

ஒட்டருக்கு சதித்தையும், குந்தலியும், நறுவிலித் தாரும், அடையாள முடையவர்கள்.

குவளைக் கிழவனுக்கு, வெண்தாமரையும், நாவலத்தாரும் அடையாள முடையவர்கள்.

மாலைகாறனுக்கு, பூமுட்டியும் பலகை வட்டமும், வெள்ளெருக்க மாலையும், அடையாள முடையவர்கள்.

வண்ணானுக்கு கப்பன வாளும், புலிக்கொடியும், அல்லித் தாரும் அடையாள முடையவர்கள்.

சாணாருக்கு புட்டியும், மாத்தறிவாளும், மனத்தக் கொடியும் அடையாள முடையவர்கள்.

யிருளருக்கு. எருக்க மாலையும், குற்றுப் பற்றமும் அடையாள முடையவர்கள்.

குறவருக்கு கொஞ்சித் தாரும், சொக்கத் தடியும் அடையாள முடையவர்கள்.

குளுவற்கு, கழுதைக் கொடியும், குடினையும்,[1] கன்னியும்,[2] அடையாள முடையவர்கள்.

னுளையருக்கு னுன்மினிக் கொடியும், பெருவலையும், தாழந் தாரும் அடையாள முடையவர்கள்.

வலையருக்கு வசிக்கோலும்' யிச்சந்தருக்கு[3] அடையாள முடையவர்கள்.

---

1. குடினை – குடுவை (?)
2. கன்னி – கண்ணி
3. யிச்சந்தருக்கு – ஈச்சந்தருக்கு

சோனகற்கு சுப்புப் பிறாக்கரசமும் கன்னக் கொடியும், கற்பக விருக்ஷமும் அடையாள முடையவர்கள்.

கடலுளவர் பாதைகற்டும் மகரத் துடுப்பும் வலைக் கொடியும் அடையாள முடையவர்கள்.

பட்டணத்தவற்கு மாயவலையும், மகரக் கொடியும், கீழ் மாலையும் அடையாள முடையவர்கள்.

.. ...... ஆனைக் கொடியும், வெண்சாமரமும், பஞ்ச வன்னமும். எழுதாவோலையும், புளியத் தாரும், சொக்கத் தடியும் அடையாள முடையவர்கள்.

ஆயிலியற்கு உழக்கலப்பையும் விடங்கமும்,[1] அடையாள முடையவர்கள்.

கீழாயற்க்கு தும்பருக்கு கிழாக் கோலும் குடினையு மடையாள முடையவர்கள்.

கணிகளுக்கு பிரப்பந்தாரும், வலியன் கொடியும் அடையாள முடையவர்கள்.

கோயிலற்கு சக்கிறமும், விடுமுனையும் அடையாள முடையவர்கள்.

சேமாறிக்கு கயிறும், கத்தியும், முப்புரித் தாரும் அடையாள முடையவர்கள்.

யீரங்கொல்லிக்கு கத்தி, கல்லும், துறையும்(?) அடையாள முடையவர்கள்.

வலங்கை தொண்ணூற்றெட்டுச் சாதிக்கு கெருடன். புருஷர், மிறுகம், ஆனை, கழுதை, கழுகு.

இடங்கைக்கு

திருவெண்ணாழி மறையோற்கு, தெற்பையும்,முருக்கந் தாரும், கிஷ்ணாசினமும் அடையாள முடையவர்கள்.

---

1. விடங்கம் - துணிக் கொடி

அலகர், பசுந்தர், அத்திரதார்கள் பட்டுடையாற்கும் யிவர் களில் அலகருக்கும் பசுந்தருக்கும் குடமும், குச்சியும் அடையாள முடையவர்கள்.

அத்திரதாரிகளுக்கு சங்க முத்திரையும், வெண்ந்தாமரையும் அடையாள முடையவர்கள்.

காயற்குடி மறையோற்கு தும்பை மாலையும், சோளிகை சுத்தியு மடையாளமுடையவர்கள்.

ஆரியற்குப் பி ர ம் பு ம், யிலவந் தாரும் அடையாள முடையவர்கள்.

சூரியகூத்தற்கு தாளமும், கண்டிகையும்,[1] நாகபாசக் கொடியும் அடையாளமுடையவர்கள்.

கைக்கோளருக்கு, அடக்கமுந்,[2] தோமரமும்[3], தாளமும் சங்கும், விடுமயிரும், யிடுமுரசும், ஆண்புலி தனிக்கடுவனும், திருவரையித்த பத்திரமும் அடையாள முடையவர்கள்.

வெள்ளகக்கோளருக்கு, அடக்கமும், கொம்பும், போத்தும் ஈவாளும், நாளை எண்ணாத்தும் (?), வாவிலங் கரந்தும் (?) அடையாள முடையவர்கள்.

வேலாடியாருக்கு, ஊசிமல்லிகசுத்தாரும், வாளும் அடையாள முடையவர்கள்.

தூதப் பிராமணருக்கு, சீராகவும்[4] செண்பகத் தாரும், அடையாள முடையவர்கள்.

---

1. கண்டிகை - உருத்திராட்சம், தோளணி, பதக்கம் இவற்றில் ஒன்று.
2. அடக்கம் - தோள் கருவி
3. தோமரம் - சிறு வேல் அல்லது தடி
4. சீரா - தலைக் கவசம்

ஆசாரியருக்கு, அசுவக்[1] கொடியும், அழிஞ்சலத் தாரும், அடையாள முடையவர்கள்.

பாற்களுக்கு, குஞ்சரக் கொடியும், வாளும், குகையோங்கியும்' பருசையும் அடையாள முடையவர்கள்.

மருத்துவப் பிராமணருக்கு, பலசரக்கு மேல்விரித் திட்டவட்டச் சிப்பியும்[2], மரகத மாலையும் உடையவர்கள்.

ஸ்ரீகரிணத்தாருக்கு காவறிகுளும், எழுத்தாணியும், திவகஷாரு சனமும் (?), செவ்வல்லித் தாரும், அடையாள முடையவர்கள்.

மகா மந்திரிகளுக்கு, தேவசேனனுக்கு, குடமும், குச்சியும், அத்தி முத்திரையும், அன்னக் கொடியு மடையாள முடையவர்கள்.

எண்ணியத்தானுக்கு, வன்னியத்தானுக்கு எழுத்தாணியும், பனைத்தாரும் அடையாள முடையவர்கள்.

வாணிய நகரத்தானுக்கு, நாகசுரமும், செண்டும், தோன்றியத் தாரும்; கெருடக் கொடியும், மகரக் கொடியும் அடையாள முடையவர்கள்.

வாளெடுப்பானுக்கு, உடைவாளும், குறப்பொலியனும்[3] அடையாளமுடையவர்கள்.

அம்பணவற்கும், மட்டையகணற்கும் முகட்டெலிகளுக்கும் தாளமும், தண்டியும், சிராவும், செவ்வகத்தித் தாரும் அடையாள முடையவர்கள்.

அரசுபள்ளிகளுக்கு தரியின்போத்தும், விடுமயிரும்,[4] யிடு முரசும், செங்கழுநீர் மாலையும் அடையாள முடையவர்கள்

---

1. அசுவம் – குதிரை
2. திட்டவட்டச் சிப்பி – உறுதியான சங்கு
3. குறப்பொலியன் - சிறு ஒலியல் (?) – சிறு கோல் போன்ற கருவி
4. விடுமயிர் - கவரி (?)

மூன்று கூரத்தில் கள்ளப்பள்ளியரும், குத்தியூசி வலக்கொடியும், தோன்றித் தாரும் அடையாள முடையவர்கள்.

வஞ்சினாடர் மலைக்குறவருக்கு கழுகும், போத்தும், வேங்கைத்தாரும் அடையாளமுடையவர்கள்.

கள்ளருக்கு சகிலையும்(?), கிச்சிலிக் கொடியும், வேங்கைத் தாரும் அடையாளமுடையவர்கள்.

குதிரை பாகற்கு மேற்சுதினியும், புரிக்கோலும், பத்தரைக் கொடலும் அடையாள முடையவர்களும்.

கழகண்டருக்கு காவும்,[1] குடக்கொடியும் அடையாள முடையவர்கள்.

ஆனைப்பாகற்கு துளுனும்,[2] துடுப்பும் அடையாள முடையவர்கள்

முத்தளியாத்தாருக்கு யினையணி யாணியாத்தாருக்கு நரியும், செங்கழுனித் தாரும் அடையாள முடையவர்கள்.

கொஞ்சித் தறிகெய்யும் சோழிப்பள்ளிகளுக்கு, கொல்லை வலைகொண்டு மீன்படுக்கும் சோழியப் பள்ளிகளுக்கும், சிறுமணி வலை வீசும் சிவன்படப் பள்ளிகளுக்கும், கோயிலங்காடி களுக்கும், கொக்கிறகும், மலைக்கொடியும், பச்சை மாலையும், நரியும், போத்தும், விடுமயிலும் அடையாள முடையவர்கள்.

கன்றிசேர் சாலியர், உருத்திரசாலியர் வேடச்சாலியர், செங் காந்த சாலியாருக்கு, சிம்புளும்[3] சிதேவியாரும், நிறைகாகமும், குத்துவிளக்கும், (செவ்)வல்லித்தாரும் அடையாள முடையர்கள்.

சேனை அங்காடிகளுக்கு, விடுமயிலும், அடக்கமும் கொம்புந், தோன்றித் தாரும் அடையாள முடையவர்கள்.

---

1. கா - காவடி
2. துளுனும் - குறடும் (?)
3. சிம்புள் - சிம்புள் பறவை

செக்காட்டு வாணியருக்குச் செண்டும், தோன்றித் தாரும் விடுமயிரும் அடையாள முடையவர்கள்.

கோட்டைப் படையிலாற்கு, விடுமயிரும், தோன்றித் தாரும் யிராசாளிக் கொடியும் அடையாள முடையவர்கள்.

கோமுட்டிகளுக்கு விடுமயிரும், யிடுமுரசும், யிலவந் தாரும் அடையாள முடையவர்கள்.

தபிலற்கு சிறுகுருவியும், ஆவாரந் தாரும், அடையாள முடையவர்கள்.

வாதாவிக்கு வழிகாட்டின கொற்றிக்கு, முழையும்[1] செம் மயிரும் அடையாள முடையவர்கள்.

மூக்குவ(ரு)க்கு, பிட்டியும்,[2] யிடுகயிரு மடையாள முடையவர்கள்.

முத்துக்குளிப்பாற்க்கு, தமரகமும்,[3] அன்னக் கொடியும், முத்து மாலையும் அடையாள முடையவர்கள்.

முத்தூராயவற்கு, சந்தண மயிற்றி வாற்கும் வடகாக்கையு, மகாகாவிக் கொடியும், சந்தணத் தாரும், அடையாள முடையவர்கள்.

இரங்கொல்லிக்கு கரடியும், அல்லியத் தாரும், அவிரித்தாரும் அடையாள முடையவர்கள்.

கலைகாரர், புலிகாரர், கன்னிகாரர், வேட்டைகாரருக்கு, தட்டுவட்டமும் விடுமயிரும், கலைக்கொடியும், போத்தும் அல்லூறுக் கொடியும் அடையாள முடையவர்கள்.

---

1. முழை – முளை – தண்டாயுதம்
2. பிட்டி – சிறு கடை
3. தமரகம் – மரக்கலம்

புல்வேடர், புனல்வேடர், குன்றவேடர், கான்வேடர் கண்குறிஞ்சிவேடர், திருவேடுவர் யிவர்களுக்கு காக்கை கம்பமும் விடுமயிரும், மகரக்கொடியும், செங்கழுணித்தாரும், அப்புத்தலையும்[1] அடையாள முடையவர்கள்.

புலிக்குட்டி முகணேபரற்கு(?) சீலைக் கொடியும், செகண்டையும்[2] அடையாள முடையவர்கள்.

காடுகாற்பாருக்கு, இஞ்சனுக்கு, செம்முள்ளித் தாரும், காடைக் கொடியும் அடையாளமுடையவர்கள்.

ஒத்தர் உடுத்தருக்கு, குந்தலியும், மகரக் கொடியும், வேலந் தாரும் அடையாள முடையவர்கள்.

கரையார்ரைம் குடிக்கு தளப்பும்,[3] விருதந் தாரும் அடையாள முடையவர்கள்.

யீரத்தாற்கு வட்டலகையும், குறிஞ்சில்த்தாரும், கூடையு (மடைய)ாள முடையவர்கள்.

யீர்வாள் கொண்டு மரமறுக்கும் ஏனாதிகளுக்கு, யீர்வாளும், யிலைந்தத் தாரும், கோழிக் கொடியும் அடையாள முடையவர்கள்.

கரைதறி நெய்வார், ஞுளைத்தறி நெய்வார், பட்டணத் தறி நெய்வாருக்கு, பக்கத்தாருக்கு, அன்றில்க் கொடியும், ஆவாரந் தாரும் அடையாள முடையவர்கள்.

குழையற்கு னாணற் பூவும், சீலையும், வேங்கில் தாரும்(?), வஞ்சிக் கொடியும், —

பட்டைவாளிகற்கும், விளிம்பருக்கும், ......கூடையும், பட்டைக் கொடியும் அடையாள முடையவர்கள்.

1. அப்பு - அம்பு
2. செகண்டை – சேகண்டி (?)
3. தளப்பு – பனை

பாடு மதங்கற்கும், பாணற்கும், சிவப்புக் கொடியும், கரு பூனையும், பரமும், அடையாள முடையவர்கள்.

கம்மகாறற்கும், தமர் தப்பை சுற்றும் அடையாள முடையவர்கள்.

சீனருக்கும், மாம்பருக்கும், மாயவல்லியும், மகரத் துடுப்பும், ஈசகொப்பியும்[1] அடையாள முடையவர்கள்.

துலுக்கருக்கும், திமிலருக்கும், சிங்காணி வில்லும், அம்புராத் தோணியும், அகவக் கொடியும் அடையாள முடையவர்கள்.

குழலற்கு, தாளமும், தண்டியும், வாகக் கொடியும், அடையாள முடையவர்கள்.

அயிலிடுகாற்கும், மயிலிடுகாற்கும், யிலர்களுக்கு மகரக் கொடியும், முல்லைத் தாரும், அடையாள முடையவர்கள்.

பாயற்குச், செம்முள்ளித் தாரும், செங்கழுகும், அடையாள முடையவர்கள்.

பள்ளற்கு, நெல்லித்தாரும், அலவன்[2] கொடியும் அடையாள முடையவர்கள்.

சக்கிலியனுக்குத் தென்னஞ் சோலையும், வீரகத்தியும், கறுப்பும், சிவப்பும் அடையாள முடையவர்கள்.

ஆண்புலியும், னாரியும், போத்தும், வாளும், காக்கையும், கெருடனும், குதிரையும் புரிந்த யியாளி செங்கமும்[3] யிடங்கை தொண்ணூறத் தெட்டுச் சாதிக்கும் உண்டானது.

---

1. ஈசகொப்பி - ஈச்சோப்பி - ஈயோட்டி
2. அலவன் - நண்டு
3. யியாளி செங்கம் - யாளிச் சிங்கம் - யானை போன்ற முகமுடைய மிருகம்.

காஞ்சிமா நகரியில், தென் வடயோசனை அன்பது கோடிக்குக் கிழமேல் யோசனை அன்பது கோடிக்குச் சுத்துள யோசனை னூத்தன்பது கோடிக்கு உயரம் யோசனை அம்பத்தாறாயிரம் கோடிக்கு, யிதில் தாமரை தாதுபோல அலத்தில் பூலோகம். சோமன் னிராச்சியம் பண்ணிமை(ட்)டு(ம்) தென்வடயோசனை முன்னூறாயிரம், கிழமேல் யோசனை முன்னூறாயிரம், சுத்துள யோசனை முன்னூறாயிரத்து தொளாயிர, மிதில் அற்பத்தாறு தேசம், னூத்தஞ்சு திருப்படை வீட்டுக்குத் தாயாராகிய, கிருதயுகத்தில், புராணி மண்டலம், கோனகம், திருவயோத்தி மீண்டி ஆதிசிர வாராணாசி யெக்ஞெசாபுரி சிவபுரமும்,

திரேதா யுகத்தில் அயோத்தியாபுரமும், துவர்பர யுகத்தில் தண்டகிபுரமும், கலியுகத்தில் கெவிடம், துலுக்கம், குச்சிரா கிராமம் மாளுவம் கொங்கணம், னத்தவ . . நாக . . பரம், தாமரை கசம் பழந்தீவு, சக்கரக் கோட்டம், மதுர மண்டலம், தாமர வளையம், ஒட்டை விஷையம், பஞ்சப்பள்ளி கொல்னாடு, சந்தாடம், மாகலிதேசம், பங்காள தேசம், யிலாவு தேசம், யியோகி தேசம், உத்தலாடம், கடலமான், கங்கைகொண்ட சோழ கண்டம், அனுசுகம், சதம், ஆதிகலிங்கம், சம்பலம், சாகம், ம...சிப்ப லனேனகம், திப்பள தேசம், ஆத்திக் கெட்டம், திருனாமங்களால் மண்டலங்கள், சோழ மண்டலங்கள், தொண்டமண்டலமான செயங் கொண்ட சோழ மண்டலம், நடுவில் மண்டலமான விக்கிரம சோழ மண்டலம், பாண்டி மண்டலமான சோழி பாண்டி மண்டலம், சோழி மண்டலமான விக்கிரம சோழ மண்டலம், கொங்கான சோழ மண்டலம், வேங்கை னாடான் குலோத்துங்க சோழ மண்டலம், கலிங்கமான உத்தம சோழ மண்டலம், பளித்த மண்டலம், கடிகை வழியான் விக்கிரம சோழ மண்டலம், னுளம்பர் பாண்டியான் நிகரிற் சோழ மண்டலம், குறும்பர்க[ள்][னா]டான செகதேவி கர மண்டலம்,

யிழமான் விக்கிரம சோழ மண்டலம், ராய்பாண்டியான் வீரட்டை பாண்டிகொண்ட சோழ் மண்டலம், யிரட்டை பாண்டி யான் ராசேந்திர சோழ மண்டலம், ஆதிராசேந்திர சோழ

மண்டலம், ஆக தேசம் அன்பத்தாறுக்கு குறுகின வானகிரிக்கு மாதா யூராகிய காஞ்சி மாநகரி (ப)தினாறாயிரம் சிவாலயமும், பன்னீராயிரம் திருமுத்தமும், பவுத்தப் பள்ளி எண்ணாயிரமும், அம்மன் பெரும்பள்ளி ஒன்பதுனாயிரத் தொருனூறும், வினாயக கோட்டம் அன்னூறும், சூரிய கோட்டம் அன்னூறும் அளங்குடைய பயிரவன் அறுனூறும், துற்கை ஆயிரமும் காளிகோட்டம் அஞ்சாறும், ஏழு ஆறும், ஒன்பது பொய்கையும், பத்துக் கச்சிலும், பதினொரு மண்டபமும், மருந்தன் சாலை ஆயிரமும், வந்தனர் சாலை ஆறாயிரமும், பாடகர்சூழ் பன்னீராயிரம் அகலிகோத்திரமும் பிறைசனர் னாச்சியார் கோயில்சூழ் ஏழாயிரத்துச் சின்னம்பலரும், காஞ்சிக்குறியார் அய்யாயிரத்துச் சின்னம்பலர் உலகளந்த பெருமாள் கோவில் சூழவும், பிறாந்தூற் அய்யாயிரத்துச் சின்னம்பலரும், வெளக்கொளி கோயில் சூழவும் வீரவல்லியார் யிருபத்தாறாயிரமும்,

சொன்னவண்ணஞ் செய்தார் கோவில் சூழவும், வன்னியர் யிருபத்தாறாயிரம் அத்திகிரி சூழ் அன்பதுனாயிரம் பட்டையர்கள் காரைக்காட்டை சூழவும், யிருந்தாறாயிரம் அரசமக்கள் சும்பயம் பாடி சூழவும், னார்பத்தோராயிரம் னாயக்கமார் சுத்துப் பெரு வெளிக்கு னாற்பத்தெண்ணாயி(ர)ம் நற்பெருங் குடியும், வலங்கை தொண்ணூத்தெட்டுச் சாதி, யிடங்கை தொண்ணூத்தெட்டுச் சாதியும், அறுபத்தாராயிரம் தெருவும் உள்ள, ஆதித்திய கிரணத் தில்ப் பிறந்த, மனுசக்கிற வற்தி மனு வரம்பு கட்டி போட்ட செப்பேட்டுப் படிக்கு, எல்லை யிஷபத்தின்கண் பல யிருள்ச் செறிந்த சக்தி தோன்றி, னல்ல விச்சா சத்தியின்பால்னரம்முங்கூற்தன் தோன்றி, இனாதன் முகுற்தத்தின்பால் மெல்லிய னாதன் தோன்றி வில்லிய னாதன் பால் விளங்கிய வித்துத்தோன்றி, விளங்கிய வித்து வின்பால் சதாசிவன் தோன்றி, சதாசிவத்தின் கண் ஆகாசந் தோன்றி, ஆகாசத்தின் கண் வாயு தோன்றி, வாயுவின் கண் அப்பு தோன்றி, அப்புவின் கண் அன்னந் தோன்றி, அன்னத்தின்கண் பசு பாசந் தோன்றி, பசு பாசத்தின் கண் நரை[1] மிறுகம்ந் தோன்றி, நரை மிறுகத்தின்கண் பக்ஷிதாபம் தோன்றி, பக்ஷித்தாபத்தின் கண் விஷ்ணு தோன்றி, விஷ்ணுவின் கண் பிரம்மா தோன்றினன்.

1. நரை மிறுகம் - நர மிருகம் – மனிதன்

பிரம்மாவின் முகத்தின் தோன்றினன் பிராமணன். புசத்தில் தோன்றின க்ஷத்தியரின், குறங்கில்[1] தோன்றின வைசிய்யன், பாதத்தில் தோன்றின ...

யிதில் யிவர்களுக்கு தொழில் பிராஹ்மணாள் செய்யுந் தொழில் கர்பாஷ்டமத்திலே உபநயனம் பண்ணவும், வேத ஸாஸ்த்ரங்களோதவும், ஓதிப்பிக்கவும், யாகம் பண்ணவும், யாகம் பண்ணிவிக்கவும், நீர் தானங்கொள்ளவும் தானம் பண்ணவும். யாகம் பண்ணுமிடத்தில் பிராசோடமும்,[2] சோபனமும்[3] பண்ணக் கடவன்: தறும சாத்திரமும் வாசித்து, வில்லும்[4] சாதிக்கக் கடவன் ப்ராஹ்மணன்.

வைச்சிய வாணிச்சிய நகரத்தான், சூத்திற கன்னிகைகளையு கிறம விவாஹம் பண்ணக்கடவன். யிவன் பாகம்பண்ணுமிடத்து பசுவில் யிருபத்துனாலு உறுப்பில் மாம்ஸம் வாங்கி பொசித்தும், யிப் பசு வெழுந்திருத்து போக யாகம் வளர்க்கவும், பிராமணன் இவனுக்குத் தெய்வம், புரோஷத்தமன்; வ்ருக்ஷம் பாலாசு.

க்ஷத்திரியன் செய்யுற தொழில் பதினோரு வயசுலே உபநயனம் பண்ணி, ஆயுத சிலம்பமும் பண்ணி பல மண்டலங்களறிந்து கொள்ளவும். ஆறி லொன்று கடமை கொண்டு துஷ்ட நிக்கிறுகம்கள் பண்ணவும், சிட்ட பரிபாலனம் பண்ணவும், ஓதவும். யியாகம் பண்ணவும், தானம் பண்ணவும்.

க்ஷத்திறியன், வயிசிய கன்னிய, நகரத்தர் சூத்திற கன்னிகைகளையும் கிறம விவாஹம் பண்ணக் கடவன்.

யிவன் யிருபத்துனாலு பேர் எடுத்து வருகிற அபிஷேகத்தின் மேலே, னாலுபேர் ஏறி வேதஞ் சொல்ல, னாலுபேரையும் அபிஷேகத்தையும் முன்னே[5] முக்கால் னாழிகை பொறுத்தவன்.

---

1. குறங்கு - தொடை
2. பிராசோடம் – பிராசாதம் – கோயில் அமைப்பு
3. சோபனம் – படிக்கட்டு
4. வில்லும் – விழாவும் – மங்கலச் சடங்கும்
5. முன்னே - முன்றே

க்ஷத்திறியன் தேவதை யீசுவரன்; விரிக்ஷம் ஆத்தி.

**வையிசிய நகரத்தான்** செய்யுர தொழில் பன்னிரெண்டு வயசிலே உபநயனம் பண்ணி, கோரக்ஷணைபண்ணி[1] தானம் பண்ணவும், யியாகம் பண்ணிவிக்கவும், வேதபிராமணன் ஓதி விக்கவும், ஒரு சாமந்தளவு ஓதியும், நவறத்தினம் முதலானவை கொண்டு வியாபாரம் பண்ணவும், நெல்பண்ட முதலான பல சரக்கு கொண்டு வியாபாரம் பண்ணவும் கடவன்; கன்னியாதானம் பண்ணக்கடவான்; யிவன் சமுத்திறத்திலே மரக்கலமேறக் கடவன். யிவன் சிகாய சிறாயாப வீதமும்[2] தரித்து, அக்கினியும் சிலமும் கைவிடாமல் யிருந்து சுரபிமுத்திரமும் படைத்து ஆளவிட்டு அதினிட பிறயோசனமும் கொள்ளக் கடவன்.

சூத்திர கன்னிகையை கிறம விவாகம் பண்ணக் கடவான். யிவனுக்கு தெய்வம் புத்தேவதை; விறுக்ஷம், ஆத்தித்தார்.

... செய்யும் தொழில், தேவபிறாம்மணருக்கும் க்ஷத்திரி யருக்கும் உழவு தொழில் செய்து தேசத்தில் பிறாணிகளையும் றக்ஷித்து, பிறாம்மணருக்கும் ராசாக்களுக்கும் (ஏ)வின தொழிலுஞ் செயிது, சூத்திற கன்னிகையை கிறமவிவாகம் பண்ணக் கடவன்.

யிவன் தமிழோதக் கடவன். யிராசாவுக்கு அனுக்கன். அதுல .. ......; யிவருக்கு (அ)ருகத் தேவர்; விருக்ஷம், ஆல்; சிவனிடத்தி லுருந்தும் சனித்த ஆதி செய்வர். யிவருக்கு தொழில் பராற்த்தமா யிருக்குற சிவனையும் பூசைபண்ணி ஆதுமாற்தம்[3] பண்ணக் கடவர்.

மகா சையிவரா யிருக்குற பிறாமணரும் அனுசயிவரா யிருக்குற க்ஷத்திறிய வையிசியரும் அந்த சையிவனாகிய சூத்திறரும் யிந்த மூன்றுபேரும் ஆதி செயிவனிடத்தில் தீக்ஷயினாலே சையிவராவர். யிவர்கள் ஆதுமாற்த்தம் பூசை பண்ணக் கடவார்கள்.

---

1. கோரக்ஷணை – பசுவைப் போற்றி வளர்த்தல்
2. சிறாயாபவீதம் - யக்ஞோப வீதம் – பூணூல்
3. ஆதுமாற்தம் - ஆத்மார்த்தம் - ஆத்துமப் பயனுக்குரியது

பிறாம்மணனுக்கும் பிறாம்மண விதவைக்கும் களவில் பிறந்தவன் ஊர் பிறாம்மணன். யிவனுக்கு பேர் கோளக னென்று பேர்· யிவனுக்கு தொழில் பெருங்காய முள்ளிட்ட மருந்து சரக்கு வித்தும் சூத்திர ரிடத்துலே .........சினத்தங் கொள்ளக் கடவன்.

தன்னிய பிறாம்மணனுக்கும் க்ஷத்திய கன்னிகைக்கும் இறம விவாகத்துக்கு பிறந்தவன் வயித்தியன்; யிவனுக்குத் தொழில் ஆயுற்வேதமும் மாதிவாகட சாத்திரமும்[1] வாசித்து வியாதி பரிகாரம் பண்ணக் கடவன். பிறாம்மணர் பாகமேறு பெறுமிடத்தில் ஒரு பாகம் பெறக்கடவன்.

பிறாம்மணனுக்கும், பிறாம்மண கன்னிகைக்கும் களவில் பிறந்தவன், கிழமையுடையான், யிவனுக்குத் தொழில் பிறும்மாவை யும் பூசித்து அமுதுஞ் செயிவிக்கவும், துற்கையும் பூசித்து, அம்மை கோயிலுகளுக்கும், தேவர் கோவிலுகளுக்கும் கணக்கு யெழுதி க்ஷத்திரியருக்கு சேனாபத்தியம் செய்யவும் பிறாம்மணர் யாகத் துக்குப் பசு கூறிடக் கடவன்.

பிறாம்மணனுக்கும் க்ஷத்திரிய அமங்கலிக்கும் களவில் பிறந் தவன் மகா மந்திரிக னென்றும், தேவ சேனனென்றும், மகா விரிதி என்றும் பேர். யிவர்கள் மூவரும்முடன் பிறந்தவர்கள்; யிவர்களில் மகாவிறிதி செய்யும் தொழில் க்ஷத்திரியர் வாகனங்க ளேறும்பொழுது பின் னேறவும் சேனாபத்தியம் செய்யவும், க்ஷத்திரி யர் வாகனங்களுக்கு நறம்பு விடவும் கடவான்.

மகாவிறதி செய்யுந் தொழில் அத்தி திரித்து ஆகமங்க ளோது பள்ளிபடைத்தானங்கள் பூசிக்கக் கடவன்; அமுது செயிவிக்கக் கடவன்.

தெய்வசேனன் செய்யுந் தொழில் நம்பி திருவென்று பேர். றாய பிறாம்மணருக்கும், க்ஷத்திரியருக்கும் னாளும் முகூர்த்தமும் விதிக்கக் கடவான்.

---

1. ஆதி வாகட சாத்திரம் - ஆதி மருத்துவ நூல்

பிராம்மணருக்கும் வைசிய கன்னிகைக்கும் களவி(ல்) பிறந்தவன் சாதி . . . . .; யிவனுக்குத் தொழில் அம்பட்ட சாஸ்த்ரமும் வாசித்து, பிறாம்மணருக்கும் க்ஷத்தியருக்கும் வைசிய சூத்திரருக்கும் (யிவர்)களுக்குப் பிறந்த அனிலோமர் இருபத்து மூவருக்கும் வியாதி பரிகாறம் பண்ணக்கடவன்.

யிவர்களுக்கு ஸத்திற கிரிகையும் பண்ணக் கடவன். பிறாம்ம ணருக்கும் வையிசிய ஸ்திரீ அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் காமக்சனானா சாவரியும், கும்பகனான குசவனும். இவர்களில் காவிரி செய்யுந் தொழில் பிறாம்மணர் யியாகத்துக்குப் பசுப் படுத்தவும், பிறாம்மணருக்கும் க்ஷத்திரியருக்கும் கழுத்துக்குக் கீழ் னாடிக்கி மேல் பவனம் சூத்திற கலியாணத்துக்கு யுடையு உடுத்து உத்திரியமு மிட்டு சங்கு காட்டுவான்.

குசவன் செய்யுற தொழில், கும்பம், அகல் உள்ளிட்ட பாத் திறங்களும் மனைந்து,[1] புசமாண்ணி கயிலே குடுக்க கடவான். பிறாம்மண க்ஷத்திறிய வையிசிய ரிவர்களுக்கு கழுத்துமேல் பவனம் பண்ணக்[2] கடவன். யிவாள் துக்கத்துக்கு சட்டியும் யிட்டு, அக்கினியும் மிட்டு, உமியும் மிட்டு ஸ்மசான பூமியிலே கொண்டு போகக் கடவான்.

யிவன் பிறாம்மணனுக்கு, அம்பல மெழுகக் கடவான். யிவன், காடு காளியும் பூசித்து, அமுது செயிவிக்கக் கடவான். யில் விரு வரும் கிழமை யுடையானுக்கும், காவிறதிக்கும், மகா மந்திரிகனுக் கும் கன்னியர்கள்; தேவசேனனுக்கும் கன்னியர்கள்.

பிறாமணருக்கும் சூத்திர கன்னிகைக்கும் கிறம விவாகத்தில் பிறந்தவன் பாரிசைவன். யிவனுக்கு தொழில் காலத்திலே எழுந் திருந்து, முழிகி, பத்திறகாளியையும் பூசித்து, கோயிலுகளுக்கும் முழாவும் பண்ணி, தாடனமும் பண்ணி, சாஸ்த்ரமும் வாசித்து பேரிகையுங் கொட்டி சங்கம் சங்கும் கோவிலுகளுக்குச் சித்திர மெழுதி முத்திரையும் பிறவி மத்தளமுங் கொட்டி, மங்களங்கள் கொட்டப் பேரான்.

---

1. மனைந்து – வனைந்து
2. பவனம் பண்ணுதல் – மழித்தல்

சூத்திர அமங்கலிக்கும், பிறாம்மணனுக்கும் களவில் பிறந்தவன் அம்பணவன் யிவனுக்குத் தொழில் துற்கைக்கி ...வும் பூசித்து யிவன் (சாதிக்கு) மிறுக வதனமும் பண்ணக்கடவன்.

சிவபிறாம்மணனுக்கும், சிவபிறாமண சுமங்கலிக்கும் களவில் பிறந்தவன் பட்டுடையான்.

பவந்தனுக்கும், பவந்த சுமங்கலிக்கும் சளவில் பிறந்தவன் குடும்பன்.

பவந்தனுக்கும் பலந்த சுமங்கலிக்கும் களவில் பிறந்தவன் காயக்குடி மறையோன். இவர்களுக்குத் தொழில் ஆகமும் வாசித்து, வேதமுமோதி மகாதேவரையும் பூசித்து, அமுது மாத்தி அமுது செயிவிக்கக் கடவார்கள்.

மகா சைவரிடத்திலே யிவர்கள் சிவலிங்க பரிசெஷபண்ண கடவார்கள்; தீக்ஷெபெறக் கடவார்கள். யிவர்கள் பெண்டுகள் சிஷாளுக்கு தீ கைஷ (ப)ண்ணிவிக்க கடவார்கள். பிராம்மணனுக்கு கீழ் ..ருமாய் சிகா யக்ஞோப வீதம் தரிக்க பேதமுடையோர்களு மாய் இவர்கள் அனுலோம ரென்றும் பேர்..... ரகளுமாய் யிருப் பார்கள்.

இவர்கள் அ(க)ரம், பிறம தேசங்களில் குடியிருக்கு மிடத்தும் வெயித்தியனுக்கும், ஊர் பிராமணனுக்கும் நம்பி திருவும் அம்பணனுக்கு[1] இவர்கள் னால்வரும் மங்கல விதியி(ல்) மனை பெற்றுக் குடி.... கடவார்கள்.

.. த்தியத்தாள் கிழமையுடையான் ...க்கள் தோறும் மனை பெற்று குடியிருக்க கடவான். பாரசைவனும், அம்பணவனும் புறமங்கல விதியில் (மனை பெற்றுக்) குடியிருக்க கடவான்.

மகாவிறதியும் குண்டகனும் அலகனும் பவந்தனும் குடும்பனும் பட்டுடையானும் காயக்குடி மறையோனும் காயவிரியும் தேவர் கோயில் திருமடவளாகங்களிலே குடியிருக்க கடவார்கள்.

---

1. சுவடியில் தொடர் முற்றும் இலது.

மகாமந்திரிகனும் கத்திரியார் படைவீடுகளிலே ம(னை) பெற்று குடியிருக்க கடவார்கள். கத்திரியனுக்கும், கத்திரியனுடைய ஸ்திரீக்கும் களவில் பிறந்தவன் **விலாடர்; கந்தகன்** என்றும் பேர். நாட்டுப் பிறந்தாரவர்கள் மூவருட க்ஷத்திரியனுக்கு பேட்டைக் குடியுமாய் சமான சம்பந்தம் பண்ணக்கடவான்; வேழகத்தான் என்றும் பேர்.

க்ஷத்திரியனுக்கும், க்ஷத்திரிய சுமங்கலிங்கும் களவில் பிறந்தவன் **போசனென்றும், பட்டசேன** னென்றும் பேர் யிவர்களில் போசெனன் செய்யுந் தொழில், இராசாக்களை தப்(பு)விக்கவும், விளக்குடையனனாய் விளக்குப் பிடித்துத் திரியக் கடவான்.

பட்டசேநன் செய்யுந் தொழில் இராசாக்கள் சேனைக்கு சேனாபத்தியஞ் (செய்யவும் கடவான்), க்ஷத்தியனுக்கும் க்ஷத்திய விதவைக்கு களவில் பிறந்தவன் கயவரான **கடிகையான்**. இவனுக்கு தொழில் இராசாக்கள் . . . . . . . னாழிகை விண்ணப்பமும் திரி சக்தியும் திருவாய்க்கேழ்வி விண்ணப்பஞ் செய்யக்கடவான். க்ஷத்திரியனுக்கும் ... ...(கிர)ம விவாகத்தில் பிறந்தவர்கள் தேசபத்தரென்னும், உத்திர நென்றும், தண்டனாவிக நென்றும், ஆரிய நென்று... ...றும் பேர். இவர்களுக்கு தொழில் இராசாக்களுக்கு திருமுன்னடித்தல்; அந்தப்புரங் காத்தல்; இராசாக்களை... ...சேனாபத்தியஞ் செயிவிக்கக் கடவான்.

க்ஷத்திரியனுக்கு வைசிய சுமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **மாலுமி**. யிவனுக்கு தொழில் ......த்துமா...படைக்கவும், ஓட்டி வித்து சமுத்தி(ரக்) கரையிலே குடியி(ரு)க்கக் கடவான். யிவனுக்கு **மீகாம** னென்றும் பேர்.

க்ஷத்திரியனு(க்கும்).........விற் பிறந்தவன் தேவரியல். யிவனுக்குத் தொழில் குதிரை ஏறுதல், பலமண்டலம் எறிந்து கொள்ள தண்டு வி...

தேவரியலுக்கு சூத்திர கன்னிகைகும் கிறம விவாகத்தில் பிறந்தவன் நிஷ்க்ருஷனான வீரணக்கன். இவனுக்கு தொழில் இராசா... அமுது ஆக்ககடவான், இவர்கள் பெண்டுகளும்...... ...யர்களும் யிவர்கள் கோயில்களுக்கும் இராசாக்களுக்கும் பாடியா...... (க)டவான்.

வைசியனுக்கும் வைசிய கன்னிக்கைக்கும் களவில் பிறந்தவன் கருவளைச் செட்டி யிவருக்கு தொழில் கரிவளையும் பலகறை ..... டைகளிலே குடியிருக்க கடவான் வைசியனுக்கும் வைசிய விதவைக்கும் களவில் பிறந்தவன் வெண்கலச் செட்டி இவனுக்குத் தொழில்... (வியா)பாரங்கள் பண்ணக்கடவான்.

வைசியனுக்கும் வைசியக் கோடிக்கும் களவில் பிறந்தவன் கன்னடச் செட்டி. இவனுக்குத் தொழில்... .. ட்ட சரக்கு வித்துத் திரியக் கடவான்.

வைஸ்யனுக்கும் வைஸ்ய சுமங்கலிக்கும் களவில் பிறந்தவன் கலிம்பி செட்டி. யிவனுக்குத் . . . . . . .ள்ளிட்ட சரக்கு வித்து பாளையங்களிலே குடியிருக்கக் கடவான்.

வேளாளனுக்கும் வைசிய தாசிக்கும் களவில் பிறந்தவன் . . . . . உத்திராபதியா றென்றும், உத்தரபதி வைஸ்ய றென்றும் பேர். யிவன் யிருபத்து னாலு நகரங்களிலே குடியிருக்க கடவான். இவனுக்கு தெய்வ . . . ரீ வரதேவதை.

வைசியனுக்கும் வைஸ்ய கோடிக்கும் களவில் பிறந்தவன் சேனையங்காடி. யிவனுக்குத் தொழில் கடையிலிருந்துச் சரக் மூல . . களும் வித்து, நயினார்கூத்துக் கண்டு அருளும் பொழுதும். ஆனைபந்தம், குதிரை பந்தம், பிபேற் பந்தம் (?) பிடிக்க கடவான், இவன் திருமடவிளாகங்களிலே குடியிருக்க கடவான்.

வைஸ்யனுக்கும் வைஸ்ய அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் . . . . . . யிவனுக்குத் தொழில் பட்டணங்களிலே குடியிருந்து, னானா தானியங்களும் விற்கக் கடவான்.

சூத்திரனுக்கும் வைஸ்யக்கோடிக்கும் களவில் பிறந்தவன் நத்தமகன். யிவனுக்குத் தொழில் ஆனை (ஏ)று(தல்), குதிரை ஏறுதல், தண்டுவிடை போகக் கடவான். யிவன் மலையி(ட)த்திலும், வனாந்தரங்களிலும் குடியிருக்க கடவான்.

நத்தமகனுக்கும் யிவனுடைய ஸ்ரீக்கும் . . . . பிறந்தவன் **மலைமான்.** யிவனுக்குத் தொழில் மலையிடத்திலும் வனாந்தரங்களிலும் குடியிருந்து ஊருக்கு காவலுங் காத்து (திரியக் கடவான்).

சூத்ரனுக்கும் வைஸ்ய ஸ்திரீக்கும் களவில் பிறந்தவன் **முத்துக் குளித்தான்.** இவனுக்குத் தொழில் முத்துக்குளிக்க கடவான். வைஸ்யனுக்கும் சூத்திர சுமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **சந்தன மரிவான்.** யிவனுக்குத் தொழில் சந்தன மரிந்து பட்டணங்களிலே குடியிருக்க கடவான்.

சூத்ரனுக்கும் வைஸ்ய கோடிக்கும் களவில் பிறந்தவன் **மலையமான்.** இவனுக்குத் தொழில் வானாந்தரங்களிலே குடியிருக்க கடவான்.

சூத்ரனுக்கும் சூத்திரன் . . . . . . . . பிறந்தவன் **வேட்டைகாரன்** யிவனுக்குத் தொழில் (கீ)ழ்ப்பட்ட சாதி (வி)ண்ணத் தாருக்கு கணக்கு யெழுதி, வெள்ளாழர் ஊருக்கும் நகரங்களுக்கும் நடுவே மனைபெத்து குடியிருக்க கடவான்.

க்ஷத்திரியனுக்கும் சூத்திர அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **கைக்கோளன்.** இவனுக்குத் தொழில் கோவிலுக்கும் வெளி காவல் காத்து, ஆயுத சிலம்ப(முஞ்) செய்து, இராசாக்களை சேவித்து திரியக் கடவான். இவர்கள் பெண்டுகளும் தேவதேவர் கோவிலுகளுக்கும் இராசாக்களுக்கும் பாடியாடி திரியக், கடவாள், ஆக மாற்கம் ஆடக்கடவாள். யிவர்களுக்குத் தேவடியா ளென்றும் பேர்.

ஆக க்ஷத்திரியனுக்கு பிறந்த **அனுலோமர்;** யிவர்கள் தமிழோத பெறார்கள். இவர்கள் பூண்ணூலு மிட்டு படைவிட்டாலும் திரு( . )ய பண்ணி யிருக்க கடவான். இவர்களுக்கு தேவதை.[1]

நத்த மகனுக்கும், நத்த மகனுடைய ஸ்திரீக்கும் (களவில்) பிறந்தவன் **நிலமையான்.** இவனுக்குத் தொழில் பாடி காவல் காற்கக் கடவான். யிவர்களுக்கு தேவதை ஆதி சூரியன்.

---

1. தேவதையின் பெயர் ஒலையில் விடுபட்டுள்ளது

அம்பட்டனுக்கும், அம்பட்ட ஸ்திரீக்கும் களவில் பிறந்தவன் யிரதகாரன். இவனுக்குத் தொழில் பிராஹ்மணருக்கும் க்ஷத்திரியனுக்கும் செய்து குடுத்து திருமடவிளாகங்களிலே குடியிருக்க கடவான்.

வைஸ்யனுக்கும் வைஸ்ய அமங்களிக்கும் களவில் பிறந்தவன் சூரிய கூத்தன். இவனுக்குத் தொழில் பரதசாஷ்த்திரமும் வாசித்து, திருனாடகமும் பாடி, திருமட விளாகங்களிலே குடியிருக்கக் கடவான்.

காணத்தானுக்கும் சூத்திர அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் எண்ணியத் தான், வண்ணியத்தான். யிவர்களுக்குத் தொழில் சூத்திரற்கும் பட்டணத்தாருக்கும் கீழ்பட்ட சாதி வண்ணத் தாருக்கும் கணக்கெழுதி வெள்ளாழன் யூர்களுக்கும் நகரங்களுக்கும் நடு(வே)ம(னை) (செய்)து குடியிருக்க கடவான். யிவர்கள் தேசங் களுக்கும் நகரங்களுக்கும் கணக்கெழுதக் கடவான். இவர்களுக்குக் குலதேவதை துற்காதேவி. ப்ராஹ்மணனுக்கும் ....... பிறந்தவன் உவச்சன். இவனுக்குத் தொழில் [1]

ப்ராஹ்மணனுக்கும் க்ஷத்திரியனுக்கும் வைசியருக்கும் சூத்திர ருக்கும், அனுலோமர் யிருபத்து மூவர் குரையும் கும்பிட்டு, பரிவட்டமுஞ் சூட்டி பிடாரிக்கு குடியும் வெட்டி, மதுகுடமும் வைத்து யிவன் சாதிக்கு சாடியும் பிடித்து, பொன்குடவிழாவும் மொழிய, மத்தும் கொட்டுங் கலணைகள் (?) நேராக கொட்டப் பெறான். திருமட விளாகங்களிலே இருபதின்கோல்த் தறைக் கிழக்கே யிடம் விட்டு, குடியிருக்க கடவான். இவன் அகரங் களுக்கு நடுவே விழுந்த விடக்கு[2] ஊருக்குப் புறம்பே எடுத்துப் போகக் கடவான். இவன் எண்ணியத்தானுக்கும் வண்ணியத் தானுக்கும் கன்னியன்.[3] இவனுக்கு குலதேவதை பத்திரகாளி. சாதி அம்பட்டனுக்கும் சூத்திர கன்னிகைக்கும் களவில் பிறந்தவன் வைகாநயன்.

---

1. தொழில், சுவடியில் விடுபட்டுள்ளது
2. விடக்கு – பிணம்
3. கன்னியன் - தன்னியன் - ஊழியன்

இவனுக்குத் தொழில் விஷ்ணு ஸ்தாநங்களுக்கு திருவொர தனமும் பண்ணக் கடவான்; எடுத்தகை நீட்டியும் அமுது செய் விக்க கடவான். யிராசகர்த்தாருக்குச் சோறுமட்டு யிலையும்மிடக் கடவான். ப்ராஹ்மணனுக்கு ஷதியவிவாஹம் பண்ணுமிடத்து குதிரை பிடிக்க கடவான். யிவன் விஷ்ணு ஸ்தாநங்களிலே திருமடை விளாகங்க்ளிலே குடியிருக்க கடவான். வைகாநயனுக்கும் அவனுடைய ஸ்திரீக்கும் களவில் பிறந்தவன் அனுகூலன்.

இவனுக்குத் தொழில் பி(ர)ம்பு கொண்டு கொட்டு கூடை பேடகம் முடையக் கடவான். இவர்களுக்கு தேவதை விஷ்ணு.

அனுகூலனுக்கும் அனுகூலஸ்திரீக்கும் களவில் பிறந்தவன் உலகுடையான். இவனுக்குத் தொழில் சவளமெடுத்துச் சேவித்து, தோடு[1] முடைந்து சீவிக்ககடவான்.

சூத்திரனுக்கும் க்ஷத்திரிய அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் ஓடமுடையான். இவனுக்குத் தொழில் ஓடமும் தாழிவிட்டுச்[2] சுங்கங் கொள்ளக் கடவான். இவன் ஊருக்கு புறம்பே னானூறு கோல்த் தறை யிடம்விட்டு கிழ பாரசத்திலே[3] குடியிருக்க கடவான்.

ஓடமுடையானுக்கும் ஓடமுடையானுக்கும்[4] ஓடமுடையான் ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் புறப்பாய் வாணியன், னாரணங் காத்தான். இவனுக்குத் தொழில் புறப்பாய் உள்ளிட்டவை நெய்சுவித்து திரியக் கடவான். யிவனும் ஓடமுடையான் அருகே குடியிருக்க கடவான். இவர்களுக்குத் தேவதை லஷ்மி.

மாலுமிக்கும் மாலுமி ... வயத்தில் செனித்தவன் மண்ணாடி. யிவனுக்குத் தொழில் பசு, எருமை, ஆடு யிவை படைத்து, நெய்யும் பாலும் வித்து, அனுலோமர் இருபத்து மூவருக்கும்

---

1. தோடு – ஓலை
2. தாழி – ஓடம் போன்ற கலம்
3. பாரிசம் – பக்கம்
4. ஓலையில் தவறுதலாக இருமுறை எழுதப்பட்டுள்ளது

சிவிகையும் தாங்கக் கடவான். இவன் மலைமானுக்குத் தண்ணியான். ஊருக்குப் பிறம்பே யிருபதின் கோல்த் தறை யிடம்விட்டு குடியிருக்க கடவான்.

மன்றாடிக்கும் மன்றாடிச்சிக்கும் களவில் பிறந்தவன் . . . . இவனுக்குத் தொழில் எருமை மேத்து, பால் தயிர் னாடுகளிலே வித்துத்திரியக் கடவான். இவன் வனாந்திரத்தில் குடியிருக்க கடவான்.

தொட்டியனுக்கும் தொட்டிய ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் **மேத்தலையன்.** இவனுக்குத் தொழில் கிணறு குள முதலானவை வெட்டி திரிறக் கடவான். கடலை துவரை பணியாரமும் வித்து, பல வியாபாரமும் பண்ணக் கடவான். இவனுக்குத் தேவதை வீரபத்திரன்.

க்ஷத்திரியனுக்கும் யிடைச்சிக்கும் களவில் பிறந்தவன் **மலை தாங்கி.** யிவனுக்குத் தொழில் பட்டவற்தனுமாய் குடமொழிந் தவர்கள் ஆசாரமும் பண்ணுவித்துக் கொள்ளக் கடவான். ஆயித சிலம்பங்களும் பண்ணி, ஆனையேத்தல் குதிரை யேத்தம் சாதிக்க கடவான்.

மலைதாங்கிக்கும் மலைதாங்கி கன்னிக்கும் களவில் பிறந்தவன் அரசமகன். யிவனுக்குத் தொழில் பட்டவற்தனுமாய் மகுடமொழிந் தவர்களை ஆசாரமும் பண்ணிவித்துக்கொண்டு, ஆயிதச் சிலம்பமும் பண்ண ஆனை, குதிரை ஏற்றமும் சாதிக்க கடவான். யிவனுக்கு தேவதை யீச்வரன்.

வைஸ்யனுக்கும் சூத்திர அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் . . . .

சாலியனுக்கும் . . . . . . . . களவில் பிறந்தவன் **ருத்திர சாலியன்.**

சாலியனுக்கும் சாலியனுடைய ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் **செங்கொன்ற சாலியன்.** யிவர்களுக்குத் தொழில் சிலைகயும் வைத்து, கூறையும் சவளியும் நெய்து, இராசாக்களுக்கும் தேவர் கோவில்களுக்கும் பரிவட்டமும் நெய்து குடுத்து, நகரங்களில் கீழைத் தெருவில் குடியிருக்க கடவன். இவர்களுக்கு தேவதை ஸ்ரீதேவியார்.

வீரணனுக்கும் க்ஷத்திரிய அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **வேட்கைக்கோளன்.** இவனுக்குத் தொழில் புடவையும் நெய்து, இவர்களும் பெண்களும் சூலமிட்டு, கோவில் சேவிக்க கடவான்.

ஆசியனுக்கும் ஆசியனுடைய ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் **தூதபிராமணன்.** இவனுக்குத் தொழில் இராசாக்களுக்கும் ஆடிக் கீழ் போய்[1] சத்திக்கிரஹயம்[2] பண்ணுவிக்க கடவான். இவர்களுக்கு தேவதை காரண ஈச்வரன்.

சூத்திரனுக்கும் . . . . ஸ்திரீக்கும் களவில் பிறந்தவன் **மனுமயன் விஸ்வகன்மன்** மரது வட்டான். இவர்களுக்குத் தொழில்; யிவர்களில் மனுச் செய்யுந் தொழில் னூத்துத் தொண்ணூற்றாறு சாதிக்கும் செய்துண்ண, ஆயிதஞ் சமைத்துக் குடுத்து அனுலோமர் இருபத்து மூவற்கும் நலந்தீங்கும் பரிவட்டஞ் சூட்டி ஸ்மஸாநத்து[3] நெருப்புச் சட்டியும் தூக்கி போகக் கடவான். மலைசெய்யுந் தொழில் னூத்துத் தொண்ணூற்றாறு சாதிக்கும் மரத்தொழில்க் கிறிகையும் பண்ணிக்குடுத்து அனுலோமர் யிருவத்து மூவற்கும் நலந்திங்கு பரிவட்டமுஞ் சூடி மாசான பூமிக்கு போய் தன் கையில் உளியாலே குற்றி நீற்குட முடைக்க கடவான். விஸ்வக்ரம செய்யுந் தொழில் னூத்தாறு சாதிக்கும் பூஷணம் சமைத்துக் குடுத்து அனுலோமர் யிருபத்து மூவருக்கும் பரிவட்டஞ் சூட்டி ஸ்மஸாந பூமியிலே வாய்முடக்கு கண்டையுஞ் சமைத்து குடுக்க கடவான் ஆகவும். துவட்டாஞ் செய்யுந் தொழில் மணலுங் கரியும் கொண்டு பல தயிலமிடக் கடவன். தேவர்களையும் மேறிவுருளப்பண்ணி அனுலோமற் இருபத்து மூவற்கும் பரிவட்டஞ் சூடி ஸ்மஸான பூமியிலே வாய்க்கறிக்கு கலமுங் கொண்டுபோகக் கடவான்.

கன்னானுக்கு கன்னிட ஸ்ரீக்குப் பிறந்தவன் **கல்த்தச்சன்.** இவனுக்குத் தொழில் னாயமார் கோயி லெடுக்கவும், ஊருக்கு கல்பணி செய்யக் கடவார்கள்.

---

1. அடிக்கீழ் – பணிந்து
2. சக்திக்கிருஹ்யம் - சக்தி தொடர்பான பூசை
3. ஸ்மஸாநம் - மயானம் - சுடுகாடு

கல்தச்சனுக்கும் இவனுட ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் செங்கற்த் தச்சன், இவனுக்குத் தொழில் கோயில்களுக்கும் ஊர்க்கும் யிட்டிகை[1] பண்ணக் கடவன். இவர்களுக்குத் தேவதை யீச்வரன்.

க்ஷத்திரியனுக்கும் க்ஷத்திரிய கன்னிகைக்கும் களவில் பிறந்தவன் **மலையாளன்.** இவனுக்கு தொழில் வில்லுஞ் சுரிகையுஞ் சாதிப்பித்து, யிராசாக்களை சேவிக்க கடவான்.

மலையாளனுக்கும் அவளிட மங்கலிக்கும் களவில் பிறந்தவன் **வளுவன்.** யிவனுக்குத் தொழில் கடைத்தலையும் பரிசையும் எடுத்து யிராசாக்களை சேவிக்க கடவான்.

மலைதாங்கிக்கும் சூத்திர கன்னிகைக்கும் களவில் பிறந்தவன் **அரசுபள்ளி.** யிவனுக்குத் தொழில் சூத்திரற்கும் விளிம்பருக்கும் கீழ்பட்ட சாதி, சாதி வற்க்கத்துக்கும் சவம் புரமடக்கி, இவர்கள் பெண்டுகள் சவம் புரமடக்கி விமான மேறித் திரியக் கடவார்கள். இவர்களுக்கு தேவதை சம்புமாமுனி.

ப்ராஹ்மணருக்கும் ப்ராஹ்மணத்திக்கும் களவில் பிறந்தவன் **சூருதிமான்.** இவனுக்குத் தொழில் வனாந்திரத்தில் உழுதுண்ணக் கடவான்.

மலைதாங்கிக்கும் பொற்பனங்கிக்கும் யிவாயிவாகத்தில்[2] பிறந்தவன் **வலையன்.** இவனுக்கு தொழில் ஆயுத (சில)ம்பல்களும் செய்து, ஊர்களுக்கு காவலுங் காத்துச் சோழனுக்கு பெண்ணுங் குடுக்க கடவான்.

பள்ளிக்கும் எடைச்சிக்கும் பிறந்தவன் . . . . இவனுக்குத் தொழில் யிராசாக்களை சேவிக்க கடவான்.

சூத்திரனுக்கும் கொழுவஞ்சியனுடைய தாதிக்கும் களவில் பிறந்தவன் **வஞ்சினாடன்.** இவனுக்குத் தொழில் புன் படுவு(?) விக்ககடவன். மலைதாங்கியிடத்தில் குடியிருக்க கடவான்.

---

1. இட்டிகை - செங்கல்
2. விவாகத்தில் என்று படிக்கலாம்

சூத்திரனுக்கும் சூத்திர தாதிக்கும் களவில் பிறந்தவன் **பரிதலத்தான்.** இவனுக்குத் தொழில் இராசாக்களை சேவிக்க கடவான். இவர்கள் பெண்டுகளும் யிராசாக்களை சேவிக்க கடவான். இவர்களுக்கு தேவதை அருக பரமேஸ்வற்.

அரசுபள்ளிக்கும் கள்ளிச்சிக்கும் களவில் பிறந்தவன் **கொஞ்சித் தறி நெயும் சோழிப்பள்ளி.** இவனுக்குத் தொழில் பிடவையும் நெசு விற்று, ஊற்குப் பிறம்பே குடியிருக்க கடவான்.

சோழியப் பள்ளிக்கும் யிவனுடைய ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் **சொல்வலை கொண்டு மீன்பிடிக்குஞ் சோழியப் பள்ளி.** இவனுக்கு தொழில் மீன்பிடித்து வித்து யிருக்க கடவான்.

சோழியப்பள்ளிக்கும் யிவனுட ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் **சிவன்படப்பள்ளி.** இவனுக்குத் தொழில் மீன் பிடித்து வித்து, ப்ரதிலோமர் பதினேழு பேருக்கு சவம் புறமடக்க கடவான்.

சிவன்படப்பள்ளிக்கும் சிவன் படத்திக்கும் களவில் பிறந்தவன் **கோயிலங்காடி.** இவர்களுக்குத் தொழில் மீன்பிடித்து, வித்து, உலத்தி கடையி லிருக்க கடவான். இவர்களுக்கு தேவதை **மகா சாஸ்தா.** யிவர்கள் ஊருக்குப் புறம்பே இருபதின்கோல்த் தறை யிடம் விட்டு, கீழ் பார்சத்திலே குடியிருக்க கடவார்கள்.

மறவனுக்கும கள்ளிச்சிக்கும் களவில் பிறந்தவன் **பச்சைனாடன்.** இவனுக்குத் தொழில் வனாந்தரத்திலே பயிர்செய்து, வனாந்தரத்திலே குடியிருக்க கடவர்களாகவும், இவர்களுக்கு **தேவதை வயிரவன்.**

பேசாவங்கிஷப் பிராமணிக்கும் மாறகண்டயருக்கும் பிறந்தவன் **கன்னடியச் சேணியன்.** இவனுக்குத் தொழில் ஈஸ்வர பத்தி மாயை சிவலிங்காற்சனையும் பண்ணி மறச மாங்கஷமும் துறந்து, னாயமாருக்கு திருப்பரிவட்டமும் நெசு . . . , தேவர் கோயிலுக்கு அருகே குடியிருக்க கடவான்.

சாலியனுக்கும் தாதவற்திக்கும் களவில் பிறந்தவன் **சேடன்.** இவனுக்கு தொழில் பிடவை நெசு, வித்து, ஊருக்குப் புறம்பே னாற்பதின் கோல்த் தறை யிடம்விட்டு, கிழ பார்சத்திலே குடியிருக்க கடவான்.

மறவனுக்கும் காளிச்சிக்கும் களவில் பிறந்தவன் **பச்சைனாடன்.** இவனுக்குத் தொழில் வனாந்தரத்திலே பயிர் செய்து, வனாந்தரத்திலே குடியிருக்க கடவர்களாகவும். இவர்களுக்கு தேவதை வயிரவன்.

பேசா வங்கிஷப் பிராமணிக்கும் மாற்கண்டயருக்கும் பிறந்தவன் **கன்னடியச்சேணியன்.** இவனுக்குத் தொழில் ஈஸ்வர பத்தி, மாயை சிவலிங்காற்சனையும் பண்ணி, மறசமாங்கஷமும் துறந்து னாயமாருக்கு திருப்பரி வட்டமும் நெசு, இவன் தேவகோயிலுக்கு அருகே குடியிருக்க கடவான்.

சாலிய்னுக்கும் தாதவற்திக்கும் களவில் பிறந்தவன் **சேடன்** இவனுக்கு தொழில் பிடவை நெசு, வித்து ஊருக்குப் புறம்பே னாற்பதின் கோல்த் தறையிடம் விட்டு, கிழ பார்சத்திலே குடியிருக்க கடவான். யிராமேறும் பச்சைனாடற்கும் குவளை கிழவர் கிழத்திக்கும் களவில் பிறந்தவன் கோலக்குறிஞ்சி னாடன்.

கோலக்குறிஞ்சினாடனுக்கும் கயிலகுல காறிச்சிக்கும் களவில் பிறந்தவன் மலைகுறிஞ்சினாடன். இவர்களுக்கு தொழில் மலையிட்த்தில் பயிர்செய்து குடியிருக்க கடவான். இவர்களுக்கு தேவதை காடுளம . . ன்.

அரசு பள்ளிக்கும் சிவ்ன படத்திக்கும் களவில் பிறந்தவன் **மற்குலன்.** இவனுக்கு தொழில் சுண்ணாம்பு வித்து, கோயில்களுக்கு நீறும் வித்து, ஊர்க்கும் (ப)ாடி காவலுங் காற்க்க கடவான். ஊர்க்கு புறம்பே யிருபதுகோல்த் தறையிடம் விட்டு குடியிருக்க கடவான்.

வலையனுக்கும் வலைச்சிக்கும் களவில் பிறந்தவன் **தொறுவாளன்.** இவனுக்கு தொழில் வில்லுஞ் சாதித்து வனாந்திரத்தில் குடியிருக்க கடவன். இவனுக்கு தேவதை அய்யனார்.

அம்பட்டனுக்கும் க்ஷத்திய அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் . . . . இவனுக்கு தொழில் சூத்திரருக்கும் விளிம்பருக்கும் யிருபத்துமூன்று சாதிவன்னத்தாற்கும்[1] "கீழ்பட்ட இவர்கள் ஒழிய இவர்கள் துடக்கும். தீண்(டி) முள்ளும் வாங்கி, பவனம் பண்ணி, ப்ராஹ்மணனுக்கு னாபிக்கி கீழ், பவனம் பண்ணி,

1. இருபத்து மூன்று சாதி வன்னத்தார் - 23 சாதி பிரிவுகள்

ஊருக்கு பிறம்பே இருபதுகோல்த் தறை யிடம்விட்டு, கீழ் பார் சத்திலே குடியு மிருந்து, சூத்திரருக்கும் அனுலோமர் யிருபத்து மூவற்கும் நலந்திங்குப் பரிவட்டமுஞ் சூடி மாசான பூமிக்கு நீர்க் கொடமும் கொண்டுபோய், விதின் சடங்கும்[1] செய்து, மந்தனாள் பாலும் நெய்யும் தெளிக்க கடவான்.

மனுகூலனுக்கும் மனுகூலனுடைய தாசிக்கும் களவில் பிறந் தவன் - கட்டிகருமான். யிவனுக்குத் தொழில் மணலு ‍ கரியுங் கொண்டும் குலம்[2] யிழைக்க கடவான். இவன் கட்டிக் கருமான். யிவனுக்குத் தொழில் மணலுங் கரியுங் கொண்டும் யிழைக்க கட வான். இவன் ஊர்க்குப் புறம்பே னூறுகோல்த் தறை யிடம்விட்டு குடியிருக்க கடவான்.

தச்சனுக்கும் கலிச்சிக்கும் களவில் பிறந்தவன் மரவன். யிவனுக்குத் தொழி மரக்கால், னாழி முதலானவை பணிவித்து திரியக் கடவான். கட்டிகருமானுக்கு கிழக்கே குடியிருக்க கடவான். இவர்களுக்குத் தேவதை க்ஷேத்ரபாலன்.

சாலியனுக்கும் சூத்திர அமங்கலிக்கும்களவில் பிறந்தவன் ஈரங்கொல்லி. யிவனுக்குத் தொழில் தேவாலையங்களுக்கு பரிவட்டமுங் கழுவி, பிராமணருக்கும், க்ஷத்திரியருக்கும், வைசிய சூத்திரருக்கும், அனிலோமற்க்கும் அழுக்கும் ஒலத்தி, யிவர்கள் கையில் குடுக்க கடவார்களாகவும் யிவர்கள் தேவர் கோவிலுக்கும், திருமடவிளாகங்களுக்கும் மேற்கே னாற்பதின் கோலடித் தறை யிடம்விட்டு குடியிருக்க கடவான்.

ப்ராஹ்மணனுக்கும் சூத்திர கன்னிகைக்கும் களவில் பிறந்தவன் ஆனைப்பாகன், தேர்ப்பாகன். இவர்களிருவரும் உடன்பிறந் தவர்கள். இவர்களுக்குத் தொழில் இராசாக்களுக்கு தேர் ஒட்டவும் கடவான். ஆனைப்பாகன் ஆனையேத்தவும் கடவான்.

சாலியனுக்கும் வைஸ்ய அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் மாலைகாரன். இவனுக்குத் தொழில்ப் பூந்தோட்டம் பயிர்செய்து

---

1. விதின் சடங்கு - விதிச் சட்ங்கு; விதிகளின்படி செய்யப்படும் சடங்கு
2. குலம் - மூங்கில்

நலந்திங்கு[1] படவட்டஞ்[2] சூடி, அனிலோமர் இருபத்து மூவற்கும் பரிவட்டமும் சூட்டக் கடவான். நகரங்களிலும் கிழக்கே குடியிருக்க கடவான்.

சூத்திரனுக்கும் மாலைக்காறச்சிக்கும் களவில் பிறந்தவன் **குவளைக் கிழவன்**. இவனுக்குத் தொழில் யீஞ்சனாட்டிக் கொடி ஒழுக்குக்குக் கடவான்-வுரகாணி

சூத்திரனுக்கும் க்ஷத்திரிய அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **யிஞ்சனும் நீர்காப்பானும்**. யிவர்களில் யீஞ்சன் செய்யுந்தொழில் சூதரம்(பு)முதி[3] வயல் காத்து திரியக் கடவான். நீர் அளப்பான் செய்யுந் தொழில் ஓடமும் தாழியும் விட்டு, குறம்பும் கொள்ளக் கடவான். யிவர்கள் ஊருக்கு புறம்பே அன்னூறுகோல்த் தறை யிடம்விட்டு, கீழ் பார்சத்திலே குடியிருக்க கடவான்.

சூத்திரனுக்கும் வைஸ்ய சுமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **வியாபாரி** இவனுக்குத் தொழில் பாக்கு மிளகு வித்துச் சவரியும் வித்து யிருக்க கடவான் ஆலயம் புகப் பெறான். யிவர்களுக்கு தேவதை உத்தமாகாளி.

சூத்திரனுக்கும் . . . . களவில் பிறந்தவன் **செக்கான்**. இவனுக்குத் தொழில் செக்காடி, எண்ணையும் வித்து, பிண்ணாக்கும் வித்து, உச்சிக்கும் பின், ஊர் புகக்கடவான். அல்லர் யிவர் கிராமங்களுக்குப் புறம்பே யிருனூறு கோல்த்தறை யிடம்விட்டு, குடியிருக்க கடவான். விஸ்வகற்மாவை ஏழு செங்கல்ப்போட்டு, ஏழு கல்ப்போட்டு, சிவிகையும் தாங்கக் கடவான். இவனுக்கு தேவதை . மாகாளி. வாணியனுக்கும் வாணிச்சிக்கும் களவில் பிறந்தவன் **கோட்டை படையிலான்**. இவனுக்குத் தொழில் கடையிலிருந்து பாக்கு வித்து, வெத்திலை வித்துப் பிடாரி திருனாள்க்கு காவல் காற்க்க கடவான். யிவர்களுக்கு தேவதை காளி.

---

1. நலந்திங்கு – நலந்தங்கு
2. படவட்டம் – பரிவட்டம்
3. சூத்ரம் (பு)முகி – சூத்திரம் ஒழுகுதல்; தந்திரமாக இருத்தல்

சூத்திரனுக்கும் . . . . களவில் பிறந்தவன் **வண்ணான்.** இவனுக்குத் தொழில் விளிம்பனுக்கும் மேல்பட்ட சாதிவன்னத் தாருக்கு துடக்கு பிடவை அழுக்கு புழுக்கி வாங்கி வலித்து ஈரங்கொல்லி கையிலே குடுக்க கடவான். யிவன் நலந்திங்கு பரிவட்டஞ் சூடி, ஊருக்குப் புறம்பே எண்பதிள் கோல்த்தறை யிடம்விட்டு கீழ் பார்சத்திலே குடியிருக்க கடவான்.

க்ஷத்திரியனுக்கும் . . . களவில் பிறந்தவன் **வேட்டைக் காறன்.** இவனுக்கு தொழில் ராசாக்களுக்கு மிறுகவேட்டை காட்டக் கடவான்.

வேட்டைக்காரனுக்கும் வேட்டைக்காறிச்சிக்கும் களவில் பிறந்த **வனக்காறன்.** யிவனுக்குத் தொழில் கலைதிவிகம்[1] கொண்டு, கண்ணி விளம்பி, மான் பிடித்துத் திரியக் கடவான். யிவன் ஊருக்கு புறம்பே னூற்றன்பது கோல்த்தறையிலே யிருந்து, யிராசாக்களுக்கு வேட்டை காட்டக் கடவான்.

வேட்டைக்காறனுக்கும் கலைகாறிச்சிக்கும் களவில் பிறந்தவன் **பீலிகாறன்.** யிவனுக்குத் தொழில் புலிதீவங்[2] கொண்டு, மலைக் கொட்டி பண்ணியபடி யுரம் கட்டி, சூபும்[3] பிடித்துப், புலியு மெற்றி, மிருகம் பிடித்து, யிராசாக்களுக்குக் காட்டி யிருக்க கடவான். யிவன் ஊருக்கு புறம்பே னூறுகோல்ந் தறை யிடம்விட்டு குடியிருக்க கடவான்.

புலிகாறிச்சிக்கும் கலைகாறனுக்கும் களவில் பிறந்தவன் **கண்ணிக்காறன்.** யிவன் வாரும் வலையு மிட்டுகொண்டு, வொழிக்கக் கண்ணியு விட்டு, யிராசாக்கள் வேட்டை ஆடுமிடத்து மிருகங்கள் சேத்துக்காட்டக் கடவான். யிவன் ஊருக்குப் புறம்பே னூத்துத் தொண்ணூறுகோல்த் தறை யிடம்விட்டு, குடியிருக்க கடவான்.

---

1. கலைதிவிகம் – கலை தீபம் – ஒரு வகை விளக்கு
2. புலிதீபம் – ஒரு வகை விளக்கு
3. சூபம் – அம்பு

களவில் பிறந்தவன் **வேடன்** யிவனுக்குத் தொழில் சிலையும்[1] சாதித்து, யிராசாக்களைச் சேவித்து, வரையிடத்திலே குடியிருக்க கடவான்.

வேட்டைகாரனுக்கும் வேட்டைகாரன் ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் **புனவேடன்.** யிவனுக்குத் தொழில் வரையிடத்தில் குடியிருந்து யிராச் சேர்வையும் பண்ணக் கடவான்.

வேடனுக்கும் புல்வேடிச்சிக்கும் களவில் பிறந்தவன் **புல்வேடன்.** யிவனுக்குத் தொழில் வரையிடத்தில் குடியுமிருந்து புன(ங்)களில் சீவிக்க கடவான்.

புல்வேடனுக்கும் புல்வேடிச்சிக்கும் களவில் பிறந்தவன் **குன்ற வேடன்.** யிவனுக்கு தொழில் சீலையுஞ் சாதித்து, வரையிடத்தில் கண்ணேணி சாத்திப் பெருந்தேன் அழித்து, வித்துத் திரியக் கடவான். வரையிடத்தில்[2] குடியிருக்க கடவான்.

குன்றவேடனுக்கும் திருவேடிச்சிக்கும் களவில் பிறந்தவன் **கானவேடுவன்** யிவனுக்குத் தொழில் சீலையுந்[3] சாதித்து, வரையிடத்தில் குடியிருக்க கடவான்.

திருவேடனுக்கும் கானவேடிச்சிக்கும் களவில் பிறந்தவன் **கண்ணுரை குறிஞ்சிவேடன்.** இவனுக்குத் தொழில் கானகத்தில் குடியிருந்து பயிர் செய்ய கடவான். இவர்களுக்கு தேவதை.

திருக்கணப் ...... ......வைசிய அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **முக்கோரையான்.** யிவனுக்குத் தொழில் சீலையுஞ், சாதித்து, யிராசாக்களை சேவித்து, யிவர்கள் வன நடுவிடத்தில் குடியிருக்க கடவான். யிவன் பாடிகாவல் காற்க்க கடவான்.

முத்திரையனுக்கும் யிவனுடைய ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் ...**க்குட்டி முத்திரையன்.** இவர்களுக்கு தொழில் வரையிடத்தில் குடியிருந்து, பயிர் செய்து, வழித்துணையும் போகக் கடவான்.

---

1. சிலை – வில்
2. வரை - மலை
3. சிலை என்பதே சீலை என்று பிழையாக எழுதப்பட்டுள்ளது.

குடை எடுப்பானுக்கும் யிவனுடைய ஶ்ரீக்கும் களவில் பிறந்தவன் **ஒத்தன்**. இவனுக்குத் தொழில் மூங்கில் வித்து சீவிக்க கடவான். யிவன் ஊருக்கு பிறம்பே குடியிருக்கக் கடவான்.

ஒத்தனுக்கும் ஒத்தனுடைய தாதிக்கும் களவில் பிறந்தவன் **உடுக்கன்**. யிவனுக்குத் தொழில், பிறதிலோமமற்கும் சிவிகையுந் தாங்கி மீனும் பிடித்து விக்க கடவான். யிவன் ஊருக்குப் புறம்பே முன்னூறுகோல்த் தறையிடம் விட்டு குடியிருக்க கடவான். இவர்களுக்கு தேவதை மயிலார் தேவதை.

கோயிலங்காடிக்கும் கோயிலங்காடிச்சிக்கும் களவில் பிறந்தவன் **புனத்தி**. யிவனுக்குத் தொழில் பயிர்செய்து, பாத்துடி[1] காவலுங் காத்து, ஊருக்கு புறம்பே கயிகடி[2] யிருக்க கடவான்.

**மயிலாடி**. யிவனுக்கு தொழில்.

மயிலாடிக்கும் வேட்டைக்காறிச்சிக்கும் களவில் பிறந்தவன் **குலுங்கன்**. யிவனுக்குத் தொழில் வனாந்திரம் வெட்டி, சுட்டிப் பருவப்[3] பயிர் செய்து குடியிருக்க கடவான்.

யிடையனுக்கும் வைசிய ஶ்ரீக்கும் களவில் பிறந்தவன் **ஊராளி**. இவனுக்குத் தொழில் (உ)யிர்களும் காத்து பயிருஞ் செய்து, சீலையும் சாதிக்க கடவான். யிவன் ஊருக்கு புறம்பே அறுபது கோல்த் தறை யிடம்விட்டு குடியிருக்க கடவான்.

சூனிமானிக்கும் ஊராளிச்சிக்கும் களவில் பிறந்தவன் **காலுவனும் புலவனும்**. யிவர்களுக்குத் தொழில் நகரியிலே சேவித்து, மலையிடத்திலே குடியிருக்க கடவான். **புலுவன்** நிலப் பட்டுடை நெயக் கடவான். கிராமங்களுக்கு பிறம்பே னூறுகோல்த் தறை யிடம்விட்டு குடியிருக்க கடவான்.

குலுங்கனும் கணிச்சிக்கும் களவில் பிறந்தவன் **தகுலன்**.

---

1. பாத்துடி - பாடி - ஊர்
2. புறம்பேகி குடியிருக்க என்று படிக்கலாம்
3. வனாந்திரம் வெட்டி, கட்டி, பருவப் பயிர் என்று படிக்கலாம்.

ஊராளிக்கும் சூனிமாட்டிச்சிக்கும் களவில் பிறந்தவன் தமிலன். யிவர்களிருவரும் செய்யுந் தொழில், சமுத்திர கரையிலே குடியிருந்து, சமுத்திரத்தில் தமிலும் வலையும் விட்டு, மீன் பிடிக்க கடவான்.

சூந்திரனுக்கும் சூத்திர அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் . . . . யிவனுக்குத் தொழில் பனையும் தென்னமரம் ஏறியும் பாளையறுத்து, மட்டை யிட்டு, தரை வாங்கி சிவிக்க கடவான். யிவன் ஊருக்கு புறம்பே ஹாறுகோல்த் தறை யிடம்விட்டு குடியிருக்க கடவான்.

பள்ளிக்கும் எடைச்சிக்கும் களவில் பிறந்தவன் . . . . இவனுக்குத் தொழில் யிராசாக்களை சேவித்துப் பயிரும் செய்யக் கடவான்.

கள்ளனுக்கும் கள்ளச்சிக்கும் களவில் பிறந்தவன் . . . . இவனுக்குத் தொழில் யிராசாக்களை சேவித்து, வனாந்தரத்திலே குடியிருக்க கடவான்.

யிவனுக்கும் கள்ளச்சிக்கும் களவில் பிறந்தவன் பொருந்தன். யிவனுக்கு தொழில் களகு முற முடைந்து, ஊருக்குப் புறம்பே ஹாற்றிருபது கோல்த் தறை யிடம்விட்டு, குடியிருக்க கடவான்.

எடையனுக்கும் கண்மாளச்சிக்கும் களவில் பிறந்தவன் சரபாதி. யிவனுக்குத் தொழில் அனிலோமற் யிருபத்து மூவற்கும் சிவிகை தாங்கக் கடவான்.

கா.பரகிக்கும் யிடைச்சிக்கும் புனத்திக்கும் களவில் பிறந்தவன் குடை(ட) எடுப்பான். இவனுக்குத் தொழில் குடை எடுத்து கிழகண்டர் தொழுலும் செய்யக்கடவான்.

விளிம்பனுக்கும் சூத்திர கன்னிகைக்கும் களவில் பிறந்தவன் அளவன் - ஹுளையன். யிவனுக்குத் தொழில் உப்பு வளைந்து வித்து, வயல் வன்னப் பயிர்[1] செய்து, கழிக்கரையிலே குடியிருக்க கடவான்.

---

1. வன்னப்பயிர் – வனப் பயிர் – காட்டுப் பயிர்கள்

னுளையனுக்கும் வலைச்சிக்கும் களவில் பிறந்தவன் கடலுளவர், பாதைகாறர். யிவர்களுக்குத் தொழில் சமுத்திரக் கரையில் குடியிருந்து பாலை விட்டு, மீன் பிடிக்க கடவால்.

சங்கறுப்பானுக்கும் கச்சிக்கும் களவில் பிறந்தவன் முக்குவன். யிவனுக்குத் தொழில் முத்துக்குளித்து திரியக் கடவான்.

முக்குவனுக்கும் யிவனுடைய ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் மூத்றதாயனான். யிவனுக்குத் தொழில் முத்துத . . ளையிடக் கடவான். யிவர்கள் புரங்களில் குடியிருக்க கடவான்.

காற்றுவனுக்கும் அவனுடைய ஸ்ரீக்கும் களவில் பிறந்தவன் பட்டணவன் கழியன். இவனுக்குத் தொழில் கழியும் நெய்து, சமுத்திரக் கரையில் குடியுமிருந்து கழியில் மீனும் பிடிக்கக் கடவான்.

பட்டணவனுக்கும் எடைச்சிக்கும் களவில் பிறந்தவன் கழியன். யிவனுக்குத் தொழில் பட்டணக் கரையிலே கழியில் மீன் பிடிக்க குடியிருக்கக் கடவான்.

மூக்குவனுக்கும் கழிச்சிச்கும் களவில் பிறந்தவன் பரம்பன். யிவனுக்குத் தொழில் கழியில் மீன் பிடித்து, வித்துத் திரியக் கடவான்.

வைசியனுக்கும் சங்கறுப்பாணிக்கும் களவில் பிறந்தவன் கவறை. யிவனுக்குத் தொழில் பித்தளை யுள்ளிட்ட சரக்கு வித்து எடுத்து வியாபாரம் பண்ணக் கடவ்ான்.

வைசியனுக்கும் வைசிய கொழுவஞ்சிய தாதிக்கும் களவில் பிறந்தவன் கரைமகுடன். பிவனுக்குத் தொழில் ப(ா)று, படகு, சொங்கு, கப்பல், மாயவல்லி யிவை யோட்டி சமுத்திரக் கரையில் குடியிருக்கக் கடவான்.

கரையானுக்கு மாலுமி தாதி (வ)யத்தில் செனித்தவன் சோனகன். இவனுக்குத் தொழில் பாறுபடவும் ஒட்டி, வில்லும் எடுத்து, பட்டணக் கரையில் குடியிருக்கக் கடவான்.

பள்ளிக்கும் பள்ளிச்சிக்கும் அவ்வளவு கன்னிகைக்கும் களவில் பிறந்தவன் குழையன். யிவனுக்குத் தொழில் பாடிகாவல் காத்து குடுத்து, புறமும் மடக்கக் கடவான். ஊருக்குப் புறம்பே குடியிருக்கக் கடவான்.

மால்காறனுக்கும் தொட்டி அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **வட்டலவார்.** யிவனுக்குத் தொழில் பலசரக்கு வித்து திரியக் கடவான்.

வைசியனுக்கும் சூத்திர தாதிக்கும் களவில் பிறநதவன **தாசுவன்.** இவனுக்கு தொழில் பிடவை நெய்து, பட்டணக் கரையில் நகரியிலும் குடியிருக்கக் கடவான்.

விளிம்பனுக்கும் சேணியத் தாதிக்கும் களவில் பிறந்தவன் **உறைகாரன்.** யிவனுக்கு மெல்லடி வறக்கோலால் பலசமமைத்துக்,[1] கடைப்பிறத்தில் குடியிருக்கக் கடவான்.

சங்கறுப்பானுக்கும் சாலாச்சிக்கும் களவில் பிறந்தவன் **உறைகாறன்.** யினுைக்கு மெல்லடி வறக்கோலால் பலவறை சமைத்து[2]...

**வடுகச் சேணியன்.** யிவனுக்குத் தொழில் னூல் கொண்டு கழியும் நெய்து ஊருக்கு புறம்பே பன்னிருகோல்த் தறை யிடம் விட்டு குடியிருக்கக் கடவான்.

யிடையனுக்கும் குச விதவைக்கும் களவில் பிறந்தவன் **தயில குலைகாறன்.** யிவனுக்குத் தொழில் ஆடுக்மு ...... கடை புறத்தில் குடியிருக்கக் கடவான்.

தச்சனுக்கும் கணிச்சிக்கும் களவில் பிறந்தவன . . . . யிவனுக்குத் தொழில் மரக்கல ணாழி முதலானவை கடைவித்து, ஊருக்கு புறம்பே குடியிருக்க கடவார்கள்.

---

1. ஓலையில் முடிவுறாது உளது.
2. பலசம் – நகரவாயில்

பள்ளிக்கும் பள்ளிச்சிக்கும் அவளவ கன்னிகைக்கும் களவில் பிறந்தவன் **குழையன்**. யிவனுக்குத் தொழில் பாடிகாவல் காத்து குடுத்து, புறமும் மடக்கக் கடவான். ஊருக்குப் புறம்பே குடியிருக்கக் கடவான்.

மாலைகாறனுக்கும் தொட்டி அமங்கலிக்கும் களவில் பிறந்தவன் **வட்டலவார்**. யிவனுக்குத் தொழில் பலசரக்கு வித்து திரியக் கடவான்.

வைசியனுக்கும் சூத்திர தாதிக்கும் களவில் பிறந்தவன் **தாசுவன்**. இவனுக்கு தொழில் பிடவை நெய்து, பட்டணக் கரையில் நகரியிலும் குடியிருக்கக் கடவான்.

விளிம்பனுக்கும் சேணியத் தாதிக்கும் களவில் பிறந்தவன் **உறைகாரன்**. யிவனுக்கு மெல்லடி வறக்கோலால் பலசமமைத்துக்,[1] கடைப்பிறத்தில் குடியிருக்கக் கடவான்.

சங்கறுப்பானுக்கும் சாலாச்சிக்கும் களவில் பிறந்தவன் **உறைகாறன்**. யிவனுக்கு மெல்லடி வறக்கோலால் பலவறை சமைத்து[2]...

**வடுகச் சேணியன்**. யிவனுக்குத் தொழில் னூல் கொண்டு கழியும் நெய்து ஊருக்கு புறம்பே பன்னிருகோல்த் தறை யிடம் விட்டு குடியிருக்கக் கடவான்.

யிடையனுக்கும் குச விதவைக்கும் களவில் பிறந்தவன் **தயில குலைகாறன்**. யிவனுக்குத் தொழில் ஆடுகமு ...... கடை புறத்தில் குடியிருக்கக் கடவான்.

தச்சனுக்கும் கணிச்சிக்கும் களவில் பிறந்தவன் .... யிவனுக்குத் தொழில் மரக்கல னாழி முதலானவை கடைவித்து, ஊருக்கு புறம்பே குடியிருக்க கடவார்கள்.

---

1. ஓலையில் முடிவுறாது உளது.
2. பலசம் – நகரவாயில்

யிருளனுக்கும் யிருளச்சிக்கும் களவில் பிறந்தவன் மலைக் குறவன். யிவனுக்குத் தொழில் மலைப்பிறத்திலே குடியுமிருந்து உறிகயிறும் வித்துத் திரியக் கடவான்.

ஆயிலியனுக்கும் சுருதிமான தாசிக்கும் களவில் பிறந்தவன் . . . . யிவனுக்குக் தொழில் செருப்புங் கட்டி, முனுக(ால்) கொண்ட பந்தலிட்டு குடியிருக்க கடவான்.

. . . களவில் பிறந்தவன் குறவன். யிவன் கன்னி கொண்டு குருவி பிடிச்சு திரியக் கடவான்.

கிழாயனுக்கும் சக்கிலிச்சிக்கும் களவில் பிறந்தவன் பாணன் குழலன். யிவர்கள் தண்டிகை யேந்தி பாடக் கடவான்.

வைஸ்யனுக்கும் விதவைக்கும் களவில் பிறந்தவன் துன்னன், பதங்கன். யிவர்களுக்குத் தொழில் பிடவையுந் தைச்சு, நலங்கு பரிவட்டமுங் கட்டி ஊருக்கு புறம்பே முன்னூறு கோல்த்துறை யிடம்விட்டு, குடியிருக்கக் கடவான்.

பவியன், பவ்வியன்; யிவர்களுக்குத் தொழில் சமுத்திரத்தில் கயறு வலிச்சு திரியக் கடவன். முன்னூறுகோல்த் தறை யிடம் விட்டு குடியிருக்கக் கடவான்.

பிராமண அமங்கலிக்கும் அம்பட்டனுக்கும் களவில் பிறந்தவன் சல்லியன் யிவனுக்குத் தொழில் சல்லஸ்கிரியை பண்ணக் கடவான்.

சக்கிலியுனுக்கும் ........ களவில் பிறந்தவன் வங்காளன். இவனுக்குத் தொழில் செக்கான் கெருகம் பிடித்துத் திரியக் கடவான். ......... கிழக்கே குடியிருக்கக் கடவான்.

கன்மாளனுக்கும் கணிச்சிக்கும் களவில் பிறந்தவன் கணியன். இவனுக்குத் தொழில் கவிகையும் பாடி கீழ்மையுடையான் சொன்னாளும் முகுர்த்தமுஞ் சொல்லக் கடவான்.

திமிலனுக்கும் திமிலச்சிக்கும் களவில் பிறந்தவன் நுளையன். இவனுக்குத் தொழில் சமுத்திரத்தில் வலை போட்டு, மீன் பிடிக்கக் கடவான்.

குறவனுக்கும் குறத்திக்கும் களவில் பிறந்தவன் குரவன். இவனுக்குத் தொழில் புல்வேர்க் கட்டி, கண்ணி குத்தி. உள்ளான் பிடிக்கக் கடவான்.

சீழாயனுக்கும் குளுவிச்சிக்கும் களவில் பிறந்தவன் தும்பண். இவனுக்குத் தொழில், தாழை யிலைகட்டி, குடிளைக் கட்டித்தன் பெண்டுகளும் தேடி உண்ணக் கடவார்கள்.

கன்மாளறும் கன்னானுக்கும் மாலுமிச்சி தாதி வயத்தில் செனித்த வன்கறைத் தறிநெய்வான். இவனுக்கும் யிவனுடைய ஸ்ரீக்கும் களவில்

(இதன் பின் சுவடிக் கட்டில் ஏடு இலது)



# புதுவை இடங்கை வலங்கைச் சாதியர் வரலாறு

கொடி போட்ட பிறகு மகா ஸ்ரீ முசெபொலொ துரைத்தனத்திலே என் மக்களுக்கு கலியாணம் பண்ணபோது, ஒரு விகாதமுமில்லாமல் சவளக் கழி பிடித்து ஊர்கோலம் வந்தோம். இதல்லாமல் மகா ஸ்ரீ மூசேலா அவர்கள் நாளயிலே என் மக்கள் கலியாணமும் முகிந் தன்றைக்கே வள்ளிபட்டாசாரி மச்சானுக்குக் கலியாணம் பண்ணி ஊர்கோலம் வந்தபோது, சவளக்கழி பிடித்து வந்தார்கள். விகாதம்[1] நடந்ததில்லை. வேறே கலியாணம் செய்ததுண்டு; யெனக்கு ஞாபக மில்லை சொன்னார்.

இடங்கையாருக்குள்ளே வெள்ளைக் குடை பிடிக்கவும், வெள்ளைக் குதிரை அஞ்சு செம்பு ஆருக்கு சுதந்திர மென்று கேட்டத்துக்கு வெள்ளைக் குடையும் வெள்ளைக் குதிரையும் செட்டிகளுக்கு சுதந்திர மில்லை.

இந்த ஊரிலே கம்மாலருக்கு வெள்ளைக் குடை பிடிக்கிறதுண்டு. ஒரு கலியாணத்தில் சாலர்[2] கட்டின வெள்ளைக் குடை பிடிக்கிறதுண்டு, மதையும் கண்டேன். இன்னார் கலியாண மென்று எனக்கு யாதியில்லை. குமின் என்ன வருணமா யிருந்ததோ அதுவும் யாதியில்லை.

அஞ்சு செம்பு கம்மாளருக்கு விகாத மில்லாமல் நடந்து வந்தது. செட்டிகளுக்குண்டா வென்று கேட்டத்துக்கு, ''சாயுச்சியக் காரருக்குண்டு; அது அவர்கள் கட்டினதும் கட்டாததும் நான் பார்த்ததில்லை'! யென்று சொன்னார்.

வலங்கையாருக்குள்ளே சவளக்கழி பிடிக்கவும் வெள்ளைக் கொடை பிடிக்கவும் வெள்ளைக்குதிரை ஏரவும் அஞ்சு செம்பு கட்டவும் ஆருக்கு சுதந்திர மென்று கேட்டதற்கு, ''அவர்களுக்கு

---

1. விகாதம் – பூசல்
2. சாலர் – சலங்கை

நடந்து வந்தது கண்டிருக்கிறேன்; அவர்களுக்கு சுதந்தர முண்டென்கிறதும் சுதந்தரமில்லை யென்கிறதும் அவர்களுக்குத் தெரிய வேண்டியது. இடங்கையார் விகாதம் பண்ணதில்லை'' யென்று சொன்னார்.

மேல் சொன்னதெல்லாம் ருசுப்படுத்த உம்மாலே கூடுமாவென்று கேட்டத்துக்கு, ''இப்போது நான் சொன்னதே ருசு'' வென்று சொன்னார்.

தெலுங்கில் அப்பண்ண பத்தனென்று கையெழுத்து. பிறாஞ்சு பாஷையில் லாசுலோறிசத்தோம் குரிசி செப்ஸ்தி மைனாத்துடபனால், என்று கையெழுத்து.

இந்த வாக்குமூலம் எழுதின நன்மைக்கு சவரிராய நயசவியப்பன் ஊர் கணக்கு யென்று கையெழுத்து.

ஆயிரத்தி எழுநூத்தி எழுபத்தாராமாண்டு நொவெம்பர் மாதம் 29ஆம் தேதி புதுச்சேரிப் பட்டணம் பிராங்சு ராசாதிபதி காரியத்துக்குக் கர்த்தரான மகாராய ராயமானிய றாய சிம்மு செலாசு அவர்கள் ராயமான்னிய ராயசிநிந்தாதாம் அவர்கள் மகாஸ்ரீ முசெபனால் அவர்கள், கப்பீசகோவில் செகிய செபத்தியாமவர்கள், தமிழ் விசாரிப்பு வெரனத் துரையவர்கள், இவர்கள் சமுகத்தில் ராத்தழகப்ப செட்டி வாக்குமூலத்துக்கு நூசாதகம் விடுவா யென்று கேட்க, அவன் நயினாரை சாட்சி சொல்லுமிடத்தில், ''நயினாரை நீ ரறிந்ததென்ன?'' வென்று கேழ்க்க, 'நயினாத முத்தழகப்ப செட்டி சொன்ன காரியத்து நான் சாட்சி சொல்ல மாட்டேனென்று சொன்னார்,

இதுக் கசலில் திருவம்பல மென்று கையெழுத்து. பிறான்சில் கையொப்பம், லாசுலொரிஸ் தோக செபர்த்தியாம் வெரனெத்துபனால்.

இந்த வாக்குமூலம் எழுதின நன்மைக்கு ஊர் கணக்கு சவரிராய நயனியப்பனென்று கையெழுத்து.

இது அசலுக்கு சரி சவ்வாது.

இப்படிக்கி 1779 வருஷம் டிசம்பர் மாதம் 23ஆம் தேதி, புதுவை நகரம்,

*[இதன் பின் தாட்சுவடியில் வெற்றிடம் சிறிது விடப்பட்டுளது]*

அந்தக் கலியாண ஊர்கோலம் நடத்தினார்கள். மேல் சொன்ன தெல்லாம் உம்மாலே ருசுப்படுத்தக் கூடுமோ வென்று கேட்ட தற்கு, "வலங்கையாருக்கு உண்டென்கிறதுக்கு இந்தமட்டும் நடந்து வந்த காரியமே ருசு. இடங்கையர் தங்களுக்கு உண்டென்கிறதுக்கு அவர்களே ருசுப்படுத்த வேண்டுமென்று சொன்னார்.

முத்துமுதலி யென்று கையெழுத்து.

கோமுட்டு நாட்டாமை திருக்காமி செட்டி வாக்குமூலம்:-

முதலாவது, வலங்கையாருக்குள்ளே சவளக்கழி[1] பிடிக்கவும் வெள்ளைக்குடை பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏரவும், அஞ்சு செம்பு கட்டவும் யாருக்கு சுதந்திர முண்டென்று கேட்டதற்கு, "வெள்ளாளர், அகம்படியர், இடையர், கவரை, கோமுட்டி, கைக் கோளர், சேடர், சேணியர் இவர்கள் சவ்வுக்கழி[2] பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏரவும் சுதந்திரமுண்டு.

வண்ணார், அம்பட்டர் ............ இவர்களுக்கு சாலரில்லாத, வெள்ளைக்குடை, வெள்ளைக் குதிரையும் சுதந்திர முண்டு. அஞ்சு செம்பு தேர்கட்டி எடுக்கிறவர்களுக்குண்டெ"ன்று சொன்னார்.

(2) இடங்கையாருக்குள்ளே சவளக்கழி பிடிக்கவும், வெள்ளைக் குடை பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏரவும், அஞ்சு செம்பு கட்டுவது யாருக்கு சுதந்திர முண்டென்று (கேட்டதற்கு), சவளக் கழியும், வெள்ளைக் குதிரையும், இடங்கையாருக்கு (யாருக்கும்) சுதந்தரமில்லை. சாலரில்லாததுமாய், செகப்புக் குமின் போட்டது மாய், வெள்ளைக் குடை கம்மாளர் பிடித்துக்கொண்டு வருகிற துண்டு. அஞ்சு செம்பு கம்மாளர் கட்டி வருகிறதுண்டு ..... ... சச்சர(வு) பண்ணுவார்க ளென்று சொன்னார்.

(3) "ஊர் நன்றா யிருக்கச்சே இடங்கையார் பிடித்த தில்லையா?" வென்று கேட்டதற்கு, ஆதிவீர செட்டி கல்யாண

1. சவளக்கழி - ஈட்டி முனை கொண்ட தடி
2. சவ்வுக்கழி – சவளக்கழியும் சவ்வுக்கழியும் ஒன்றே

பந்தலிலிருந்து போய் மகா ஸ்ரீ முசெதிப் மா நாளையிலே பாளயக்காரர் முத்தி, பிள்ளைமகனை குதிரை மேலே வைத்து அந்தப் பிள்ளையை சவளக்காரத்தி வர, அந்த ஊர்கோலம் நடத்தினார்களென்று சொன்னார்.

"மேல் சொன்னதெல்லாம் உம்மாலே ருசுபடுத்தக் கூடுமா?" வென்று கேட்டதற்கு, "என்னாலே ருசுபடுத்தக் கூடும்" என்று சொன்னார்.

திருக்காமி செட்டியார். திருக்காமி செட்டி யென்று கையெழுத்து.

ஷெ தேதியில் கனகசபை முதலியார், குமாரசாமி முதலியார், நரசிம்ம செட்டியார், இவர்கள் மூணுபேரை அழைப்பித்து, தங்கசாலை அய்யனபத்தன் சொன்ன வாக்குமூலத்தில் மூணாம் பிரிவை வாசித்துபடி, அதிலே சொல்லப்பட்டது வில்லமணி பத்தன் கலியாணப் பந்தலிலேயும் சவளக்கழி விகாதமல்லாமல் பிடித்து வந்தார்கள் பாளயக்காரன் வீட்டுப்பிள்ளை வந்தது; நான் கண்டதில்லை. அய்யண்ணபத்தன் சொன்னத்துக்கு நீங்களென்ன சொல்லுகிறீர்களென்று கேழ்க்குமிடத்தில் அவன்போய் சொன்னது சொன்னார்கள்.

2வது முசேலரி நாளயிலே அய்யண்ணபத்தன் தன்மகன் கலியாணம் கொண்ட வேட்டி சீமையிலே கலியாணமானது மாப்பிள்ளையும் பெண்ணும் இந்த ஊருக்கு வரச்சே வெண்கொடி பிடித்து ஊர்கோலம் வந்தேனென்று சொன்னத்துக்கு நீங்களேன் சொல்லுகிறீர்களென்று கேட்டத்துக்கு, அப்படி.........கழிபிடித்து வந்ததாயிருக்கக் கூடாது. அதுக்கு அவன் கொடுக்க வேண்டியதென்று சொன்னார்கள்.

3வது கொடிபோட்ட பிறகு முசெபோலோ அவர்களாலே அய்யண்ண பத்தன் தன் மகளுக்கு கலியாணம் பண்ண சவளக்கழி விகாதமில்லாமல் பிடித்தேனென்று சொன்னத்துக்கு, நீங்கள் என்ன சொல்லுகிறீர்களென்று கேட்க அந்த நாளயிலே சவளக்கழி வெளியேயிருந்து அழைப்பித்து முஸ்திது பண்ணினார்கள்.

ஆகையினாலே அய்யண்ணபத்தன் தன்மகள் கலியாணத்துக்கு சவளக்கழி பிடித்தோ மென்று சொன்னது பொய்யென்று.

4 வள்ளிபட்டாசாரி கல்யாண சம்மதி வாசித்துக் கேட்டதற்கு, அப்போதும் சவளக்கழி யூரிலே இல்லை; அய்யண்ணபத்தன் சொன்னது பொய்யென்று சொன்னார். இதுக் கசலிலே அஞ்சு மொழி கிறுக்கப்பட்டிருக்கிறது எழுதியிருக்கிறது.

கனகசபை குமாரசாமி யென்று கையெழுத்து. குண்டுரகார சிம்மனென்று கையெழுத்து.

பிரான்சில்லாஸ் லொரிஸ்தோம். குரிசிசெஸ்தியாம். இந்த வாக்குமூலம் எழுதின நன்மைக்கு சவனியப்பன் ஊர்கணக்கென்று கையெழுத்து இருக்கிறது.

புதுவைமா நகரம் சாவடியூர் கணக்கு பிரதிக்கு சரிப்பிரதி.

இப்படிக்கு 1790 வருஷம் நொவெம்பர் மாதம் 8-ஆம் தேதி. பிறகு துறைகள் இந்த சவளக்கழிகள் இராசனது எட்டுப் பணங் குடுத்தவர்களுக்கு சவளக்கழி குடுப்போ மென்று துரைகள் திட்டம் பண்ண விடத்தில், நாங்கள் வலங்கையாருக்கு எப்போதும் செல்லு மானதை விலக்க முடியாதென்னா துரைகள் ஞாயம் விசாரித்து நமக்கு நடத்துவார்கள். நாங்கள் மெய்யானவர்களானபடியினால் சும்மா இருந்தோம்.

இடங்கையார் பணம் கொண்டுபோய்க் குடுத்துச் சவளக்கழி குடுக்கவேணு மென்று கேட்டார்கள். அவர்களுக்குச் செல்லாத காரியமானதினாலே எந்த விதத்திலாவது நமக்கு சவளக்கழி போது மென்ற புத்தியினாலே இப்படிப்பட்ட பணத்தைக் கொண்டார்க ளென்று துரைகளுக்குத் தானே தோன்றவேண்டிய ஞாயமே சரி யென்று சொன்னார்கள்.

இப்படிக்கு பவழைத் திருவேங்கட மென்று கையெழுத்து கைகோள் நாட்டாமை முத்து முதல் முதலாவது வலங்கை யாருக் குள்ளே சவளக்கழி பிடிக்கவும், வெள்ளைக் குதிரை தரவும் அஞ்சு செய்பு யாருக்கு சுதந்திரம் உண்டென்று கேட்டதற்கு சாலரி கட்டின வெள்ளைக் குடையும் வெள்ளைக் குதிரையும் அகம்படியர்,

இடையர் கவரை, கைக்கோளர், சேடர், சேணியர் இவர்களுக்கு சுதந்திர முண்டு. வெள்ளைக் குடை, வண்ணார், அம்பட்டர், .... இவர்கள் அஞ்சு செம்பு சாய்ச்சிக் காரரும் .. ,.. ..[1]

(2) இடங்கை யாருக்குள்ளே சவளக்கழி பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏரவும், வெள்ளைக் கொடை அஞ்சு (செம்பு) கட்டவும், சுதந்தர முண்டா வென்று கேட்டதற்கு செவளக்கழி, (வெள்)ளைக் குடை, இடங்கையாருக்கு சுதந்திர மில்லை. வெள்ளைச் சாலரில் லாததுமாய் செகப்பு குமிள் வைத்ததாய் கத்திரம் பிடித்துக் கொள்ளுகிறதற்கு வலங்கையார் குடுத்திருக்கிறார்கள்.

அஞ்சு செம்பு கம்மாளருக்கும் உண்டு. விகாதமும் நடந்து வந்துண்டென்று சொன்னார்.

ஊர் நன்றாயிருக்கச்சே ஆதிவீர செட்டி வீட்டில் கல்யாணத் திலே பந்தல் பத்திக்கொண்டபோது, துரைகள் முதலியாரையும், பாளையக்கார் முத்தியாபிள்ளையையும் அந்தக் கலியாணம் நடப்பிக்கச் சொன்னபோது, பாளயகார் முத்தியாபிள்ளை தம் முடைய குமாரனைச் சவளக்கொடி கழியும் கட்டினதுண்டா வென்று கேட்டத்துக்கு, அவர் சொன்னது, சவளக்கழி, வெள்ளைக் குடை, அகம்படியர், இடையர்கள், கோளர், கோமுட்டிகள், சேடர், சேணியர் இவர்கள் பிடிக்கலாம்.

சாலரோடே வெள்ளைக்குடை இவர்களுக்கு உண்டு. சால ரில்லாத வெள்ளைக்குடை வண்ணார், அம்பட்டர், .... பணி செயலாய் இவர்கட் குண்டு.

வெள்ளைக் குதிரைமேல் மேல் சொல்லப்பட்ட இரண்டு சாதிக்கும் உண்டு.

முச்சியர், கொசவர், எண்ணெய் வாணியர், அம்பட்டர் இவர்கள் நீங்கலாய் மைத்த வலங்கையாருக்கு முண்டென்று சொன்னார். அஞ்சு செம்பு யெல்லாருச்கு முண்டு.

---

1. தொடர் முற்றுறாது சுவடியில் உளது.

(2) இடங்கையாருக்குள்ளே சவளக்கழி பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏறவும், வெள்ளைக் குடை பிடிக்கவும், அஞ்சு செம்பு கட்டவும் யாருக்கு சுதந்திர முண்டென்று கேட்டதற்கு, சவளக்கழி வெள்ளைக் குதிரை இடங்கையார் ஒருவருக்கும் இல்லை.

வெள்ளைக் குடை சாலரில்லாமல், செப்புக் குமிள் போட்டதாய் கம்மாளருக்கு மாத்திரம் இந்தப் பட்டணத்தில் மாத்திரம் வலங்கையார் குடுக்க, அந்த கம்மாளருக்கு நடந்து வருறகிதுண்டு. அஞ்சு செம்பு கம்மாளருக்கு வெளியிலே இல்லை; இந்தப் பட்டணத்திலே கம்மாளர் கட்டி வருகிறார்கள். . . . . கண்டால் கலாபம் நடந்துகொண்டு வருகிறதென்று சொன்னார்.

(3) இடங்கையாருக்குள்ளே சவளக்கழி பிடித்ததுக்கு ஊர் நன்றாய் இருக்கச்சே விவாதம் நடந்ததுண்டா வென்று கேட்டதற்கு, "மகா ஸ்ரீ முசேதிம்மா நாளயிலே ஆதிவீர செட்டி வீட்டுக் கலியாணத்திலே பந்தல் பத்திக்கொண்டு போனவிடத்தில், முதலியாரும், பாளயகார முத்தியாபிள்ளையும் போயிருந்து, முத்தியாபிள்ளை குமாரனை குதிரை மேலே வைத்து, சவளக்கழி கலியாண மாப்பிள்ளை பெண்ணை சுத்தாமல், ஊர் கோலம் நடப்பித்தார்களெ"ன்று சொன்னார்.

"மேல் சொன்னதெல்லாம் உம்மாலே ருசுப்படுத்தக் கூடுமா?" என்று கேட்டதற்கு, எங்களுக்கு மேல் சொன்ன பிருதுகள் செல்லு மென்கிறதுக்கு இடங்கையார் சொல்லுகிறார். இடங்கையாருக்கு இல்லை என்றது சாதகம் சரவணபத்தர் கலியாணத்தில் சவளக்கழி பிடிக்க வேணுமென்று எத்தனம் பண்ணும்போது வலங்கையார் மரியாதை துரையாகிய முசெதிப்பினிரமவர்களிடத்தில் இரு திறவரையும் அயராத முறி எழுதி கையெழுத்துப் போடச் சொன்ன விடத்தில், அதற்கு வலங்கையார் கையெழுத்துப் போட்டார்கள்.

1776ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 23ந் தேதிக்கு துன்முகி வருஷம் ஆவணி மாதம் 21ந்தேதி ராஜமானிய ராஜஸ்ரீ சேலியேர் லியாத்தே நாந்தே போலீசு முசேபனால் அவர்கள் சமூகத்தில் புதுவைப் பட்டணத்தில் வன்னியர் நாட்டாமை நயினா தந்திரி சொல்லி, எழுதி வைத்த வாக்குமூலம்;—

இப்போ பத்து நாளைக்கு முன்னே பிச்சடுப்ப பரசுராமன் பெல்லாரி மகன் முத்துக்குமரனுங் கடைக்காற வெங்கடாசலமும் மூணுபேரும் வந்து, "செட்டிகள் நம்மை தங்களுடன் சேரவேணு மென்று கேழ்க்கிறார்கள். நீர் என்ன சொல்லுகிறீர்? என்று கேட்டார்.

அதுக்கு நான் சொன்னது, "தோணின நாள் முதல்கொண்டு நாம் நடந்துவந்தபடி நடவாமல் இப்போ நூதனமாய் செட்டி களுடனே கூடுவது, நமக்கு சரியில்லை; பொல்லாப்பு வரும். எனக்கிந்த விஷயம் சம்மதியில்லை. நீங்களு மப்படி செய்ய வேண்டாம். செய்தால் மோசம் வருமெ"ன்று சொன்னேன்.

இவர்கள் கும்பல் கூடினவிடத்திலே நான் இந்தப்படி சொல்லி யிருக்கிறேன். இதல்லாமல், அம்பட்டனுக்கு என்னுத்தரவில்லாமல் ...... வேண்டும் என்று சொன்னேன். பரசுராமன் வேறொரு அம்பட்டன் பள்ளிக்கூடத்தானை விட்டு கூட்டம் கூடிக்கொண்டு ......பண்ணினான்.

பிச்சக்குப்பரசுராமன் தம்பி சிதம்பரமும் வீரப்பாளையம் செல்லப்பனும் அளந்து சவரிராயனும் அய்யா மேஸ்திரி மகன் மூடி ......குட்டியப்பனும், அன்னப்பனும், அனுமந்தனும் மேல் சொல்லப் பட்ட பரசுராமன், முத்துக்குமாரன், வெங்கடாசலம் இவர்கள் செய்கிற யோசனைக்கு சம்மதிப்பட மாட்டோ மென்றும் எக்காலமும் இந்தப் புதுச்சேரியிலே இருந்தபடி இருக்கவேணும் என்றும் சொல்லுகிறவர்கள்.

இன்னம் இந்தக் குழப்பத்துக்கு சம்மதியானவர் சிலபேர் உண்டு அவளுடைய பேரை விசாரித்து, நாளன்றைக்கு எழுதிவந்து கொடுக்கிறோ மென்று நயினப்ப தந்திரி சொன்னான். இதிலே எழுதப்பட்டது மெய்யான காரியமென்று, மேல் சொல்லப்பட்ட சிதம்பர தந்திரியும், மூடியப்ப தந்திரியும், அனுமந்த நாயகனும் நாங்கள் சொன்னோம்.

அம்பட்டன் சம்மதி எழுதியிருக்கிறது மாத்ரம் நாட்டாமை நயினப்ப தந்த்ரி சொல்லக் கேட்டறிந்தோம்.

இது எழுதின நன்மைக்கு ஊர் கணக்கு சவரிராய நயனியப்பன் நெட்டெழுத்து:— இது நயினியப்பன் கைக்குறி.

இது குட்டியப்பன் கைக்குறி. அய்யா முடியப்பன்; அனுமந்த நாயக்கர்; இது அன்னப்பன் கைக்குறி.

24 ஆகஸ்டு 1776 ஆண்டு ஆகஸ்டு மாதம் 24-ஆம் தேதிக்குச் செல்லும் துன்முகி வருஷம் ஆவணி மாதம் 2-ஆம் தேதி புதுவைப் பட்டணம் பிராமசுரா சாதிபதி கோமுசேலுக்கு கொமுசேலு பேருமாய் போலீசு ஞாயம் ராயர் ராஜமான்ய ராஜஸ்ரீ முசேபனால் அவர்கள் சமுகத்தில், மாரியாத்தாள் கோவில் முத்துக்குமர தந்த்ரி சொல்லி, எழுதி வைத்த வாக்குமூலம்.

இப்போ பத்து நாளைக்கு முன்னே பிச்சகுப்பரசுராமனும் கடைக்கார வெங்கடாசலமும் யெல்லாரி மகன் முத்துக்குமாரனும் குசப்பாளயத்தார் சில பேருமாக என்னண்டையில் வந்து, "நாம் பிரிந்திருப்பானேன்; ஒரு மித்திருப்போ மென்று", சொன்னார்கள்.

"உனக்கும் எனக்கும் கூடாது" என்று சொன்னேன்.

"உடன்படிக்கைச் சீட்டில் கையெழுத்துப் போடுகிற தில்லையா?" என்று கேட்டார்கள். "அது கூடாது" என்று சொன்னேன்.

இதற்கு என்னோடே சேர்ந்திருக்கிற மற்ற பள்ளிகளை, "பிச்சக்குப்பப் பரசுராமன் கும்பலுக்கு அழைத்தால் போக வேண்டாம்; கையெழுத்துக் கேட்டால் கொடுக்கவேண்டாம்; வாழ்வுக்கும் சாவுக்கும் போகவேண்டா மென்று" சொல்வித்தேன்.

இதல்லாமல் அப்பு நயனியப்பன் வீட்டிலே பள்ளிகள் கும்பல் கூடியிருக்கையில் நானும் போயிருந்தேன். வலங்கையாருக்கும் இடங்கையாருக்கும் வந்த குடவைப்பற்றி, இடங்கையாரோடே கூடவேணுமென்று கும்பலிலே பேசினவிடத்தில் நானிருந்து, மைலாப்பூர் பள்ளிகளைப் பார்த்து, "மைலாப்பூரிலே குத்திக் கொண்டது, வெட்டிக் கொண்டிருந்தது உங்களுக்குத் தெரியும்,

"தாங்கள் இந்தப் பட்டணம் தோணின நாள்முதல், இது காரியத்திலே ஒரு சச்சரவு நடந்ததும் ஒரு வித்தியாசங்க ளிருந்ததும் நாங்களறியோம். உங்களுக்குச் சம்மதியானபடி சொல்லுங்கோள்; அப்படிக் கேட்டு நடந்துகொள்ளுகிறோமெ"ன்று சொல்லி எழுந்து வந்துவிட்டேன்.

என்க்கானால், அந்தப் பரசுராமனுடைய யோசனைக்குள்ளே கூட பரிச்சேதம் மனசு இல்லை. இந்தப் பட்டணத்திலே எப்போதும் நடந்தபடி நானும் நடந்துகொள்ள மனசே அல்லாமல் நூதனமாக நடத்தைக்கு உட்பட மனசில்லை.

இந்தக் கடிதாசியிலே எழுதியிருக்கிற விசேஷங்கள் நான் சொல்லி எழுதப்பட்டது.

ஆனாலும் எங்களூர் புறையாரைப்பற்றி நான் கையெழுத்துப் போட மாட்டேன். ஏனென்றால், சாவுக்கும் வாழ்வுக்கும் அவர்க ளுடந்தை வேண்டியதைப் பற்றி.

இந்தப்படி மாரியாத்தாள் கோவில் முத்துக்குமர தந்திரி ராஜமான்ய ராஜஸ்ரீ முதலியார் அவர்கள் திவாண் கந்தப்ப முதலியார் அவர்கள், ராஜமான்ய ராஜ ஸ்ரீ அவர்கள், திருவேங்கட பிள்ளை அவர்கள், ராஜஸ்ரீ மேலான கோமுசேலு துபாசியர் பிள்ளை அவர்கள், மரியதாசு பிள்ளை அவர்கள், முன்பாகச் சொல்லி எழுதின நன்மைக்குச் சாப்பி ஊர் கணக்கு சவரிராய நயனியப்பன் நெட்டெழுத்து.

கையொப்பம் மரிதாசன் ப்ராம்ஸில்பனால்.

29 ஆகஸ்டு 1776 ஆண்டு ஆகஸ்டு மாதம் 20-ந் தேதி புதுவைப் பட்டணம் மகாராஜ ராஜமான்ய ராஜஸ்ரீ முசொழன்றால் அவர்கள் ஸமுகத்தில் நம்பி நயினார் அவர்கள் சொல்லி எழுதி வைத்தது; இந்தப் பட்டணத்தில் நான் அறிந்தமட்டுக்கும் பள்ளிகள் வலங்கைத் தெருவிலே குடியிருந்து வலங்கைக்கும் இடங்கைக்கும் வந்த குடவைகளிலே தாங்கள் ஒரு கக்ஷியிலேயும் சேராமல் பொதுவா யிருந்தார்கள்,

இப்படிக்கு ஒழுங்காய் நடந்து வந்திருக்க பள்ளிகளிலே எவனாவது ஒருத்தன் நூதனமாய் கக்ஷி பண்ணி இடங்கையாரோடே சேரவேணும் என்று குழப்பம் பண்ணுவானேயானால் அவன் செய்கிறது அக்கிரமே சரி. அவனுக்கு ஆக்கினை வரவேண்டியதுஞ் சரி.

இது எழுதின் தன்மைக்கு ஊர் கணக்கு சவரிராய நயனியப்பன் நெட்டெழுத்து கையொப்பம் திருவம்பலம்.

30 ஆகஸ்டு 1776, புதுவைப் பட்டணம் மகாராஜ மான்ய ராஜஸ்ரீ எழன்றல் அவர்கட்கு சமூகத்தில் கடைக்கார வெங்கடாசல தந்த்ரீ சொல்லி எழுதி வைத்தது.

எங்கள் ......... சாதி. இந்த ஊரிலே நாங்க ளிருக்கிறது வல்லங்கை தெரு. நாங்கள் வலங்கை என்றும் இடங்கை என்றும் வித்யாசமா யிருந்ததை இது வரையும் நானறியேன்.

சில பள்ளிக ளிப்பாதா, தாங்க ளிடங்கை என்று, மதில் இடங்கையாரோடே சேர வேணுமென்றும் யோசனை பண்ணு கிறார்க ளென்று ஊரிலே சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

பிச்சகுப்ப பரசுராம தந்திரியார் வீட்டிலே கும்பல் கூடி இருக்கையில், செட்டிகளும் கம்மாளரும் வந்து, எங்களைப் பார்த்து, "நீங்கள் இடங்கைக்குப் பெரியவர்களா யிருக்கிறீர்களே" என்று சொன்னமாத்திரத்திலே நான் எழுந்து போய்விட்டேன்.

கம்மாளரிலே வந்தவர்கள் குமரப்ப மேஸ்திரியும் தட்டார சுப்பா பத்தனும், செட்டிகளிலே நல்லப்ப செட்டி மகன் தர்மசிவ செட்டியும் முத்துச் செட்டியும் வந்து கேட்டார்கள்.

நாட்டாமை பரசுராமனும் எல்லாரி முத்துகுமாரனும் நானுமாக, நாட்டாமை நயனியப்ப தந்த்ரீ வீட்டுக்குப் போய், "செட்டிகள் தங்களுடனே கூடச் சொல்லுகிறார்கள்; நீர் என்ன சொல்லுகிறீர்?" என்று கேட்டதற்கு, "அந்தச் சோலி நமக்குக் கவை இல்லை என்றும், கும்பல் கூட்டிப் பிறகு சொல்லுகிறேன்" என்றும் சொன்னார்,

இதல்லாமல், மேல் சொல்லப்பட்ட நாங்கள் மூணும் பேரும் கைக்கொள நாட்டாமை செல்லக்குட்டி முதலி வீட்டிலே போய், "செட்டிகளும் கம்மாளரும் வந்து போராடுகிறார்களே, நீர் என்ன சொல்லுகிறீர்?" என்று கேட்டதற்கு, நமக்கு அவர்களைத் தொட்டு என்ன கவை? நாம் வலங்கையிலேயு மில்லாமல் பொதுவா யிருக்கிறோமே, நமக்கேன் இது?" என்று சொன்னார்கள்.

பள்ளி உறமுறை ஞாயத்துக்கு ஒரு உடன்படிக்கைச் சீட்டு எழுதி, அவரவர் கையெழுத்துப் போட்டு, என்னையும் கையெழுத்துப் போடச் சொன்னார்கள்.

நானும் போட்டேன். பிறகு அந்தச் சீட்டைக் கிழித்துப் போட்டோமென்று உறமுறையார் சொன்னார்கள்.

இந்தச் சேதி சொன்னவர்கள் யார் என்று தெரியாது.

இப்படிக்கு இக்குறி[1] வெகாடசலம் கையெழுத்து.

இது எழுதினது ஊர்க்கணக்குச் சவரிராய நயினியப்பன்.

30 ஆகஸ்டு 1776, புதுவைப் பட்டணம் மகாராஜ ராஜமான்ய ராஜஸ்ரீ மெஊறால் அவர்கள் ஸமூகத்தில் கைக்கோள நாட்டாமைக் காரர் இதுக் கடியில், கையெழுத்துப் போட்டவர்களும் சொல்லி எழுதி வைத்தது.

பள்ளிகளிலே பிச்சகுப்ப பரசுராமனும் எல்லாரி மகன் முத்துக் குமரனும், கடைக்கார வெங்கடாசலமும், வீரப்பன் மருமகன் கனகசபையும் இந்த நாலுபேரும் நாட்டாமை செல்லக்குட்டி முதலி வீட்டுக்கு வந்து, நாட்டாமைக் காரரையும், பெரியதனக் காரரையும் அழைப்பிக்கச் சொன்னார்கள்.

அப்படி மேற்படி செல்லக்குட்டி முதலி வீட்டிலே நாட்டாமை முத்துமுதலி, குமாரசாமி முதலி, வெற்றிவேல் முதலி, சின்ன முதலி, பொன்னம்பல முதலி, முத்தம்பல முதலி, மொட்டீச முதலி,

---

1, தக்குறி என்று படிக்கலாம்

கலிதீந்தா முதலி, இவர்க ளெல்லோரும் வந்து சேர்ந்திருக்கையில் ஷெடி பள்ளிகள் சொன்ன விசேஷம், "நாம் எல்லோரும் இடங்கை யல்லவா? வலங்கைக்கும் இடங்கைக்கும் கொடவை[1] வந்திருக் கிறதே; நாமெல்லோரும் ஒன்றுகூடிப் பேசவேண்டி யிருக்கிற தென்று" சொன்னார்கள்.

அதுக்கு, நாங்கள் சொன்னது, "எப்போதும் இந்தப் பட்டணம் தோணின நாள் முதல், இதுவரைக்கும் நாங்கள் வலங்கையோடே சேர்ந்து, எது காரியத்திலும் அவர்களோடே ஒத்து நடந்து வந்திருக்க இப்போது, நாங்கள் இடங்கை என்று புறப்படுவோமா?

"செஞ்சி முத்தப்ப செட்டி செத்துப்போய் தேரிலே செங்கரும்பும் இளநீரும் கட்டின இடத்தில் நாங்களும் உங்களிலே தேசமுத்த னென்ற பள்ளியும், படையாச்சியும் தடியெடுத்துப் போய் விழுந்து மரித்து, அவர் மனையிலே சொல்லி, அபராதமும் வாங்கி வைத்தோமே; முத்தியால் பேட்டையிலே செட்டி ஒருவன் வெள்ளைக் குதிரை ஏறிக் கொண்டு போனவிடத்திலே கைக்கோள் வரில் வேலாயுத முதலியும் ......களுமாய்க் கூடிக்கொண்டு போய் மரித்து அபராதமும் வாங்கி வைத்தோமே.

"நெல்லிக் குப்பத்திலே இந்த ஊர் கும்பினி வர்த்தகம் வெள்ளச்செட்டி குடியிருக்கச்சே தாரையிலே பஞ்சவர்ண விருது கட்டினா னென்று, ஊரிலே இருக்கப்பட்ட கைக்கோளவர் எல்லோரும் கூடி, ஒரு சாவனை செட்டி வீட்டிலே கழுத்தை அறுத்துப் பழிபோட்டு மறுத்தவிடத்திலே அவனுடைய ஆஸ்தி பாஸ்தி எல்லாம் முழுகிப் போய், இந்த ஊருக்கு வந்துவிட்டானே.

"இது எல்லாம் இப்படி நடந்திருக்க எங்களை இடங்கையிலே சேரச்சொல்லி, நீங்கள் கேட்கலாமா? நீங்கள் பள்ளிகள்; இந்த ஊரிலே எதுகாரியத்தினாலேயும் வலங்கையோடே பந்தமாய் உங்கள் தாண்டவப்பிள்ளை கோயில் காரியம் மத்ததெல்லாம் விசாரித்துக்கொண்டு வரவில்லையா? இத்தனை நாளு மிருந்தபடி நீங்கள் இருக்கவேணுமே யல்லாமல், நூதனமாய் இடங்கையிலே சேரவேணு மென்று சொல்லுகிறது யுக்த மல்ல வெ"ன்று சொன்னானாம்.

---

1. கொடவை – பூசல்

இது சரிதான் என்று ஒத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

இதுவன்னியில், நாங்களும் இதுவரையும் இருந்தபடியே வலங்கைக்குள்ளே இருப்போமே யல்லாமல், இடங்கைக்குள்ளே ஒரு காலாகாலங்களிலேயும் சேரத் தக்கதில்லை என்று எழுதி வைத்துக் கையெழுத்துப் போட்டார்கள்.

இதிலே மூன்று மொழி கிறுக்கப்பட்டிருக்கிற தென்று எழுதி யிருக்கிறது. இது எழுதின தன்மைக்கு ஊர் கணக்கு சவரிராய நள்னியப்பன் நெட்டெழுத்து.

கையொப்பம் முத்துக்குமரன், செல்லக்குடி; இக்குறி வெற்றி வேலன்; இது பொன்னம்பலம்; கைக்குறி, முத்தம்பலம், ஆண்டி யப்பன், மொட்டையிரிசன், இது சின்னமுத்துக் கைக்குறி.

30 ஆகஸ்டு 1776 ஆண்டு புதுவைப் பட்டணம் மகா ராஜமான்ய ராஜஸ்ரீ ழென்றலவர்கள் சமூகத்தில் எல்லாரி முத்துகுமாரன் சொல்லி எழுதிவைத்தது:-

இந்தப் பட்டணத்திலே பள்ளிகள் வலங்கை என்றும், இடங்கை என்றும் ஒரு வித்தியாசமும் இதுவரை உண்டாய் நடந்ததில்லை எனமடக்கும் பரசுராம தந்த்ரீ சொன்னபடி நடந்து கொள்ளுவேன்.

"எங்களூர் முறையிலே வலங்கை இடங்கை சம்மதிக்கு ஒரு சீட்டு பிறந்தது. அதிலே பரசுராம நாட்டாமைக்காரன், என்னை கையெழுத்துப்போடச் சொன்னார். நானும் கையெழுத்துப் போட்டேன். அந்தச் சீட்டு நாட்டாமை பரசுராம தந்த்ரீ கிட்ட இருக்குது.

"செட்டிகள் கம்மாளர் வந்து பரசுராம நாட்டாமைக் காரருடனே பேசுவார்கள். அது நானறியேன். பரசுராம தந்திரியும் கடைக்கார வெங்கடாசலமும், நானும் கைக்கள நாட்டாமை செல்லக் குட்ட முதலிகிட்ட போய், செட்டிகள் வந்து, எங்களைத் தங்க ளோடே வந்து சேரச்சொல்லி கேழ்க்கிறார்களே, நீங்கள் என்ன சொல்லுகிறீர்க ளென்று கேட்டோம்.

''இதுவரையிலும் நாமெப்படி இருந்தோமோ, அப்படி இருக்கிற தல்லாமல், அவர்களோடே சேரவேண்டிய தென்ன சுவை என்று சொன்னார்கள். இதல்லாமல், நாங்கள் மூணுபேரும் எங்கள் நாட்டாமை நயினப்ப தந்திரி வீட்டிலே போய் செட்டிகளும் கம்மாளரும் தங்களுடனே வந்து கூடச் சொல்லிக் கேட்கிறார்களே, நீ ரென்ன சொல்லுகிறீரென்று கேட்டதற்கு, நாம் வலங்கைத் தெருவிலே குடியிருக்கிறோமே, வீட்டைப் பிடுங்கிக் கொண்டு, எங்கே போகிறதென்றும், நீங்கள் சொல்லப்பட்ட யோசனை இது வரையிலு மில்லாதபடியினாலே, எனக்குப் பரிச்சேதம் சம்மதியில்லை என்று சொன்னார்கள்.

''இது காரியத்திலே வந்து பேசினவர்கள், செட்டிகளில் தர்மசிவ செட்டி, சிதம்பர மேஸ்திரியும் பின்னையும் சிலபேர் வந்து பேசினார்கள். செட்டிகள் ஒரு உடன்படிக்கை எழுதி, எங்களுக்குக் காண்பிப்பார்கள்.. அதுக்கு நாங்கள் சொன்னது. ''பத்து உறமுறையும் சம்மதிக்கட்டும், பிறகு வாங்கிக் கொள்கிறோ மெ''ன்று சொன்னோம்.

''இந்தச் சீட்டு கொண்டுவந்து காண்பித்தவர்கள் தர்மசிவ செட்டி செட்டிகள் எழுதிக் காண்பித்த உடன்படிக்கைச் சீட்டிலே சென்னைப் பட்டணத்து ஒப்பந்தம் உங்களுக்கு இவ்விடத்திலே நடப்பிக்கிறோ மென்று எழுதியிருந்தது.

''இது எழுதினது ஊர் கணக்கு சவரிராய நயனியப்பன்.

கையொப்பம், முத்துக்குமரன்.

1776-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதி புதுவைப் பட்டணம் மகாராஜ ராஜமான்ய ராஜஸ்ரீ முசொழன்றால் அவர்கள் சமூகத்தில் இந்தப் பட்டணத்திலும், இதை அடுத்த கிராமங்களிலும் இருக்கிற பள்ளிகள் - எழுதி, கையெழுத்தும் போட்டுக் கொடுத்த அபராத முறி

முறிகொடுக்கு மிடத்தில், இந்தப் பட்டணம் தோணின நாள் முதல், இதுவரையிலும் பள்ளிச் சாதியார் வலங்கைத் தெருவென்றும் இடங்கைத் தெருவென்றும் வித்தியாஸ மில்லாமல் வீடுவாசல் கட்டிக்கொண்டு குடியிருந்து, சுப சோபன காரியங்களிலேயும்,

இந்த வித்தியாஸ மில்லாமல் வலங்கையோடும் இடங்கையோடும் கூடி கக்ஷி பிரிந்திராமல் பொதுவா யிருந்து வலங்கைக்கும், இடங்கைக்கும் குடவை வந்தபோது, ஒரு கக்ஷியிலும் சேராமல் இருந்து நடந்துகொண்டோம்.

இனிமேலும் ஒரு காலங்களிலும் கக்ஷி பிரிந்து வலங்கையிலேயும் சேராமல், இடங்கையிலேயும் சேராமல் இந்தமட்டுக்கும் இருந்தபடி நடக்கக் கடவோம்.

இது தப்பி யாதொருவன் நூதனமாய் கட்சி கூடி குழப்பத்துக்கு இடமாய் எங்களிலே யாதொருவன் நடந்துகொள்ளுவானே யானால் பட்டணத்திலே குழப்பங்களைப் பண்ணுகிறவர்களுக்கு பெறும் ஆக்கினை அவர்களுக்குத் தாங்களிடக் கடவது.

இந்தப்படிக்கு எங்கள் ராசியில் எழுதிக் கொடுத்த அபராத முறி.

இது எழுதின நன்மைக்கு புதுவை நகரம் ஊர் கணக்கு சவரிராய நயனியப்பன் நெட்டெழுத்து.

கையொப்பம், சிதம்பரம், சரவணன்.
இது கோல்காரன் கைக்குறி.
இது தோட்டக்கார கனகசபைக் கைக்குறி.
கணபதி, கோவிந்தன், முத்துக்குமாரன் கைக்குறி.

நாட்டாமை பரசுராமன், மாரியாத்தாள், முத்துக்குமாரன், நாட்டாமை நயனியப்பன், ஆட்கொண்டான், முதலியார் பேட்டை திருவேங்கடம், காரமணிக் குப்பம் ராமக் கவுண்டன், ராஜபாளையம் எறக்குட்டிக் கவுண்டன், அறியாங்குப்பம் சோலை பரசுராமன், அரியாங்குப்பம் பிச்சைபெருமான், முருங்கப்பாளையம் பூஞ்சோலை அய்யம்பெருமான், ஏழுகரை நாராயணக் கவுண்டன், தாண்டவ ராயன், எழுகரை குமரப்பக் கவுண்டன், ஏழுகரை அய்யம் பெருமாள் கவுணடன், குண்டிப்பாளயம் பூங்காவனம், முத்தாலுப் பேட்டை ராமபத்ரக் கவுண்டன், முத்தாலுப் பேட்டை இரிசப்பக் கவுண்டன், புதுப்பாளயம் சவரிமுத்து, ராயப்படையாச்சி, நல்லதம்பி, அரிசிப் பாளையம் நயினார் மலையப்பன், வீரராகவப் பெருமாள், அய்யா முடி வைய்யன், சீரப்பாளையம் செல்லப் பெருமாள், எழுத்துக்கார குட்டி அனுமந்த நாயக்கன்.

ராஜமான்ய ராஜஸ்ரீ சான்சி கனகராய முதலியார் அவர்களுக்கு வலங்கையார் எழுதிக் கொண்டது.

எங்களுக்கு பிருதென்று எண்ணப்பட்டதெல்லாம் செல்லு மென்றும் தமிழ்நாடெல்லாம் ப்ரஸித்தமாய் அறிவார்கள்.

இந்தப் பட்டணத்து இடங்கைக் கம்மாளர்களுக்கு செல்லாத பிருதுகளைப் பிடிக்கப் புறப்பட்டபடியினாலே எங்களுக்கும் அவர்களுக்கும் குடவைப்பட்ட விடத்திலே இடங்கையார் தங்களுக்கு பிருதுகள் உண்டென்று, காஞ்சீபுரத்து செப்பேட்டிலே காண்பிக் கிறோ மென்றும், மகாராஜ ராஜஸ்ரீ துரைகளுடனே சொன்னபடி யினாலே, இப்போ மகாராஜ ராஜஸ்ரீ சென்றால் அவர்கள் எங்களை யும் அவர்களையும் காஞ்சீபுரத்துக்குப் போய், பதினைந்து நாளை யிலே ருசுபண்ணிக்கொண்டு வரச்சொல்லி சொன்னார்கள்.

இடங்கையார் பதினைந்து நாள் போதாதென்றபடியினாலே பின்னையும் அஞ்சாறுநாள் அதிகமாய் உத்தாரம் கொடுத்தார்கள்.

மகாராஜ ராஜஸ்ரீ சென்றாலவர்கள் உத்தாரம் கொடுத்த படிக்கு காஞ்சீபுரத்திலே அவர்களுக்குள்ள பிருதுகளை ருசுப்பண்ணி வைத்தால் நாங்கள் ஒப்புக்கொண்டு, அத்தாக்ஷி வாங்கிக் கொண்டு வருகிறோம். அது தாங்க ளறிய வேண்டியது.

கையொப்பம் கனகசபை, கோபிக்க நாதன்(?), எல்லாச்சி, தேவரா செட்டி...... முதலியவர்கள்.

ராஜஸ்ரீ சானிகனகராய முதலியா ரவர்களுக்கு இடங்கையார் எழுதிக்கொண்டது:—

எங்களுக்குள்ளே கம்மாளர் கல்யாணத்திலே ஈட்டிக்கழி குடவைப்பட்டு கோமுசலிலே சொல்லுக்கொள்ளுகையில் கொமுசலிலே தீத்து, ஈட்டிக்கழி தம்பூரு நகபத்து குமராவாணம் யிதுமற்றது ராஜாக்களுதே யல்லாமல், உங்க ளிருவருடைய ஜாதி பிருதுகளல்லவே. நாங்கள் கொடுத்தபேர் பிடிக்கிறதே யல்லாமல், நீங்கள் யாரும் உங்கள் இச்சையாய்ப் பிடிக்கப் போகாதென்றும், கலியாணங்களுக்கு வேணுமென்றபோகும் கும்பினியாருக்கு 150 ரூபாய் கொடுத்து வாங்கிக்கொண்டு பிடிக்கிற தென்று,

கோமுசலிலே தீர்த்துக் கட்டளை யிட்டபடிக்கு, எங்கள் கையிலே வாங்கிக் கொண்டு, உங்களுக்குக் கொடுத்த விருதுகளை, வலங்கை யார் தடைபண்ணினதின் பேரில் துரை, வலங்கையாரை அழைத்து நீங்கள் தடைபண்ணின காரியமென்ன என்று கேட்டதற்கு, விருதுக ளெல்லாம் எங்களுதே யல்லாமல், யாருக்கும் கூடாதென்றும் காஞ்சிபுரத்திலே செப்பேடு பார்த்தால் தெரியும், இருவரையும், கூட்டி அனுப்பி வையுங்க ளென்று சொன்னபடியினாலே, அப்போ இந்தக் குடலை தீருகிற மட்டுக்குமே இருவரும் கலியாணம் மற்றது பிரபலமாய் ஊர்வலத்துடனே செய்யாமல், வீட்டுக்குள்ளே தானே செய்யச் சொல்லி, கோமுசலிலே திட்டம் பண்ணி இப்போ இரு வரையும் காஞ்சீபுரத்துக்குப் போகச் சொல்லி சொன்னபடியினாலே இருவரும் போகிறது.

வலங்கையர் செப்பேட்டிலே சகல யிருதும் தங்களுடையதென் கிறதற்கு ருசுபண்ண வேண்டியது.

ஏகமொப்பம் குட்டி செட்டி, அரமு செட்டி, குழந்தை செட்டி, அழகப்ப செட்டி, பொன்னப்ப ஆசாரி, தானப்பன், முத்தய்யன், கலவறாயன்.

1776 ஆகஸ்டு 30, புதுவை நகரிலிருக்கும் இடங்கைத் தலை வறாகிய வன்னிய நாட்டார் அவர்களுக்கு ஷெ யூரிலிருக்கும் நகரத் தார் ஆயிரவர்களும், பள்சளத்தார் அஞ்சு ஜாதியாரும் எழுதிக் கொடுத்த உடன்படிக்கை என்னவென்றால், தங்களுக்கும் எங்களுக்கும் நடக்க வேண்டிய ஒப்பு உடன்படிக்கைக் காரியங் களுக்கு பரசுராம நாட்டார் சாவடியிலே இருக்கிறபடியினாலே அவர் வெளியே வந்த உடனே தாங்களும் நாங்களும் ராசியாய்ப் பேசித் தீர்த்துக்கொண்டபடி எழுதிக் கொடுப்போமாகவும்.

இந்தப்படிக்கு எங்கள் ராசிக்கு எழுதிக் கொடுத்த உடன் படிக்கை.

இந்தச் சீட்டெழுதின நன்மைக்கு தூவான கணக்குப் பெரிய தம்பிப் பிள்ளைகை நெட்டெழுத்து.

கையொப்பம், குட்டை செட்டி, தொப்பைச் செட்டி, அழகிய மணவாளன், பொன்னப்ப செட்டி. முத்தழகப்ப செட்டி, குமரப்பன், பொன்னப்ப ஆசாரி, சரவணன், சின்னது ஆசாரி, சுக்கிரமணி.

இதற்குக் குறி சிதம்பர மேஸ்திரி.

கையெழுத்து, செல்லப்பன், தானப்பன்.

*1776 ஆகஸ்டு 25,* புதுவை நகரிலிருக்கும் இடங்கைச் சிம்மாசனத்துக்குக் கர்த்தரான நாகுவன்னிய நாட்டார் அவர்கட்கு, நகரத்தார், பஞ்சாளத்தார் எழுதிக் கொடுத்த பட்டைய சாதனம்.

இந்தப் பட்டிணம் தோன்றின நாள் முதற்கொண்டு, இது வரைக்கும் தங்களுக்கும் எங்களுக்கும் ஒருமை யில்லாதபடியினாலே வலங்கையாராலே வெகுசாய் அவமானப்பட்டு, தங்களிடத்தில் வந்து சொல்லிக்கொள்ளு மிடத்து, தாங்களும் அப்படியே இனி மேல் எப்பேர்ப்பட்ட காரியங்களுக்கும் நாம் நின்று நிர்வாகம் பண்ணிக் கொடுக்கிறோம் என்று சொன்னபடியினாலே, தங்களுக்கு நாங்களனைவரும் ஒருமித்து எங்கள் ராசியில் எடுத்த எழுதிக் கொடுத்த உடன்படிக்கை :

இடங்கைக்கும் வலங்கைக்கும் சச்சரவு வந்தால், அந்த சச்சரவு எந்தெந்த வேளை நடக்குமோ அதுகளுக்கு செல்லுமான செலவு நாங்களே கொடுத்து நடப்பிக்கிறோம்,

பின்ளையும் தங்களுக்கு வீடுவாசல் இடங்கையிலேயும் வலங்கை யிலேயும் பிரியாமல் கலந்திருக்கிறபடியினாலே அந்த வீடுகளுக்கு சேதம் வருகிற வேளையில் பட்டணத்துக்குள் பதில் மனை கொடுப்பார்க ளல்லவா? அந்த மனைகளிலே கட்டு கூலி வித்யாஸங்களுக்கு ஒத்துக் கொடுக்கிறோம்.

பின்னையும், நாட்டாரவர்களுக்கு வருஷம் ஒண்ணுக்கு தலைக் கட் டொண்ணுக்குப் பணம் அஞ்சு கொடுக்கிறது.

சங்கராந்தி பண்டிகைக்கு சிலவுக்கு வராக னிருபதும், கரநவமி பண்டிகைக்கு வராகன் பத்தும் கொடுக்கிறோம். பின்னையும்

நன்மை தீமை யாதொரு சுவை காரியங்களுக்கு அறிந்து நடந்து கொள்கிறோம். அரண்மனை யிடத்தில் இடங்கைத் தூர்வாசி யில்லாதபடியினாலே, அதுக்கு ஒருவரை தங்களுக்குள்ளே ஏற் படுத்தி வைத்து, வலங்கைத்தூர் வாசிக்கு நடக்கிற மரியாதை நடப் பித்துக் கொடுக்கிறோம்.

பஞ்சாளத்தார் கேட்ட ஆயதமுஸ்தீபு தடை இல்லாமல் செய்து கொடுக்கிறது. பின்னும் தங்களுடனே கூட்டியிருக்கிறது. இந்தப் படி நாட்டாரவர்களுக்கு நகரத்தார் பஞ்சாளத்தார் சந்திர சூரியாள் உள்ளமட்டும் நடந்து கொள்ளுகிறோ மென்று, எழுதிக் கொடுத்த பட்டைய ஸாதனம்.

1690 நவம்பர் 8-ந்தேதி, முசே மருத்தேனவர்கள் உத்தாரப் படிக்கு சாவந்தோ வாளோசிப் பண்டிதக், மொறாய பண்டிதர், வீட்டுளோசிப் பண்டிதர், குழந்தையப்ப முதலியார், சருவப்ப நாயகர், தேவரா செட்டியார், அம்பலத்நாடி பிள்ளை, டுப்பா பிள்ளை, ராமனாதன், கலப்பைச் சித்தா ரெட்டியார், திம்மி செட்டியார், பெத்துமாரச் செட்டி, வான்மீக முதலி நாட்டான், லெக்ஷ்மணன் செட்டியார், கவரைனாரி செட்டியார், வெள்ளாஞ் செட்டி, சின்னு செட்டி, மற்ற சாதியா ரெல்லோரும் இந்தப் பட்டணத்துக்குள்ளிருப்பவர்கள் எல்லோரும் மன ராசியாய், இந்தப் பட்டணத்துச் செட்டிகள் வர்த்தகருக்கு எழுதிக் கொடுத்தது.

அவர்களுக்கு மூணு தெரு இந்தப் பட்டணத்திலே கட்டிக் கொள்ளுகிறது. அது எங்கே என்றால், கோட்டைக்கு வடபுறம் மணக்குளத்துக்குக் கிழக்கு; அந்த மூணுசெட்டித் தெருவிலே தங்கள் கலியாணச் சடங்கு செய்துகொள்ளலாம். உள்கோட்டை சுற்றி வரலாம். கோவிலும் குளமும் எல்லோருக்கும் பொது.

வலங்கையார் தங்கள் சிலாக்கியங்களுடனே சடங்குக்கு அந்தத் தெருவிலே வரக்கூடாது. இந்தப்படிக்கு எங்கள் மனராசியில் எழுதிக்கொடுத்த உடன்படிக்கை.

இது சந்திர சூரியாள் உள்ளவரைக்கும் மாத்திரம் பரம்பரை யாய் நடக்கக் கடவது.

இதற்கு யாதாமொருவர் தடை செய்வார்களே யானால், கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலே போகக் கடவார்களாகவும்

அன்றியும், கும்பினியாருக்கு 1000 வராகன் அபராதம் கொடுத்து சகலமான பேர்களாலேயும் பிறம்பு தள்ளப்படுவானாகவும்.

மகாராஷ்டிரத்தில் மூன்றுபேர் கையொப்பம்; தெலுங்கில் கையொப்பம்; பின்னும் மூன்றுபேர் தமிழில். குழந்தையன், அம் பலத்தாடி, சாமிசெட்டி, கோமுட்டி, குப்பு செட்டி, பெத்து வணிக நாதன், வசந்த குப்பன், தேவராசு, ராமன்.

1730 ஜனவரி 14-ந்தேதி, அகிலாண்டகோடி ப்ரம்மாண்ட நாயகரான சுவாமியார் கோவில் காரியங்களுக்கு வலங்கையாரும் இடங்கையாரும் கூடி, உடன்படிக்கை பணணிக் கொண்டார்.

பரமவேத கிரீசுவர சுவாமியார் வரதராஜ சுவாமியாரும் மகா நவமி சங்க்ரமம், இந்த இரண்டு பண்டிகைக்கும் பாரி வேட்டை போகையில், செட்டித் தெருவில் கும்பினி வர்த்தகர் கிடங்கில் நாராசத்தில் வேதகிரீசுவரர் எழுந்தருளி வருகையில், காளத்தி ஈச்பர சுவாமி மேளம் கொட்டி கொடி கொடிசீலை மகர தோரணம் வெண்சாமரையுடனே கூட எழுந்தருளி பாரிவேட்டை போய் வருகிறது.

பாரிவேட்டை போய் வருகையில், வலங்கைத் தேவடியார்கள் ஆடல் பாடல் ஒன்றே யல்லாமல், இடங்கை தேவடியாக்கள் ஆடல் பாடல் கவையில்லை.

இடங்கைத் தேவடியார்கள், நாலுபேர் போலே வேடிக்கை பார்க்க வருகிறதே யல்லாமல், மத்தளம், கைமணி அடிக்கக் கவை யில்லை.

பின்னும், ஒரு சடங்குகளுக்கும் வரக் கவையில்லை. பாரிவேட்டை போயிருக்கிற போதும், வருகிறபோதும் வேதகிரீஸ் வரரும் வரதராஜப் பெருமாளும் காளத்தி ஈச்பரரும் சமானமாய் கும்பினி வர்த்தகம் கிடங்கு நாராசத்தில் சமீபமாய் வருகையில்

வேதகிரீசுவரர் வரதராஜப் பெருமாள் இப்புறம் வந்தபிறகு காளத்தி ஈச்பரர் செட்டித்தெரு வீதியில் திரும்பின பிறகு இடங்கைத் தெரு இரண்டு தெருவிலேயும் தச்ச நமச்சிவாய வீட்டுத் தெரு வழி ஆடல் பாடல் நடப்பித்துக் கொள்ளுகிறது.-

வரதராஜப் பெருமாள் எழுந்தருளி வருகையில் காளத்தி ஈச்வரர் எதிர்ப்பட்டால் நாராசத்தில் காளத்தி ஈச்வர ரில்லாமம் அப்புறம் எழுந்தருளுகிறது.

காளத்தி ஈஸ்வரர் எழுந்தருளி வருகையில் வரதராஜப் பெருமாள் எழுந்தருளுகிறது. மற்றப்படி, அமாவாசை விசேஷ தினங்களிலே காளத்தி ஈசுவரரைக் கோவிலிலேயும் கோவில் சுற்றி இருக்கும் செட்டித் தெருவிலேயும் எழுந்தருளும்படி பண்ணிவைத்து சம்பிரமமாய் நடப்பித்து வைத்துக்கொள்ளுகிறது.

மகாவருமானத்தைப் பொதுவாய் வாங்கி வேதகரீஸ்வரர் வரதராஜப் பெருமாள் பங்கு மூன்றும் காளத்தி ஈசுவரர் ஒரு பங்கும், இந்த நாலு பங்கிலேயும் அனுபவித்துக் கொள்ளுகிறது.

இந்தப்படி, சம்மதித்து வலங்கையார் இடங்கையானவரும் கூடி, உடன்படிக்கை பண்ணிக் கொண்டோம்.

செந்தாமரை கையெழுத்து.

இந்த சம்மதியில் யாதொருவர்கள் கையிறக்கையால் வஞ்சனை, மனவஞ்சனை பண்ணினால் தோஷத் துரோகத்திலே போகக் கடவோகாகவும்.

இவர்கள் சம்மதியில் கணக்கு செந்தாமரை கையெழுத்து.

கையொப்பம், தில்லையம்பல முதலி, சிகப்பு முதலி, பெத்துச் செட்டியார்.

இது வெங்கடபதி செட்டி கைநாட்டு.

தானப்படி செட்டி, பட்டகுட்டி, இரிசப்ப முதலியார், முத்தப்பன், நமசிவாய செட்டி, அருணாசல செட்டி, சீயாள முத்தப்பன், சிதம்பரம் அரும்பாத்தை முத்தப்பன், ஆதிவராகம், தெய்வநாயகம், வெங்கடபதி, இது கைக்கவும்(?)

முத்தப்ப முதலி கைநாட்டு; கருத்தான் சிதம்பரம், வஸந்த செட்டி, நல்லா செட்டி.

இது குமரப்ப முதலி கைநாட்டு; முத்துக்கிருஷ்ணன், ஆறுமுக கைநாட்டு.

இது தாண்டவராய முதலி கைநாட்டு; நாச்சியப்பன், தானப்ப ஆச்சாரி, வேலாயுதன்.

இது செட்டி கொப்பான், குருவப்ப செட்டி கைநாட்டு, சின்ன இரிசப்பன்.

இது குச அங்கன் கைநாட்டு

1776 நவம்பர் 30-ந்தேதி, புதுவைப் பட்டணம் பிரான்ஸ் ராசாதிபதி காரியத்துக்கு கர்த்தர் மகாராஜமான்ய ராஜஸ்ரீ ஜெனறல் முசெயலாசு அவர்கள் மகா ராஜ ராஜ ஸ்ரீ இந்தத்தரம் முசெகுறிசி அவர்கள் போலீசு ஞாயம் முஸேபனால் அவர்கள் கப்புஸ்த கோவில் சேஷராகிய ஜெபஸத்து சுவாமியாரவர்கள் தமிழ் விசாரிப்பு வெர நெத்து சுபாயாரவர்கள் ஸமுகத்தில், வலங்கையாரைக் கேட்ட வாக்குமூலம், வெள்ளாள கனகசபை முதலியா ரவர்கட்கு மூலம்.

முதலாவது, வெள்ளாளருக்குள்ளே சவளக்கிழி பிடிக்க சுதந்திர முண்டா வென்று கேட்டதற்கு, உண்டென்று சொன்னார்.

இரண்டாவது, ஊர் நன்றாயிருக்கச்சே யுங்கள் கலியாணத் திலே விகாத மில்லாமல் சவளக்கிழி பிடித்ததுண்டா? வென்று கேட்டதற்கு, விகாத மில்லாமல் சவளக்கழி பிடித்த துண்டென்று சொன்னார்.

மூன்றாவது, வலங்கையர்ருக்குள்ளே சவளக்கழி பிடிக்க சுதந்திரம் யாருக்குண்டென்று கேட்டதுக்கு, வெள்ளாளர், அகம்படியர், இடையர், கவரை கோமுட்டி, கைக்கோளர் இவர்கள் சவளக்கழி பிடிக்கலாம்; சுதந்தரம் உண்டென்றார்.

4வது, வலங்கையாருக்குள்ளே வெள்ளைக்குடை பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏறவும், அஞ்சு செம்பு கட்டவும், யாருக்கு சுதந்திர முண்டென்று கேட்டதுக்கு. வெள்ளைக் குதிரை, வெள்ளாளர், அகமடியர், இடையர், கவரை, கோமுட்டி, கைக்கோளர், இவர்கள். ஏறச் சுதந்திர முண்டு.

மற்ற வலங்கையார் ஏறக் கூடாது; . . . ஏறலாம்.

5வது, வெள்ளைக் குடை சாலருடனே வெள்ளார், அகமுடியர், இடையர், கவரை, கைக்கோளர் இவர்கள் பிடிக்கலாம். வண்ணார், அம்பட்டர், . . . இவர்கள் சாலரில்லாத வெள்ளைக்குடை பிடிக்கலாம்; செம்புச் சம்மதி வழக்க மில்லை.

புதுச்சேரியிலே அஞ்ஞானிகளா யிருக்கிற ... அஞ்சு செம்பு கட்டலா மென்று சொன்னார்.

5வது இடங்கையாருக் கெல்லாம் வெள்ளைக் குதிரை ஏறவும், வெள்ளைக் குடை பிடிக்கவும்; சவளக் கழி பிடிக்கவும், அஞ்சு செம்பு கட்டவும் சுதந்திர முண்டா? வென்று கேட்டதற்கு, சவளக்கழி செட்டிகளுக்கும் கம்மாளருக்கும் சுதந்திர மில்லை. சாலரில்லாத வெள்ளைக் குடை கம்மாளருக் குண்டு; வெள்ளைக் குதிரை இடங்கையார் ஒருவருக்கும் இல்லை.

புதுச்சேரி கம்மாளருக்கு அஞ்சு செம்பு நடக்கிறது. செட்டிகளுக்கு ஒரு செம்பு உண்டென்று சொன்னார்.

(6) மேல் சொன்னதுக் கெல்லாம் உம்மாலே சாதகம் விடுகிறதற்குக் கூடுமா? வென்று கேட்டதற்கு அவர் சொன்னது:

ஈட்டிக்கழி பிடித்ததற்கு எங்களுக்கு சுதந்திர முண்டென்கிறது. இடங்கையார்தானே எங்களுக்கு சாக்ஷி உலகப் பிரசித்தமா யிருக்கிறது. செட்டிகள் ஊர் பிடிபடுகிறதுக்கு முன்னே சவளக்கழி பிடித்ததில்லை.

அழகிய மணவாள செட்டி வீட்டுக் கலியாணத்திலே, பந்தல் பத்திக்கொண்டபோது, கனகராய் முதலியாரும் பாளைக்கார முத்தய்யா பிள்ளையும் போயிருந்து, பந்தல் போடுவித்து, அவர் களைக் குதிரைமேல் வைத்து, சவளக்கிழி பிடித்து வந்த துண்டென்று சொன்னார்.

7லது தேச மெங்கும் வெள்ளாளர் வலங்கையிலேயு மில்லாமல் இடங்கையிலேயு மில்லாமல் பொதுவா யிருக்கிறதென்று நமக்குச் சேதி தெரிந்திருக்கச்சே நீங்கள் வலங்கையிலே சேர்ந்த தென்ன வென்று மகராஜமான்ய ஸ்ரீமுசேலாக அலர்கள் கேட்க தேசங் களிலே வெள்ளாளர் தெரு கக்ஷியிலேயும் சேராமல் பொதுவா யிருக்கிறது மெய்தான், புதுச்சேரியிலே எந்தவிதத்திலேயோ கக்ஷி கூடிப்போயிருக்கிறது தெரியாதென்று சொன்னார்.

இதிலே ஆறு மிருக்கிறதென்று எழுதி இருக்கிறது.

கனகசபை என்று கையெழுத்து.



